யிட்டு, 'ஒரு மண்கட்டியினுல் செய்யப்பட்ட மொந்தை, பானை, மடக்கு முதலானவைகள் மண்கட்டியாயிருந்த வஸ்துவை விட வேறல்லவாகையாலே மண்கட்டியை யறிந்ததே அவற்றை யெல்லா மறிந்ததாகிறதே. அதைப் போலவே, ப்ரம்ம ஜ்ஞானத்தினுலே சேதநாசேதநமயமான உலகு முழுதும் உணர்ந்தபடியாகிறது என அதனை நிரூபித்து, ஆகையாலே மொந்தை முதலானவை உண்டாவதற்கு முன்னே மண் ஒன்றே யிருந்ததுபோல் இந்தச் சேதநாசேதந ப்ரபஞ்சம் பிறப்பதற்கு முன்னே ஒரே வஸ்து ஒருவித பேதமு மின்றி யிருந்ததெனச் சொல்லி,

அது வொன்றே, மண்ணென்றே மொந்தை முதலியனவாக ஆவது போல், தானும் பலவாக ஆகவேண்டுமென நினைத்துத் தன்னை உலகமாக ஸ்ருஷ்டித்துக்கொண்டதெனவும் கூறி,

'ஆகையாலே இவ்வுலகெல்லாம் அதுவே; அதுவே உண்மையானது; அதுவே ஆத்மா; அது நீ'

என்று ச்வேதகேது என்ற மகனைக் குறித்து அவன் தகப்பனுர் கௌதமர் உத்தாலகர் சொன்னதிலிருந்து பிரம்மமே பல ஜீவன்களாக ஆனமை விளங்குகின்றதே.

ஆனுல் நிர்விகாரமான ஒரு ப்ரம்மம் பலவாக எங்ஙனமாகுமெனக் கேள்வி பிறக்கும். அதற்குப் பரிஹாரம்,—

சாங்கரமதத்தைப் பின்பற்றி, 'உண்மையில் பலவாகவில்லை. மாயையினுல் அங்ஙனம் தோற்றுகிறது மாத்திரம்' என்னலாம்.

அல்லது பாஸ்கர மதத்தைப் பின்பற்றி, 'ஒரே ஆகாயமானது மடங்களாலும் மாடங்களாலும் மற்ற வஸ்துக்களாலும் பல பாகங்களாகவானது போலிருக்கின்றதே, அது போலே ஒரே ப்ரம்மம் அந்தந்த தேவ—மனுஷ்யாதிகளான பல தேஹங்களெனப்படும் உபாதிகளாலே பிரிக்கப்பட்டுப் பலவாயிருக்கின்றது' என்னலாம்.

[உபாதியாவது ஒரு வஸ்துவுக்கு இயற்கையி லில்லாததைத் தன் சேர்க்கையால் ஏற்படுத்தும் வஸ்துவாம். ப்ரம்மத்திற்கு இல்லாத பன்மையைத் தேஹங்கள் தம் சேர்க்கையாற் செய்துவைப்பதால் தேஹங்கள் உபாதி யெனப்படும். ஸ்படிகத்திற்கு இல்லாத சிவப்பை அருகில் வைக்கப்பட்ட செம்பருத்திப்பூ எண்பிப்பதால் அந்தப்பூ உபாதியாம். ஜீவனுக்கு இயற்கையி

வில்லாத துக்கம் முதலியன காமத்தினாலேற்படுவதால் கர்மம் உபாதியாகிறதென்றவாறு காண்க:]

ஆகையால ப்ரம்மம் தவிர வேறொரு வஸ்துவும் ஸ்ருஷ்டிக்கு முன் கிடையாதென்றே கொள்ளவேண்டும் என்றவாறு.

இது யுக்தமன்று. 'அறிவுள்ளவன், அறிவிலி; ஈசவரன, ஈச்வரத்தன்மையற்றவனென விருவரும் பிறவியற்றவர்', 'அழிவற்ற சேதநனை யாவனொருவன் அழிவற்ற பல சேதநர்களின் மனோரதங்களைப் பூர்த்திசெய்கிறான்' என்ற வேதங்கள், ஜீவர்கள் பிறக்காதவர்கள், அழியாதவர்கள், பலர் என ஓதுகின்றனவே. குடம் மடக்கு முதலியன உண்டாவதற்கு முன் ஒன்றாகவே யிருந்த மண்ணுக்குப் பின்பு பன்மை யேற்பட்டது போல் ஸ்ருஷ்டிக்கு முன் ஒன்றே யிருக்க அந்த ஒரு ப்ரமமத்திற்கே ஸ்ருஷ்டிக்குப் பிறகுப் பலவகை ஜீவர்களானமையைப் பற்றிப் பன்மையா மென்னில், ஜீவர்கள் பிறவியின்றியும் அழியாமலும பலவாக இருப்பதாகச சொன்னது முரண்படுமே.

ஸூத்ரவிரோதமுமாம்,-'ப்ரமமமே ஜீவர்களாகச் சொலலப்படுவதால், அதுவே தேவர்கள், மனுஷ்யர்கள் என்றவாறு பலவாக முடிவதால் தனக்குத்தான் ஹிதத்தைச்செய்துகொள்ளாமல் அஹிதத்தையே செய்துகொண்டு அவஸ்தைப்படுகிறதென்றதாமே' என விஞவை யெழுப்பி, 'ஜீவர்களைவிட வேறாகவே சொலலப்பட்டிருப்பதால ப்ரம்மமென்றது மேலானதே' என்றார் ஸூத்ரகாரர்.

அங்ஙனமே "ஈசவரன் சிலர்க்குச சிறநத ஸுகமும், சிலர்க்குத துன்பமுமிருக்கும்படி தேவர் மனுஷ்யர் என்றாற்போல உயர்நதனவும தாழ்ந்தனவுமான பிறவிகளை யமைப்பதால பக்ஷபாதமும் தயை யற்றமையும் அவனுக்கு இசைந்தபடியா மென்னவேண்டா. அவரவர்கள் முன் செய்த கர்மத்தைக் காரணமாக்கி அதற்குத தக்க பலனை யன்றோ அவன் அளிப்பது" என்றார்.

மேலும், "ப்ரளயகாலத்திலே எலலாம் பிரம்மமாயொன்றாய்விட்டபடியாலே கர்மமே யில்லை யென்னவேண்டா. கர்மமென்பது அநாதியானதாலே அதுவு மிலலை யென்றபடி ஒன்றானமையைக் கூறமுடியாதே. ஜீவர்களை யநாதியாய் ப்ரம்மத்தை விட வேறாக இசைந்து கர்மமும் அநாதியென்பார்க்கு ப்ரளயத்தில ஒன்றானமையும பொருந்தும். ஜீவர்களும் அநாதியாயிருப்பவரென்றது நன்கு ப்ரமாணங்களில விளங்குகிறது" என்றாரே.

or room is destroyed, the atmosphere therein becomes one with the general atmosphere) so also the one *Brahman* becomes many, conditioned by *Upādhis:* the various material bodies of *Dēvas*, mortals, etc."

[*Upādhi* is a thing which by its association with another thing creates in the latter a condition which it did not possess before. Hence the various bodies or forms are the *Upādhis* of *Brahman*, for they bring about in *Brahman* a condition (a division or limitation) which is not its real or natural characteristic. For example, if a coloured flower is brought near certain spectrum glass it creates the impression of colours, the flower is then called *Upādhi*. As *Jeeva* is not by its nature affected by pleasure or pain, but still owing to his *Karman* he is affected, *Karman* becomes the *Upādhi* of *Jeeva*.]

Hence it is argued that it must be taken that before creation, there was nothing else, but *Brahman*.

This (argument) is not correct. For, the *Vēdas* proclaim that *Jeevas* have no beginning or end and that they are many. If it is said that just as the mud, which was one before it was made into pots and pans, becomes many when the pots and pans come into existence, so the *Brahman* also was one in the first instance and became many later, this argument is opposed to the position postulated that *Jeevas* have no beginning, no end, and are many.

It will be against *Sootras* also:

" In that case, if it is said that the same *Brahman* is *Jeeva* and that One became Many, it will lead to this difficulty that *Brahman* does not seek Its own welfare, i.e., what is good and beneficial, but seeks also ill or pain for Itself, and thus brings on itself (a load of) suffering. It is on this account the *Sootrakāra* posited that *Brahman* is something different (some thing high.)

To the same effect also is this passage, "*Īswara* grants to some pleasure and inflicts on others pain;

gives to some the superior body of *Devas* etc., and to others the ordinary body of mortals etc." This being so, the above supposition will lead to attributing to God partiality and want of mercy or compassion. This is not proper, for it is the accepted saying (truth) that He gives to each his deserts (body etc), taking into consideration his previous *Kaṛman*. Nor can we accept the position that "at the time of *Pralaya* (Floods) all *Karmans* are destroyed on account of their having become one with Him." For *Karman* is said to be without beginning; and (if that is so) it can not be said that it has become one (with God).

Even if we posit that *Jeevas* are different and distinct from *Īswara*, and *Karman* is without beginning, the statement that the Universe is one with *Brahman* at the *Pralāya* (Floods) may be explained and reconciled by the fact, that this relates to a stage when the transformation into Names and Forms has not taken place. It is clearly laid down in *Sṛutis* and *Smṛtis* that *Karman* is beginningless and the *Ātman* is never born and is without death. The argument advanced by the other side is self-contradictory, for it is agreed by all *Vedāntins* that there is distinctness of *Jeevas* from *Īswara*, till such time as they attain *Mōksha*.

Since it is necessary to interpret the words *Ēkam Ēva* without doing violence to *Vēdas*, *Sootras* and the belief accepted by the opponent, the word *Ēkam* should be construed as referring to a stage when *Brahman* had not attined distinct Names and Forms and the word does not exclude the positive existence in subtle form of the Various *saktis* (powers,) such as, *Chētana* and *Achētana* before their assuming Names and Forms. In this way only is the reconciliation possible.

Though it is that they accept numerous Jeevas during the Floods, and explain it as caused either by Ignorance according to *Ṣankara* or *Upādhi* according to *Bhāskara*, it leads to this difficulty that the Defects of Ignorance etc., and of pain and pleasure etc., become atributable directly to *Brahman*.

ஆத்மா பிறப்பதில்லை யென்பதும் அதன் அழிவற்றமையும் வேதவாக்யங்களினின்று விளங்குமெனவு மறுதியிட்டார்.

நீங்கள் கூறுவது உங்கள் கொள்கைக்கும முரணானது. 'மோக்ஷத்திற்கு முன் அநாதியாகவே ஜீவர்கள் வெவ்வேறாயிருக் கின்றனர்' என்று தானே எல்லா வேதாந்திகளும் இசைந் திருப்பது.

ஆகையால் வேதம், ஸூத்ரம், தம் கொள்கை எல்லா வற்றிற்கும் முரணாகாதபடி 'ஸ்ருஷ்டிக்கு முன் ஒன்றே' என்ற தற்குப் பொருள் கூறவேண்டியிருப்பதால், 'ஒன்றே' என்றது தனித்தனியே நாமங்களும் உருவங்களும் பெருமையைக் கொண்டு என்றும், நாமரூபங்களின் பிரிவின்றி ஸூக்ஷ்மமான சேதநாசேதநங்களென்ற பல சக்திகளிருப்பதை விலக்காததாக வும் எல்லோரும் இசைவதேயாம்.

ஆனால் நீங்கள் சொல்லும் வகையிலே அநாதியாகவே ஜீவர்கள் பலர் இருந்தாலும், சங்கரர் சொன்னபடி மாயை யினாலோ, பாஸ்கரர் சொன்னபடி ஏதேனும் உபாதியினாலோ ஒரே ப்ரமமத்திற்கே இந்த அநாதியான பன்மை யிருந்து வருகிறதென்னப்படுவதாலே, ப்ரம்மத்திற்கு மாயையையும் உபாதியையும் இசைந்ததாகின்றமையால் அதனாலேற்பட்ட அறிவின்மை, துன்பம் முதலான தோஷங்களெல்லாம் ப்ரம்மத் திற்கே நேராக இருப்பனவாம். (எங்கள் பக்ஷத்தில் ஜீவர்களை விட்டுப் பிரியாமலே ப்ரம்ம மிருப்பதானாலும், மாயை உபாதி யென்ற காரண மின்றி இயற்கையிலேயே ஜீவர்களும் ப்ரம்மமும் வெவ்வேறு தத்துவமானபடியாலே தோஷமொன்றும் பிரம்மத் தினிடம் அணுகாதாகையாலே பரப்ரம்மத்தின் பெருமைக்கு என்றும் எங்கும் எள்ளளவும் குறைவில்லை.)

ஜ்ஞானமாத்ரமான ப்ரம்மம் ஒன்றே யென்ற பக்ஷம் விசாரிக்கப்பட்டது. இனி ஸந்மாத்ரமான ப்ரம்மம் ஒன்றே யென்ற யாதவப்ரகாசபக்ஷம் விசாரிக்கப்படுகிறது. 'ஸதேவ ஸோம்ய' என்ற வாக்யத்தைக் கொண்டு, 'இல்லை'யென்னாதபடி, 'இருந்தது ப்ரளயத்திலே' என்று மட்டும் சொல்லக்கூடியதாய் மற்ற விசேஷங்கள் ஒன்றுமில்லாததான ப்ரம்மம அது முதலிலே என்பர் இவர். இது ஸ்ருஷ்டிக்குப் பிறகு ஜீவர்களாகவும் அசேதநமான உலகாகவும், ஈச்வரனாகவும் பிரிகிறது, கடலி னின்று குமிழ், நுரை, அலை யென மூன்று பிரிவுகள் போலே.

இப்பக்ஷத்தில் குடம், மடக்கு, மொந்தை என்றவற் றிற்குப் போலே, ஜீவன், ஈச்வரனென்ற சேதநர்களுக்கெல்லாங்

கூடப் பிறவியும் அழிவும் இசையவேண்டியிருப்பதால் முன் சொன்னபடி வேதஸூத்ரவிரோதம் நிலைபெறும். அதற்காக, ப்ரளயகாலத்தில் இம் மூன்றும் இப்பொழுது போல் இராவிடினும் மூன்று சக்திகளாக இருக்கின்றன என்னில், சக்தியென்று லென்ன? ஸங்மாத்ரபரம்மத்திற்கு இம் மூன்றாக மாறும் ஸாமர்த்தியம்தான் சக்தியென்னில், அப்போது, 'இம் மூன்றும் உண்டாகிறன, அழிகிறன' என்றே சொன்னதாம். இனி, இம் மூன்றும் தனித்தனியே ஸூக்ஷ்மநிலையிலிருந்தன வாகையாலே சக்தியெனப்படுகின்றன வெனில், ஆகில் இம் மூன்று தவிர வேறு ப்ரம்மமென்பதொன்றை அங்கீகரிக்க ப்ரமாணமில்லை. அதை யிசைந்தால், அதற்கும் இவற்றிற்கும் என்ன ஸம்பந்தமென வினவினால், அது அவற்றை உண்டுபண்ணுகிறதென்றே சொல்லவேண்டுமாகையால் முன் சொன்ன தோஷமே நிற்பதாம். ஆகையால் முன்பே மூன்றே யிருந்தன என்று ஸ்வீகரிக்க வேண்டும்.

இப்படியிருக்க ஒன்று எனச் சொன்னது நாமரூபங்களின் வகைகள் இல்லாமலிருந்ததைப் பற்றி யென்றே கொள்ளவேண்டும். அப்போது இவற்றிற்கு மேல் பிரம்மமொன்றில்லாமை நாமரூபவிபாகமில்லாது அதுமட்டு மிருந்ததென்பதற்கு விரோதமில்லை. ஆகிலும் இம்மூன்றும் ப்ரம்மங்களானபடியாலே ப்ரம்மமொன்றென்றது ஸித்திக்காது. ஆகையால் சேதநாசேதநங்களை ப்ரம்மத்தின் சரீரமாக வேதமோதுவதால் ஈச்வரனெனப்படும் ப்ரம்மமே சேதநாசேதநங்களைச் சொல்லும் சொற்களாலே சொல்லப்படுகிறதென்றும், நாமரூப வகைகள் இவற்றிற்கு ஏற்பட்டபோது இவற்றை உடலாக உடையதாய் ப்ரம்மமே கார்யமாகிறதென்றும், அவ்வகைகள் இல்லாமல் ஸூக்ஷ்மமாயிருந்த அவற்றை உடலாகக் கொண்டு அதுவே காரணமாயிருந்ததென்றும் ஆராய்ந்தால், குடம், மடக்கு முதலானவற்றிற்கு மண்கட்டி போலே ஒருவிதமான ப்ரம்மத்திற்கு ஒருவிதமான ப்ரம்மம் காரணமெனத் தேறினதால் எல்லாம் ஒழுங்காயிற்று.

## சாரீரகத்தின் சுருக்கம்.

—

வேதம் யுக்தி எல்லாம் பிறமதங்களிலே விரோதிக்குமென்பதை ஸ்ரீ பாஷ்யத்திலே விஸ்தரித்தோம். இங்கு அதை விஸ்தரிப்பதில்லை. ஸ்ரீ பாஷ்யத்தில் கூறினபடி அதிகரணங்களின் முழுப்பொருளும், தனித்தனியே ஸூத்ரங்களின் பொருளும் ஸுகமாய் அறியுமாறு அடைவாக ஸங்க்ரஹித்து உபந்யஸிக்கப்படுகிறன—

On the other hand if it is accepted that *Brahman* though inseparable from *Jeeva* is distinct from it by nature (and not by Ignorance or Upādhi), no imperfection can effect or touch *Brahman*, the glory and greatness of *Brahman* remain undetracted.

Thus has been discussed the theory that *Brahman* is mere *Intelligence*.

Now for the theory of *Yādava Prakāsa* who accepts ONE thing of mere Existence, without saying that nothing exists. Relying on the text, '*Sadēva Sowmyēdam*' he says that at the beginning of the creation, there was one substance only i.e. *Brahman* with no attributes or qualities. (After the creation, This devides itself into *Jeeva* and *Achētana* Universe and also as *Īswara*, just as from the ocean arise bubbles, white sprays and waves.)

In this argument, just as it was posited in the case of the illustration of vessel forms pots, pans and saucers of earth, even here, we have to attribute birth and death to *Jeeva* and *Īswara*, which is against the *sūtras*. If to meet this point it is said that in the Beginning (at the time of the Floods) all these three (*Chit*, *Achit* and *Īswara*) (though not in the forms in which they now exist) were in existence as three Energies, what *then are those energies?* If the answer is "*Brahman* is possessed of the power to transform itself into these three", then it follows that these three have birth (beginning) and End (Death). Then, as stated before, it is against *Sūtras*. Or, if it is said that these (*Chit*, *Achit* and *Īswara*) existed in their subtle forms, there is no authority for holding that, beyond these three, there is a substance called *Brahman*. Even if we accept this, we have to investigate as to what is the relationship between them and *Brahman*; the only answer can be that *Brahman* creates these things. In that case the same objection as above mentioned will apply here. Hence, it is clear that the Three were there in existence. What is meant by saying that the One existed is that (it was so because)

the stage of division into Names or Forms had not started. If this is so, there can arise no difficulty involved in supposing a *Brahman* beyond the Three. Again, these three can not be each a *Brahman*. Hence *Īswara* is the one *Brahman*.

Since *Vēdas* say that the *Chētana* and *Achētana* in all the stages are the bodies of *Brahman*, whereever the words denoting *Chētana* and *Achētana* are used, they, by their very force, denote the *Brahman* with them as Its bodies. When these *Chētana* and *Achētana* abtain Forms and Names, *Brahman* itself becomes the effect as It has them as his body in subtle form before the stage of Names and Forms. If we think deeply as above we conclude that just as for pots and pans the Earth (mud) is the cause, so also *Brhaman* of this (subtle) kind is the cause of the (material) *Brahman*.

---

We have fully explained in the *Bhāshya* that *Vēda* and the logic are opposed to outside creeds (religions, i. e., *matas*:) Hence we do not go into details here. What is stated in each *Adhikaraṇa*, and the meaning of the *Sootras* therein are explained here briefly for easy understanding of them.

There are four *Adhyāyas* of four Pādas each containing various *Adhikaraṇas*. In the first of 16 Pādās are raised questions, ' whether the *Vēdas* indicate that the Creator of the worlds is the *Moola Prakṛti* or the Sentient *Jeeva*, and answers are given by proving that the Texts of *Vēdas* establish only that *Brahman*, the All Kowing, with a Will not to be obstructed, not touched by any imperfections, and full of all good qualities is the cause of all the worlds.

In the 2nd, 3rd and 4th *Pādas*, reliance is placed on some passages of the *Vēdānta* to argue that they say that only *Prakṛti* or jeeva etc. and no other is stated therein as *Brahman*; but this is met by proving that the

பல அதிகரணங்கள் கொண்ட பாதங்கள் நான்கு உள்ள அத்யாயங்கள் நான்கையுடைய சாரீரகசாஸ்திரத்திலே முதற் பாதத்திலே—

வேதாந்தங்கள் ப்ரதானமெனப்படும் அசேதநமான மூலப்ராக்ருதியையே அல்லது சேதநனை ஜீவனையே உலகுக்குக் காரணமாகச் சொல்லுகிறனவாமென்று வினாக்களை யெழுப்பி, எல்லாமறிந்ததும், எண்ணினபடி செய்வதும், எந்த தோஷமு மில்லாததும், எல்லாக் குணங்களும் நிறைந்ததுமான ப்ரம்மமே காரணமெனக் கூறுகின்றனவென அறுதியிடப் பட்டது.

2, 3, 4 பாதங்களில் சிற்சில வேதாந்த வாக்யங்கள் மூல்ப்ரக்ருதி முதலானவற்றையே சொல்வதாகக்கொண்டு எங்கும் இதைவிட ப்ரம்மம் வேறென்று கூறப்படவில்லை யென்னலாமென்று ஆக்ஷேபம் வர, அந்த வேதாந்த வாக்யங்கள் கூட ப்ரம்மத்தையே பணிக்கின்றன வென வறிவிக்கப்பட்டது

அவற்றில் ஜீவனையோ ப்ரதானத்தையோ சொல்வதென்பதற்கு வேண்டும் குறிகள் நன்கு விளங்காத வாக்யங்களை யெடுத்து விசாரிப்பது இரண்டாம் பாதத்திலாம். அக் குறிகள் நன்கு விளங்கும் வாக்யங்கள் 3-ம் பாதத்தில் விசாரிக்கப் பெற்றன. 4-ம் பாதத்தில்—அந்த ஜீவனையும், ப்ரதானத்தையும் ஸாங்க்யாதி சாஸ்திரம் எவ்வகையில் விசாரித்திருக்கிறதோ, அதே விதமாக அந்த சாஸ்திரவழியிலே அங்குக் கண்ட சொற்களோடு அமைந்திருக்கும் வாக்கியங்களைக் கண்டு கிளர்ந்த கேள்வியை நிராகரித்து அவ்வவ வாக்யங்களுக்கு அவ்வாறு பொருளில்லை யென விளக்கி, ப்ரம்மமே ஸ்தாபிக்கப்பெற்றது. ஆகையால் முதல் அத்யாயத்திலே எல்லா வேதாந்த வாக்கியங்களும் ஸர்வஜ்ஞன் ஸத்யஸங்கல்ப்பன் என்றாற்போன்ற குணங்கள் உள்ள ப்ரம்மத்தையே உலகுக்குக் காரணமாகச் சொல்லுகின்றன வென அறுதியிடப்பட்டது.

இரண்டாவது அத்யாயத்திலே முதல் அத்யாயத்திற் சொன்ன விஷயம் ஒரு படியிலும் அசைக்க முடியாதென விளக்கப்பட்டது. அதில் முதற் பாதத்திலே ஸாங்கியம் முதலிய ஸம்ருதிக்கு விரோதமாகவும் யுக்திக்கு விரோதமாகவும் இவ்வாறு ஸாதிக்கலாமோ என்ற ஆக்ஷேபம் அடிபறுக்கப் பட்டது. இரண்டாம் பாதத்தில் ஸாங்கியம் முதலான, வேதத்திற்குப் புறம்பான, மதங்களைப் புறக்கணித்து வேதாந்தத்திற்குப்பொருந்தின மதமே ஆதரிக்கத்தக்கதென்பது நிலைநாட்டப் பெற்றது. 3, 4 பாதங்களில் ஆகாயம் முதலானவை ப்ரம்மத்

திற்குக் காரியமாகும் வகை விவரிக்கப்பட்டது. அங்ஙனம் விவரித்ததாலே, வேதாந்த வாக்யங்களில் ஒன்றுக்கொன்று முரண்பாடு இருப்பதாகத் தோன்றுகிறது என்று, ப்ரம்மம் எல்லாவற்றிற்கும் காரணமென்ற வேதாந்த மதத்தை வேதாந்தத்தைக் கொண்டே விலக்கும் முயற்சி முறியடிக்கப்பட்டதாம். அவற்றில் மூன்றாவதில் சேதந அசேதந ப்ரபஞ்சம் முழுதும் ப்ரம்மத்திற்குக் கார்யமானாலும் அசேதநமானது சுயரூபத்திலேயே மாறுதல் பெற்றுக் கார்யமாகிறதென்றும், சேதநனான ஜீவன் உருவத்தில் மாறுதலின்றி தனது ஸ்வபாவத்தில் அதாவது ஜ்ஞானத்தில் ஸங்கோசம், விகாஸம் (சுருங்குவது, மலர்வது) என்ற மாறுதல்கள் பெற்றுக் கார்யமாகிறானென்றும் பிரித்துரைக்கப்பட்டது. நான்கில் ஜீவனுக்குக் கருவிகளான இந்திரியங்களும் ப்ராணனும் பலவகைத் தேஹங்களும் பிறக்கும் வகை பணித்ததாம்.

ஆக முதலிரண்டு அத்யாயங்களால் மோக்ஷத்தை விரும்புவோர் உபாஸிக்கவேண்டியதாய் ஒருவித தோஷமுமின்றி உயர்வற உயர்ந்த குணங்கள் நிரம்பி உலகுக்குக் காரணமான ப்ரம்மம் பரக்க நிரூபிக்கப்பட்டது.

மேலிரண்டு அத்யாயங்களால் பிரம்மத்தை உபாஸனம் செய்யும் முறையும், அதற்குப் பலனான மோக்ஷமும் விசாரிக்கப் படுகிறன.

அவற்றில் மூன்றாமத்யாயத்தின் முதற்பாதத்திலே, பிரம்மத்தை உபாஸிப்பதில் ருசி யுண்டாவதற்காக ஜீவனுக்கு ஸம்ஸாரிக்குமபோதுள்ள தோஷங்கள் விளக்கப்பட்டன. இரண்டில் அந்த உபாஸனத்தில் அவா பிறப்பதற்காகவே பிரம்மத்திற்குள்ள இரு குறிகள்—ஒன்று தோஷமெல்லாமற்றிருக்கை, மற்றொன்று கல்யாணகுணங்களுக்கெல்லாம் பொக்கிஷமாயிருக்கை—எடுத்துரைக்கப்பெற்றன. மூன்றாம் பாதத்தில் பிரம்மத்தின் உபாஸநமென்பது ஒரே வகைப்பட்டதா, அல்லது பலவாறானதா, பலவாறென்றபோது உபாஸநங்களில் அவனுடைய கல்யாணகுணங்களில் எது எவ்விடத்திற் சேரத்தக்கது, எது சேராததென்ற விசேஷங்கள் விஸ்தரித்துரைக்கப்பெற்றன. நான்காம் பாதத்தில் உபாஸநத்திற்குத் துணையான வர்ணாச்ரம தர்மமுணர்த்தப்பட்டது

நாலாவது அத்யாயத்தில் ப்ரம்மோபாஸநத்தின் பலனைப் பற்றிய விசாரம். அங்கு முதற் பாதத்தில் ப்ரம்மோபாஸனத்தின் பலனை மேலே பணிப்பதற்காக முதலில், உபாஸநமென்பது எத்தகையது, எங்ஙனமதை அநுஷ்டிப்பதென்ற விசா

very passages refer only to the *Brahman* as the Superior Being, not to *Prakṛti* etc.

Of these three *Pādās* in the 2nd *Pāda* some passages, not very clear to show that *Jeeva* or *Pradhāna* is world cause, are examined. In the third are taken for examination passages that are more clear in favour of this view; and in the fourth are taken for examination passages in which are found expressions which may well be used by *Sānkhyas* and other philosophers in their texts; they are refuted by showing that these very passages also refer to *Brahman*.

Thus in the first *Adhyāya* is established that a person all knowing and with a Will not to be obstructed is the cause of all this world.

In the Second *Adhyāya*, it is made clear that what is established in the First *Adhyāya* is firm and irrefutable in any way; the first of its *Pādas* completely meets in full the objection raised as to how a meaning to *Vedānta*, opposed to *S'ānkhya* can be given. In the 2nd *Pāda*, *Bādarāyaṇa* attacks the *Sānkhya* and other doctrines that do not accept *Vēdas* as authoritative, with a view to establish the *Vedāntic* Doctrine. Again, third and fourth *pādas* explain how *Ākāsa* (ether) and *Prāna* etc are the creations of *Brahman* in order to show that there is no room to raise any conflict among the passages of the *Vēdanta*.

Of this, in the third *Pāda*, the difference is pointed out between *Prākṛti* and *Jeevātman*. Both are the effects (creation) of *Brahman* while *Prakṛti* transforms itself into many by direct changes in its *Roopa* or Form, the *Jeevātman* retaining its *Roopa* or Form, without change transforms itself into many by variations or changes such as, expansion or contraction in its *Swabhāva*, natural intelligence.

Thus, by the first two *Adhyāyas*, *Brahman* has been established as an object of contemplation by

persons desirous of salvation, as a Being without any imperfections but filled with all good qualities and as the Primaevel cause of the Universe. In the next two succeeding chapters (*Adhyāyas*) are examined as to how to contemplate on *Brahman* and the gain derived by such contemplation, i.e., *Mōksha.*

Of these, in the first *Pāda* of the third *Adhyāya* in order to create a desire (taste) for contemplation on *Brahman*, are clearly shown the difficulties attendant on *Jeeva* in the *S'amsāra* stage.

In the second, for the same purpose, to create enthusiasm for *Brahmōpāsanā*, the two characteristics of *Brahman* are described fully, one the freedom from all forms of imperfection, and the other being the treasure-house of all good virtues (qualities). Then proceeding in the third *Pāda*, the question is taken up as to whether *Brahmōpāsana* is of one kind only or of many kinds. Examining this, it is pointed out that they are of many kinds, and details are also given. In the fourth *Pāda*, as a help for *Upāsanās*, the *Varṇāsrama Dharmas* are adumbrated.

The fourth *Adhyāya* deals with the examination of the gains or fruits of the *Brahmōpāsana*.

The first *Pāda* of this *Adhyāya*, in order to speak of the gain of the *Brahmōpāsana*, takes up as the first question as to what is the nature of *Upāsanā*, and how such *Upāsana* is to be performed, and then is set out the glory of the said *Upāsanā*.

The second *Pāda* shows how a *Brahmōpāsaka* starts on his way towards *Brahman*.

In the third *Pāda* is described the *Archirādi* Path and it is finally demonstrated that the said Path leads to *Brahman*.

The fourth *Pāda* describes the *Brahmōpāsaka* enjoying the *Brahman*.

ரமும் உபாஸனத்தின் மாஹாத்மியவர்ணனமும் செய்யப்பட்டது. இரண்டாம் பாதத்தில் பிரம்மத்தை உபாஸிப்பவர் பரம்மத்தைப் பெறுவதற்குப் புறப்படும்வகை விசாரிக்கப்பட்டது. மூன்றும் பாதத்தில் அவர்கள் போகவேண்டும் அர்ச்சிராதிமார்க்கம் அமைந்துள்ள விதமும் அதன் வாயிலாகவே பரப்ரம்மத்தை யடையவதென்பதும் விளக்கப்பட்டது. நான்காம் பாதத்தில் வீடுபெற்றவனுடைய ப்ரம்மாநுபவத்தின் வகை விரித்துரைக்கப் பெற்றது.

இங்ஙனம் விசாரித்து சாரீரக சாஸ்திரம் நமக்கு உரைத்துள்ள ஸாரமாவது —— ஒருவித தோஷமும் சிறிதுமின்றி உயர்வற உயர்ந்தனவும் எண்ணிறந்தனவுமான கல்யாண குணங்களெல்லாம் குவிந்து விளங்குவதும் எல்லா உலகுக்கும் தனி வித்துமான பரப்ரம்மமே மோக்ஷம் பெற விரும்புவோர் அறியவேண்டுவது, மோக்ஷத்திற்கு ஸாதனமான அவனறிவும் மேன்மேல் அப்யஸிக்கப்படும் அவனது நினைவுகளின் தொடர்ச்சியாய் உபாஸனமெனப்படுவது, அவ்வுபாஸனத்தின் பலனாவது அர்ச்சிராதி மார்க்கத்தினாலே ப்ரம்மத்தைக் யணுகித் தனது தன்மையான ஜ்ஞாநாதிகள் ஆவிர்பவிக்க அதனால் அளவற்ற இருவிபூதிகளை யுடையதும் உயர்வற உயர்நலமுடையதுமான அந்த ப்ரம்மத்தின் அநுபவமே, இப்ரக்ருதிமண்டலத்தில் மீண்டும் துன்பப்படுவதென்பது சிறிது மிராதபடி, நிலைத்திருப்பது என்ற தத்துவஹிதபுருஷார்த்தமாம்.

[ஒவ்வொரு பாதத்தினின்று கடைந்தெடுக்கப்பட்ட கல்யாணகுணம் ஒன்றாகப் பதினாறு குணங்கள் உள்ள பரப்ரம்மம் இந்த ப்ரம்மமீமாம்ஸையில் விசாரிக்கப்பட்டு விளங்குகிறதென ஸ்ரீ தேசிகன் அதிகரண ஸாராவளியில் கூறியருளினர். அதாவது——

"ஸ்ரஷ்டா தேஹீ ஸ்வநிஷ்ட: நிரவதிமஹிமா அபாஸ்த பாய: ச்ரிதாப்த: வாத்மாதேரிந்த்ரியாதே: உசிதஜநந க்ருத் ஸம்ஸ்ருதௌ தந்த்ரவாஹீ. நிர்தோஷத்வாதிரம்ய: பஹு பஜநபதம் ஸ்வார்ஹகர்மப்ரஸாத்ய: பாபச்சித் ப்ரம்மநாடீகதி க்ருத் அதிவஹந் ஸாம்யதச்ச அத்ர வேத்ய:"

1. ஸ்ருஷ்டிக்கிறவன்,

2. உலகை தேஹமாக உடையவன்,

3. ஆதாரம் வேண்டாதவன்,

4. எங்கும் வியாபித்தவன்,

5. பாதிக்கப்படாதவன்,

6. ஆச்ரிதருக்கு ப்ரமாணமானவன்,

7. ஆகாயம் ஆத்மா முதலானவற்றையும் தகுமாறு ஸ்ருஷ்டிப்பவன்,

8. இந்திரியங்கள் முதலானவற்றையும் ஸ்ருஷ்டிப்பவன்,

9. ஸம்ஸாரகதாகதங்களை நடத்துகிறவன்,

10. தோஷங்களற்று குணங்கள் நிறைந்து போக்யமானவன்,

11. வெகுவகையான பக்திகளுக்கு இலக்கானவன்,

12. அவரவர் வர்ணாச்ரமதர்மங்களால் ப்ரீதி பெறுவிக்கப்படுபவன்,

13. பாபங்களைப் போக்குபவன்,

14. ப்ரம்மநாடிவாயிலாகப்புறப்படுத்துகிறவன்,

15. அர்ச்சிராதிமார்க்கத்தில் நடத்துகிறவன்,

16. தனது ஸாம்யத்தை யளிப்பவன் என்றவாறு

16 பாதங்களால் இங்கே சரீரக சாஸ்திரத்திலே அவன் அறிவிக்கப்படுகிறானென்றதாம்.]

எம்பெருமானார் அருளிச்செய்த வேதாந்ததீபத்தில்
உபோத்காத பாகம் முற்றிற்று.

Thus *Ṣāreeraka Ṣāṣtra* points out *(Tatva, Hita* and *Purushārtha)* what a person desirous of *Mōksha* should know and realise :

(1) That *Brahman*, free from all defects, a treasure-house full of all beneficient virtues of the highest kind, innumerable and immeasurable is the Creater of the universe :

(2) That the knowledge of such *Brahman* which is the way to attain *Mōksha* is the *Dhyāna* (contemplation) which is the culmination reached by constant and continuous *Upāsana* :

(3) The fruit of this contemplation : The enjoyment, without return to this world, of limitless *Brahman* at the highest Bliss with the two *Vibhōōtis Prakṛti* and *Paramapada*, an enjoyment preceded by by the mainfestations of his own natural intelligence etc., after attaining *Brahman* through the Path of *Archirādi*.

THUS ENDS—

The introduction - portion in *Vedantadeepa*.

---

[*Vētānta Dēsika* gives the gist of the teachings of each of the *16 pādas* of the four *Adhyāyas* in the following verse No. 19 in the *Ṣāstrāvatara, Adhikaraṇasārāvali*.]

"*S'rashṭā Dēhee Swanishṭha : Niravadhimahimā apāsta bādha: Ṣritāpta : Khātmāde : Indriydē : uchitajananakṛt Samsṛtaw tantravāhee.*

*Nirdōshatwādiramya : Bahubhajanapadam Swārhakarmaprasādya : pāpacchit Brahmanādḍēegatikṛt Ativahan Sāmyada : cha atra vēdya :*"

He (the Lord) is seen in the *Pādas* described as:—

(1) The Creator (2) The Possessor of the World as His Body (3) Self Supporter (seeking no support outside) (4) Splendid with measureless Glories (All Pervading) (5) Who cannot be denied (6) Reliable Friend of those who resort to Him (7) The Author of the birth of *Akāṣa* etc., and *Jēeva* (8) and also of the senses and *Prāṇa* (9) The Controller of the movements of *Samsāra* (10) Beutiful being untouched by any blemish, and full of beneficient qualities (11) The object of the various devotions (12) He who is pleased by performing one's appointed duty (13) He who destroys All Sins (14) He who leads the *Jeeva* through *Brahma Nāḍee* (15) and through *Archirādi Mārga* and (16) He who grants to *Jeeva* equality with Himself.]



# अथातो ब्रह्मजिज्ञासा । १-१-१

ब्रह्ममीमांसा विषयः । सा किमारम्भणीया, उतानारम्भणीयेति संशयः । तदर्थं परीक्ष्यते—वेदान्ताः किं ब्रह्मणि प्रमाणम्, उत नेति । तदर्थं परीक्ष्यते, परिनिष्पन्नेऽर्थे शब्दस्य बोधनसामर्थ्यावधारणं संभवति नेति । न संभवतीति पूर्वः पक्षः । संभवतीति राद्धान्तः । यदा न संभवति, तदा परिनिष्पन्नेऽर्थे शब्दस्य बोधनसामर्थ्याभावात् सिद्धरूपे ब्रह्मणि न वेदान्ताः प्रमाणमिति तद्विचाराकारा ब्रह्ममीमांसा नारम्भणीया । यदा संभवति, तदा सिद्धेऽप्यर्थे शब्दस्य बोधनसामर्थ्यसंभवात् वेदान्ताः ब्रह्मणि प्रमाणमिति सा चारम्भणीया स्यात् ।

अत्र पूर्वपक्षवादी मन्यते—वृद्धव्यवहारादन्यत्र व्युत्पत्त्यसम्भवात् व्यवहारस्य च कार्यबुद्धिपूर्वकत्वेन कार्य एवार्थे शब्दशक्त्यवधारणात् परिनिष्पन्नेऽर्थे ब्रह्मणि न वेदान्ताः प्रमाणमिति तद्विचाररूपा ब्रह्ममीमांसा नारम्भणीयेति ।

सिद्धान्तस्तु—बालानां मातापितृप्रभृतिभिः अम्बातातमातुलशशिपशुपक्षिमृगादिषु अङ्गुल्या निर्दिश्य तत्तदभिधायिनः शब्दान् प्रयुञ्जानैः क्रमेण बहुशः शिक्षितानां तत्तच्छब्दश्रवणसमनन्तरं स्वात्मनामेव तदर्थबुद्ध्युत्पत्तिदर्शनात्, शब्दार्थयोः संबन्धान्तरादर्शनात्, संकेतयितृपुरुषाज्ञानाच्च बोध्यबोधकभाव एव शब्दार्थयोः स्सम्बन्ध इति निश्चिन्वानानां परिनिष्पन्नेऽर्थे शब्दस्य बोधकत्वावधारणं सम्भवतीति ब्रह्मणि वेदान्तवाक्यानां प्रामाण्यात् तदर्थविचाराकारा ब्रह्ममीमांसा आरम्भणीयेति ॥

सूत्रार्थस्तु—**अथ** इति आनन्तर्ये । **अतः** इति च वृत्तस्य हेतुभावे । ब्रह्मणो जिज्ञासा **ब्रह्मजिज्ञासा**; ज्ञातुमिच्छा **जिज्ञासा** । इच्छायाः इष्यमाणप्रधानत्वादिष्यमाणं ज्ञानमिहाभिप्रेतम् । पूर्ववृत्तादल्पास्थिरफलकेवलकर्माधिगमादनन्तरं तत एव हेतोरनन्तस्थिरफलब्रह्माधिगमः कर्तव्य इति ॥

इति जिज्ञासाधिकरणम् ॥१॥

---

# சாரீரகாரம்பம்.

ப்ரம்மத்தை விசாரித்து ஸ்தாபிப்பது இந்த சாரீரக சாஸ்திரம். இவ்விசாரமே தொடங்கத்தக்கதா, தகாததா என்கிற விசாரம் முதலில் நான்கு [1] அதிகரணங்களில் செய்யப்படுகிறது. அதற்காக ப்ரம்மமென்கிற விஷயத்திலே வேதாந்தங்கள் பிரமாணமாகக் கூடுமா, கூடாவா எனவும் இந்நான்கு அதிகரணங்களில் விசாரிக்கப்படும். வேதாந்தங்கள் ப்ரம்ம விஷயத்தில் ப்ரமாணமல்ல என்று பூர்வபக்ஷிகளின் அபிப்பிராயம். அதற்குக் காரணம் என்னவென ஆராயும்போது ஒரு காரணத்தைக் கொண்டு ஒரு பூர்வபக்ஷி இங்கே புறப்படுகிறான். மற்றொரு காரணத்தைக் கொண்டு மற்றுமொரு பூர்வபக்ஷி மேல் அதிகரணத்தில் வருவான். இவ்வாறு நாலு அதிகரணங்கள்.

## I. ஜிஜ்ஞாஸாதிகரணம்

---

அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா (1-1-1.) அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா

இங்குப் பூர்வபக்ஷம் செய்பவன் சொல்லும் காரணமாவது—வேதமென்பது பல சொற்களின் சேர்க்கை. ஒருவகையான சப்தராசி. உலகத்தில் சப்தமென்கிற ப்ரமாணமுண்டு. அது எத்தகைய பொருளைச் சொல்லவியலு மென்பதை யாராய வேண்டும். ‘இந்த வாக்யத்திற்கு இது பொருள்’ என முதலில் அறிவது எதனாலென்பதை யாராய்ந்தால், வ்ருத்தவ்யவஹாரத்தினாலென்னல் வேண்டும். வ்ருத்த வ்யவஹாரமாவது அறிவாளியின் செயல். அது இருவிதம். ஓர் அறிவாளி சொல்வது; மற்றோர் அறிவாளி செய்வது. ஒருவன் சொல்லக் கேட்டு மற்றொருவன் செய்கிறான் என்றால் முதல்வன் ஏவுகின்றனவனென்றும் மற்றொருவன் ஏவப்படுகிறவனென்றும் விளங்கும். ஆகவே இவர்களை முறையே ப்ரயோஜகவ்ருத்தனென்றும் ப்ரயோஜ்யவ்ருத்தனென்றும் கூறுவது. இவ்விருவர்களின் செயலைக் கண்டு மூன்றாவது மனுஷ்யன்—இதற்குமுன் அச்சொல்லின் பொருள் இன்னதென வறியாதவன்—பொருளை யறிகிறான். அதாவது ஒரு அறிவாளி வடமொழியில் **‘गामानय’** என்றால், அதனைக் கேட்டு மற்றோர் அறிவாளி பசுவைக்

---

[1] அதிகரணமாவது—இப்படியா அப்படியா என்று ஸந்தேஹமிருந்து அவசியம் விசாரிக்கவேண்டிய விஷயமொன்றை யெடுத்துக்கொண்டு ஆக்ஷேபிக்கிறவனுடைய பக்ஷத்தை அதற்குத் தக்க ஆதாரங்களுடன் எடுத்துக்காட்டி, ஸித்தாந்தியின் யுக்திகளைக் கொண்டு அதனைக் கழித்து உண்மையான பக்ஷத்தை அறுதியிடல். இத்தகைய அதிகரணங்கள் பாதந்தோறும் பலவாம். ஓர் அதிகரணத்திற்கு ஸூத்ரம் ஒன்றுமாம்; பலவுமாம். ஸூத்திரத்தில் ஸித்தாந்தத்தை மட்டும் கூறுவதுமுண்டு. பூர்வபக்ஷம் சேர்த்துக் கூறுவதுமுண்டு

கொண்டுவந்தானுனல், வடமொழியறியாத மூன்றுவது மனுஷ்யன் அந்தச்சொல்லுக்குப் 'பசுவைக் கொண்டுவா' என்றே பொருள் எனவறிகிறுன். இப்படி யொருவன் ஏவ, மற்றொருவன் செய்ய அதினின்றே சொற்பொருள் தெரிவதால், சொல்லெல்லாம் செய்யவேண்டியதாக ஒரு தொழிலைப் பற்றி வருமே யல்லது. அவ்வாறில்லாததைப் பற்றினவாகா வெனவும் முடிவு செய்யவேண்டும். இவ்விருவகை வ்யவஹாரங்கள் சேராதபோது மூன்றும் மனுஷ்யன் சொற்பொருள் அறிவதில்லையே. ஆகையால் கார்யமாக இராததொன்றைப் பற்றி வாக்யம் பிறவாதாகையால், ப்ரம்மமென்றது நாம் செய்யும் தொழில்களில் ஒன்றுமாகாமல் எப்போதும் ஸித்தமாயுள்ள வஸ்துவானதால், அது வேதாந்தமென்ற சப்தத்தால் சொல்லப்படாதென்பதாம்.

ஆக இங்கு ஸித்தமான—இனிச் செய்யப்படவேண்டியதல்லாத—வஸ்துவை யறிவிக்கச் சொற்களுக்கு சக்தி யுண்டென முடிவுசெய்யத் தகுமா, தகாதா என விசாரிக்கவேண்டியிருக்கிறது. தகாதென்றது பூர்வபக்ஷம்; தகுமென்பது ஸித்தாந்தம். முடிவுசெய்யத்தகாதென்றல், ஏற்கனவே ஸித்தமான பொருளைச் சொல்லச் சொற்களுக்கு சக்தி யில்லையாகையாலே ஸித்தமாயிருக்கும் ப்ரம்மத்தின் விஷயத்திலே வேதாந்தங்கள் ப்ரமாணமாகா வாகையால் அவற்றின் விசாரமாயுள்ள ப்ரம்மமீமாம்ஸையானது ஆரம்பிக்கத்தக்கதன்று எனவாம். ஸித்தவஸ்துவை யறிவிக்கச் சொற்களுக்கு சக்தி யுண்டென்று முடிவுசெய்யத் தகும் பக்ஷத்தில், ஸித்தமான பொருளையு மறிவிக்க சப்தம் கூடுமாகையால் பிரம்ம மீமாம்ஸை ஆரம்பிக்கத்தக்கதாம்.

இங்குப் பூர்வபக்ஷி நினைப்பதாவது—அறிவாளிகளின் வியவஹாரமென்று முன் சொன்ன வழியைத் தவிர்த்து வேறு வழியில் சப்தத்திற்கு சக்தியை யறிவதென்னப்படும் வ்யுத்பத்தி வர வியலாதாகையாலே, வியவஹாரமென்பதும், கார்யம் இது-அதாவது, இதைச் செய்யவேண்டுமென்றறிந்தபோதே ஏற்படக்கூடியதாகையால், செய்யப்படவேண்டுமென்பதை விட்டுப் பொருள் கூற சப்தத்திற்கு சக்தியில்லை யென அறுதியிடவேண்டுமானதால் செய்யப்படவேண்டுமென்ற பொருளிற் சேராத ஸித்தமான ப்ரம்மத்தின் விஷயத்திலே வேதாந்தங்கள் பிரமாணமாகா. எனவே வேதாந்த விசாரமாயுள்ள பிரம்மமீமாம்ஸை ஆரம்பிக்கலாகாதென்றதாம்.

ஸித்தாந்தமாவது—(வயது வந்த பிறகு, ஒருவர் சொல்ல மற்றொருவர் செய்ய அவ்விரண்டு வியவஹாரங்களைக் கண்டு வரும் வ்யுத்பத்தியானது கார்யவிஷயத்திலே யாகிறதென்பது கிடக்கட்டும்.) மிகச் சிறுவயதிலிருக்கும் பிள்ளைகள் தாய், தகப்

பன் முதலானவர்களாலே, அன்னை, அப்பன், அம்மான் என்ற போலுள்ள உறவினர்களையும், சந்திரன், பசு, பக்ஷி, மிருகம் முதலிய மற்றவைகளையும் விரலால் சுட்டிக்காட்டி அவ் வஸ்துக் களைச் சொல்லும் (அன்னை என்பது முதலான) சொற்களையும் சொல்லிக்கொண்டு ஒரு தரத்திற்குப் பல தரமாகப் படிப்படியாக சிக்ஷிக்கப்படுகிறார்கள். அப்போது அந்தச் சொற்களைக் கேட்டதும அந்தந்தப் பொருள் தங்களால் அறியப்படுகிறதென்பதை அப்பிள்ளைகளே அறிகின்றனர். காலக்ரமத்திலே, 'இந்தச் சொல்லுக்கும் இப்பொருளுக்கும் என்ன ஸம்பந்தம்? ஏன் இதைக்கொண்டு இதனையே யறிவிக்கவேண்டும், அறியவும் வேண்டு' மென்ற ஆராய்ச்சி இடம் பெறுகிறது. யாதொரு ஸம்பந்தமு மிருப்பதாகத் தெரிகிறதில்லை. இச் சொல்லை யேற்படுத்திய புருஷன் இவ்வாறு ஒரு ஸங்கேதம செய்துளன். ஆகவே நாம் இப்படியறிவது என்று முடிவு செய்யலாமென்றால், அது புதிய சொற்கள் விஷயத்திலே தகும். பரம்பரையாக அநாதிகாலமாகச் சொல்லிவரும் சொற்களுக்கு ஸங்கேதம் செய்பவன் யார்? ஒருவன் ஸங்கேதம் செய்தான் ஒரு ஸமயத்திலென்றால் அதற்கு முன்னமும் அச் சொல் வழங்கப்பட்டிருந்ததே, அது எப்படி' யென்று பராமரிக்கப்படுகிறது. கடைசியாக அந்தந்தச் சொல்லுக்கும் அந்தந்தப் பொருளுக்கும் ஸம்பந்தமாவது—இது அதனை போதிக்கின்றது, இதனால் அது போதிக்கப்படுகிறதென்பதே. இது தவிர வேறில்லை யென முடிவு செய்யப்படுகிறது. இந்த ஸம்பந்தமறிவதைத தானே வ்யுத்பத்தி யென்றும், சொல்லின் சக்தியை யறிவதென்றும் பூர்வபக்ஷியும் நினைத்திருப்பது. இது வெகு சிறு பிராயத்தில் விரலால் சுட்டிக்காட்ட வரக்கூடியதே. அப்போது அவர்கள் ஏற்கனவே ஸித்தமான தாய், தந்தை முதலான பொருள்களையே தாமே யறிவிப்பதும், பிள்ளைகள் அறிவது மென்னவேண்டுமாகையால் முதலிலேயே கார்யத்திற் சேராத பொருளைச் சொற்கள் சொல்லுமென்பது முடிவு செய்யத்தக்கதாயிற்று.

ஆனதால் ஸித்தமான பிரம்மவிஷயத்தில் வேதாந்தங்கள் பிரமாண மாகின்றது பற்றி அவற்றின் விசாரமெனப்படும் பிரம்ம மீமாம்ஸை ஆரம்பிக்கத்தக்கதே யென்றதாம்..

ஸூத்ரத்தின் பொருளாவது-**अथ** பிறகு **अतः** ஆகையாலே **ब्रह्मजिज्ञासा** ப்ரம்மத்தை யறிய ஆவல். ஆசையென்பது ஆசைப்படும் பொருளுக்காக வாகையாலே ஜிஜ்ஞாஸா என்றதால் அறிவு பெறவேண்டுமென்று சொன்னதாம். பூர்வ மீமாம்ஸையினின்று கர்மகாண்டத்திற் கூறிய கர்மங்கள் அற்பங்களும் அஸ்திரங்களுமான பலன்களையே யளிப்பன வெனத்

தெளிந்தபிறகு அதுகாரணத்தினலேயே அளவற்றதும் அழிவற்றதுமான ப்ரம்மத்தின் அறிவைப்பெறவேண்டியிருத்தலாம்.

(இப்படிக் கர்மமீமாம்ஸையை பிரம்மமீமாம்ஸைக்கு முன் செய்திருப்பவனுக்கு, சொற்களெல்லாம் கார்யமானவற்றைச் சொல்வதாகவே பார்த்திருப்பதற்கேற்ப சப்தங்களின் வ்யுத்பத்திவிஷயத்திலே தான் நினைத்திருந்த முடிவைப் பின்பற்றி ப்ரம்மவிசாரம் ஆரம்பிக்கத்தக்கதா யில்லை யென்ற எண்ணம் பிறக்குமாகையால் முதலில் அம் முடிவைப் போக்கி ப்ரம்மவிசாரம் ஸ்தாபிக்கப்பட்டது. இனி வெவ்வேறு வழிகளில் மீண்டும் ஆக்ஷேபம் பிறக்க அதனைப் பரிஹரிக்க மேல் மூன்று அதிகரணங்கள்.)

---

**ṢĀREERAKĀRAMBHA.**

The *Sootras* begin to answer the opponents' objections and answer them with a view to establish the *Vedāntic* doctrine. The inquiry into *Brahmaṇ* is to be begun, the determination being the object of the *Ṣāreeraka Ṣāstra.* Whether this inquiry is proper or not is the topic taken up for decision in the first four *Adhikaraṇās.* (*Adhikaraṇa* literally means complete argument treating of one issue to be discussed and decision thereon,)

For that purpose the issue arises as to whether *Vēdānta* can be authority or not for the determination of *Brahman.* The opponents say that *Vedānta* is not such authority. Four arguments are advanced and the four *Adhikaraṇas* deal with them and they are refuted.

## I. *Jigñāsādhikaraṇa*

---

ATHĀTŌ BRAHMAJIGÑĀSA (1-1-1.)

**1. (i) Then therefore the inquiry into Brahman.**

*Atha*=After this, i. e., after completion of the learning of the first or *Poorva Meemāmsā.* *Atāḥ*=For this reason (i. e., because of dissatisfaction felt after studying *Poorva Meemāmsā.* *Brahmajigñāsā*=Inquiry into *Brahman.*

---

The argument advanced and dealt with in the first *Adhikaraṇa* is this: *Vēda* is a string of Speech—a combination of words. Like perception or inference, Speech also is an authority. What can speech denote? What is its *Ṣakti* (power)?

In the first instance, to understand the significance of a sentence, it can be had only from *Vṛddha Vyavahāra*, i. e., the action of (adult) intelligent beings. They consist of two sets—the person who speaks and the person that acts (on hearing the speech). The person that says or commands is called ***Prayōjaka Vṛddha***, while the other, the actor is called as ***Prayōjya Vṛddha***. By observing the conduct of these two persons, a third person (a person ignorant of what is meant by the speech) comes to understand its meaning. For example, if one intelligent person says to another *Gāmānaya* ("Bring the cow) and the person spoken to brings the cow, the third person, the observer, at once understands that the saying means "Bring the cow." Hence it follows that since (in this world) understanding or knowledge arises only by observation of what one says and what another does in accordance with it, all knowledge derived through speech is related to action only under a command, and all words are *Kāryapara*: only relating to an action or motive.

Therefore it is argued that as ***Brahman*** is a settled (a *Siddha*=not to be effected or brought about) being and as the *Vēdānta* is speech only, the *Vēdānta* has no power to make us know such ***Brahman***; and it can be no authority. Thus is the argument. It is necessary now to ascertain whether a speech or word can make known a Being already settled (*Siddha*).

The opponent says "No"; our contention Siddhānta) is "Yes".

*Answer*: It may be that the knowledge obtained by an adult person by observing of what one person

does on hearing the speech of another is related to action. Little children are taught by their parents etc. by pointing out with fingers their relations and other objects, and uttering the words mother, father, moon, bird etc. and repeating the words till the children come to understand their meanings. These objects are *Siddha* or settled things and not actions.

The children can understand the significance of the words by themselves in course of time by beginning to inquire as to, 'what the connection there is between the object and the word and why a particular word indicates a particular object.

The connection can not be mere convention, for convention can come into existence only in respect of words recently or newly formed. As *Meemāmsakas* say, almost all Samskṛta words are *Vēdic.* Vedic words are ancient without beginning. Therefore the power of signification is to be natural and not conventional. This relationship is called *Ṣakti* (Force), and *Vyutpatti* is its knowledge.

Thus, speech can denote or signify, by its own force, any object even without concerning with action. Therefore *Vēdāntas* are authorities in the matter of *Brahman.* We shall hence go into the inquiry as to *Brahman.*

---

Then follow three *Adhikaraṇas* dealing with other objections as to inquiry into *Brahman* and refutation of the same.

---

# जन्माद्यस्य यतः । १-१-२

तैत्तिरीयके "यतो वा इमानि भूतानि जायन्ते । येन जातानि जीवन्ति । यत् प्रयन्त्यभिसंविशन्ति तद् विजिज्ञासस्व । तद् ब्रह्म" इत्येतद्वाक्यं विषयः ।

किमेतत् जिज्ञास्यतया प्रतिज्ञातं ब्रह्म जगज्जन्मादिकारणतया लक्षणतः प्रतिपादयितुं शक्नोति न वेति संशयः ।

न शक्नोतीति पूर्वः पक्षः । कुतः ? जगज्जन्मादीनामुपलक्षणतया विशेषणतया वा ब्रह्मलक्षणत्वासंभवात् । उपक्षणत्वे ह्युपलक्ष्यस्याऽऽकारान्तयोगोऽपेक्षितः ? न चेह तदस्ति । अतः उपलक्षणत्वं न संभवति । विशेषणत्वेऽप्यनेकविशेषणविशिष्टतया अपूर्वस्यैकस्य प्रतिपादकत्वं न संभवति । विशेषणानां व्यावर्तकत्वेन विशेषणबाहुल्ये ब्रह्मबहुत्वप्रसक्तेः ।

राद्धान्तस्तु—एकस्मिन् अविरुद्धानां विशेषणानाम् अनेकत्वेऽपि श्यामत्वयुवत्वादिविशिष्टदेवदत्तवत् जगज्जन्मादिविशिष्टं ब्रह्मैकमेव विशेष्यं भवति । उपलक्षणत्वे जन्मादिभिरुपलक्ष्यस्य ब्रह्मशब्दावगतबृहत्त्वाद्यकाराश्च सन्तीति जगज्जन्मादिकरणं ब्रह्मेति लक्षणतः प्रतिपादयितुं शक्नोति-इति सूत्रार्थः—अस्य विविधविचित्रभोक्तृभोग्यपूर्णस्य जगतो यतो जन्मादि, तद् ब्रह्मेति प्रतिपादयितुं शक्नोत्येतद्वाक्यमिति ॥

इति जन्माद्यधिकरणम् ॥२॥

---

## (2) ஜந்மாத்யதிகரணம்.

ஜந்மாத்யஸ்ய யத : (1–1–2) ஜந்மாத்யஸ்ய யதः

**यतः** யாதோன்றினின்று **अस्य** இவ்வுலகுக்கு **जन्मादि** பிறப்பு முதலியனவோ, (அது ப்ரம்மம்.)

வேதாந்தங்கள் ப்ரம்மத்தை அறிவிக்கின்றனவென்றால் வேறொன்றாக்கும் இல்லாமே அதற்கேயுள்ள ஓர் அம்சத்தைக் கொண்டுதானே அறிவிக்கவேண்டும். இல்லை யேல், ப்ரம்ம மென்று சொல்லப்பட்ட வஸ்துவானது நாமறிந்துள்ளவற்றைக் காட்டிலும் வேறென வறியப்படமாட்டாதே. ஆக ஒரு லக்ஷணத்தைக் கொண்டு ப்ரம்மத்தை யறிவிக்கவேண்டும். அவ்வாறு அறிவிக்கும் வாக்யம் எது என்று பார்த்தவிடத்தில் தைத்திரீயத்திலுள்ள ஒரு வாக்யம் அத்தகையதென நன்கு விளங்குகிறது. ஏனெனில், 'பிரம்மத்தை எனக்கு அறிவிக்க வேண்டு' மென்று ப்ருகு என்பவன் தன் தந்தையான வருணனைக் கேட்க அவன் சொன்னான்—'எதினின்று இந்த ப்ராணிகள் பிறக்கின்றனவோ, பிறந்தவை எதனாலே ஜீவிக்கின்றனவோ, போகும் காலத்திலே எதிலே லயிக்கின்றனவோ, அதை யறிந்து கொள், அதுவே ப்ரம்ம' மென்றவாறு. ஆக இது ப்ரம்மத்தை யறிவிக்கும் வாக்கியம். இது முன்சொன்னபடி லக்ஷணத்தைக் கொண்டு அறிவிக்கின்றதெனல் வேண்டும். இங்கே பிறப்புக்கும், பிழைப்புக்கும், இறப்புக்கும் காரணமாயிருக்கை என மூன்று தர்மங்கள் கூறப்பட்டுள்ளன. இவை லக்ஷணமென்றால், இதன்மேல் ஒரு விசாரம செய்யவேண்டியதாகிறது. என்னவெனில்—

லக்ஷணமென்பது உபலக்ஷணமாய் லக்ஷணம், விசேஷணமாய் லக்ஷணம் என இருவகைப்படும். அதாவது—எதை யறிவிக்க லக்ஷணம் சொல்லப்படுகிறது, அந்த வஸ்துவை முதலில் காண்பித்துவிட்டு அத்துடன் அறியப்படவேண்டிய தாகாதபடி வஸ்துவுக்கு வெளியிலே நிற்கும் லக்ஷணம் உபலக்ஷணமெனப்படும். உதாரணம்—:பல வயல்கள் உள்ள இடத்திலே தேவதத்தனுடைய வயல் எது என்றறிய விரும்பி ஒருவன் கேட்கும்போது அறிந்தவன் கூறுகிறான்—அதோ கொக்கு உட்கார்ந்திருக்கிறதே, அது தேவதத்தனின் வயலென்றவாறு. பிறகு அவ்வயலைக் குறித்து அவன் நெருங்கு

வதற்கு முன்னமே கூட அக்கொக்கு அப்பால் போய்விடலாம், ஆயினும் முதலில் கொக்குடன் கண்டதாலே கிட்டினவுடன் அதன் நீளம், அகலம், மற்றும் குறிகளை யெல்லாம் கண்டு இது தேவதத்தனின் வயலெனத தெளிந்துவிடுகிறான். இனி அவன் வயலைக் காணும்போதெல்லாம் கொக்குடன் கூடவே காண்ப தென்பதில்லை. ஆகக் கொக்கு உபலக்ஷணமாகி லக்ஷண மாயிற்று. அவ்வயிலிலேயே கூடக் கண்ணிற்படக்கூடிய நீளம், அகலம், மரம், மண்வகை முதலியவற்றில் ஏதேனு மொன்றை லக்ஷணமாக்கினால் அது விசேஷணமாய் லக்ஷணமாகிறது.

இங்குப் பிறப்புக்குக் காரணமாயிருத்தல் முதலான மூன்றை லக்ஷணமாக்கி இவ் வாக்கியம் பிரம்மத்தைக் குறிக்கக் கூடுமா என ஐயமுண்டாகிறது. அதில் குறிக்கவியலா தென்றது ஆக்ஷேபிக்கிறவனின் பக்ஷம். ஏன் இயலாதென் னில்—இந்த தர்மங்கள் உபலக்ஷணமாகவோ விசேஷண மாகவோ பிரம்மத்திற்கு லக்ஷணமாகத் தகாவாகையால் இய லாதென்பது. எனெனில்—உபலக்ஷணமென்று கொண்டால் லக்ஷணமாயிசைந்த அந்த தர்மத்தை விட வேறான ஒரு தர்மத்தை முன் அறிந்து அத்துடன் அந்த ப்ரம்மத்தை யறிய வேண்டும். தேவதத்தன் வயலில் கொக்கு லக்ஷணமானபோது பல தர்மங்கள் அதற்கே ஏற்பட்டவை காணக்கிடைத்தனவே. அவ்வாறு இங்குக் கூறமுடியாது. பிரம்மமென்பது வேறு ப்ரமாணத்தி னு லறியப்படுகிறதன்றே. வேதாந்தத்தைக் கொண்டு தானே அறிகிறோம். அந்த வேதாந்தம் பிறப்புக்குக் காரணமானதென்று அதனை அறிவித்தது. இத் தர்மத்தை யுபலக்ஷணமாக்கிவிட்டால் இதற்கு முன் பிரம்மத்தை யொரு படியு மறியாத நாம் வேறு எந்த தர்மத்தை யெடுத்து இத் தகையது ப்ரம்மமென வறியக்கூடும். இது உபலக்ஷணமாக இசையப்பட்டதால் இத்துடன் சேர்த்து பிரம்மத்தை யறிவ தென்பது கூடாதே. ஆகையால் பிரம்மத்தினிடம் வேறு தர்மத்தை நாம் அறிந்திருக்கவில்லையாகையால் இது உபலக்ஷண லக்ஷணமன்று. இனி விசேஷணமென்னவேண்டும். விசேஷண மென்றால் என்ன? வேறுபடுத்துவது என வதன் பொருள். மொட்டை மாடு, முழுக்கொம்புமாடு என்றால் அந்தந்த மாடு வெவ்வேறாகத் தோற்றுகிறது. ஏன்? அந்தந்த விசேஷணத்தி னால். அது போல் இங்கும் பிறப்புக்குக் காரணமாகை யென்ற தொரு விசேஷணமுள்ள பிரம்மம் வேறு, பிழைப்புக்குக் காரண

மாயிருக்கையாம் விசேஷணமுள்ளது வேறு பிரம்ம மென்றே விளங்கும். வேறுக்குவதென்பது விசேஷணத்திற்கு இயற்கை யிலுள்ளது. உலகில் ஒரே வஸ்துவில் பல விசேஷணங்களை நாம் பார்க்கிறோமே என நினைக்கலாம். அது உண்மைதான். அங்கே ப்ரத்யக்ஷத்திற்கு விரோதம் வாராமைக்காக விசேஷ ணத்துக்கு இயற்கையிலுள்ள ஸ்வபாவத்தை யிழக்க வைத் தோம். பிரம்மமென்பது அங்ஙனம் வேறு வகையில் கண்ட வஸ்துவன்றே. அபூர்வமான வஸ்துவான இதற்குச் சொல் லும் தர்மம் விசேஷணமானால் ஒவ்வொரு விசேஷணமும் தன் தன் வஸ்துவை வெவ்வேறாகப் பிரித்தே வைக்கும். மூன்று தர்மங்கள் இங்கு ஓதப்பட்டன. ஆகையால் விசேஷண பக்ஷ மாகில பிரம்மங்கள் பலவாம் எனவே இவ்வாக்கியம் பிரம் மத்தைக் கூறவியலாதென்க.

இனி ஸித்தாந்தம். எல்லா விசேஷணங்களுக்கும் வேறு படுத்தும் ஸ்வபாவமிருப்பதில்லை. ஒரே வஸதுவில் சேர்ந் திருக்கத் தகாத விசேஷணங்களே அந்தந்த விசேஷணமுள்ள வஸ்துவைத் தனித்தனி வஸ்துவாகக் காண்பிக்கும். கறுத்த செங்கண் யுவாவான தேவதத்தன் என்றால், செங்கண் உடைமை, கருமை, யௌவனமென்ற மூன்றும் ஒரு தேவ தத்தனிடமே சேருகின்றனவே. மொட்டை, முழுக்கொம்பு என்றால் அவை சேரத்தகாத விசேஷணங்கள். ஆகையால் விசேஷண பக்ஷமாகக் கொள்ளலாம்.

உபலக்ஷணமாகச் சொல்வதும் கூடும். வேறு என்ன தர்மத்தை யறிந்திருக்கிறோ மென்னில், ப்ரம்மம் என்ற பதத் திற்கு வியாகரணரீதியிலே பொருள் ஆராய்ந்தால் பெரிதா யிருக்கை, பெரிதாகவாக்கும் தன்மை யென்றாற்போலே பல தர்மங்கள் விளங்குமே. அவையே போதுமே. ப்ரம்மத்தைக் காரணமென்பதாலே ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாயாகாத போது காரணமாகாதாகையாலே அத்தகைய ஜ்ஞானம், சக்தி யென்ற ஆகாரங்களுமுள.

ஆகையால் இவ்வாக்கியம் ப்ரம்மத்தை விளக்கக்கூடும். ஸூத்ரத்தின் பொருளாவது—பிறப்பு முதலியவை இவ்வுல குக்கு எதினின்றோ (அது பிரம்மம்) என்றதாம். இங்ஙனம் விளக்க இவ்வாக்கியம் தகுதியுள்ளதென இதன் கருத்தாம். (2)

---

## 2. *Janmādyadhikaraṇa*

*JANMĀDYASYA YATA: (1-1-2)*

**(Brahman is that) from which the world originates**

*Yata*:=out of which; *Janmādi*=Birth, existence and death; *Asya*=of this Universe.

If *Vēdānta* is to discover to us *Brahman*, it has to make us distinguish It (*Brahman*) from other things by showing a quality existing in It and not found elsewhere. If we search for such definition or *lakshaṇa* we find one in *Taittireeya*:

"From which are born these Beings, by which these Beings (born) live, and in whom at death they enter into and get absorbed, try to know that; that is *Brahman*."

The above is in answer to a question propounded by *Bhṛgu* eager to know *Brahman* to his father *Varuṇa*. Therefore, this must be taken to define *Brahman*. In this definition there are set out three attributes (qualifications) i.e. being the Author (cause) (1) of creation, (2) of existence and (3) of dissolution.

*Lakshṇa* (seperative or distinctive quality) is of two kinds (1) *Upalakshaṇa*, and (2) *Visēshaṇa*. By *Upalakshaṇa* is meant that quality which points out the object in the first instance, but need not be present there at any subsequent time whenever the thing is to be perceived. Thus, a man is told that the field (out of many) on which a crane stands is the field of *Dēvadatta*. Then, the man proceeds to the spot and comes to know the field of *Dēvadatta* by its feautures, length, breadth, etc. so that he is able to identify it subsequently, even though the crane is not there. In this example, the crane is said to be *Upalakshaṇa*.

If in the above example any other visible object such as a tree, well etc. not found in any other field is taken as the defining mark, it is said to be *Viṣēshaṇa* (distinctive feature) as the said feature is always seen in connection with that field.

Then, the inquiry arises as to whether these three attributes or qualities—creation, existence and dissolution are to be classed as *Upalakshaṇa* or *Viṣēshaṇa*. Says the opponent,—These can not be *upalakshaṇa*. For, in such a case, three *Dharmas* (qualities) are neccssary: (1) The *Dharma* that defines (2) The *Dharma* which the object is defined with, and (3) The *Dharma* which has been known in perceiving or understanding the object to be defined. But in the sentence selected, the 3rd of the three *Dharmas* is absent. Because there is the object (i.e. *Brahman*) defined and defining *Dharma* is said to be as the cause of creation, etc. But there is no third *Darma* found here.

Then, as to *Viṣēshana*, it is a feature distinguishing one thing from another. Applying it here, since there are mentioned three *harmas* or characteristics (such as creation, existence and dissolution) and as the function of *Visēshana* is to distinguish one from the other, it will look as if there were three *Brahmans* each with one of the *Viṣēshaṇas*. For example, if a man says, "Bulls with horns and no horns," it conveys the meaning that there are two bulls one with horns and the other with no horns. One may well ask that, in the world, several qualities are found in one and the same object, such as, *Dēvadatta* is young, black and with copper colour and red eyes. The several qualities, youth, blackness and red- eyeness though they are *Viṣēshaṇas* are seen by our own eyes as co-existing in a certain single person. But we do not apply the above rule of *Visēshaṇa* here, lest it should offend our visual perception. But in the case of *Brahman* no visual perception is possible. Hence we can not escape applying the usual *Viṣēshaṇa* rule. Therefore, continues the opponent, we must conclude there would be three *Brahmans*. That conclusion is not accepted by *Vedāntins*.

It follows therefore that the qualities mentioned in the sentence can not be said to be a definition of

*Brahman*. So it is argued that *Vēdāntas* are not authority for establishing *Brahman*.

The answer is that these qualities may be taken under both the qualifications *Visēshāṇa* and *Upalakshaṇa*. First of all, it is not the rule that a *Visēshaṇa* mentioned should not co-exist with another *Viṣēshaṇa*. The true function of *Viṣēshaṇa* is to distinguish the object from another having a *Visēshaṇa* opposed to it, such as youth from oldness, blackness from whiteness, etc. This is the rule of co-existence. This rule is applicable in all cases even in cases of actual direct perception with our own eyes. Since the three qualities mentioned, i.e., powers to create, sustain and dissolve are not opposed to each other, all of them can exist together in one in defferent times.

As regards *Upalakshaṇa*, it is not correct to say in the sentence defining *Brahman* as Creator, etc. there is no third *Dharma* known without which *Brahman* can not be defined. If we subject the word *Brahman* to a literal analysis, two characteristics are found, one the power to be big, and the other the power to make others big. Besides, from the fact that *Brahman* being said to be a creator etc. of the universe arises an implication of all powerfulness and all knowingness, for without such qualities *Bṛahman* can not be the cause etc. of this Universe. These qualities may be treated as the third qualification necessary for *Upalakshaṇa*, the other two necessary parts being (1). being the author of creation, etc. and (2) **निरतिशय बृहत्वं** *Niratisaya Bṛhatva* Unsurpassed Bigness (greatness).

So *Brahman* can be defined with *Lakshaṇa* and that can be learnt from *Vedāntas*. (2)



अनावृत्तिः शब्दादनावृत्तिः शब्दात् ४-४-२२

अस्य मुक्तस्यानावृत्तिः शब्दादवगम्यते; यथा "यतो वा इमानि भूतानि जायन्ते", "सोऽकामयत बहु स्यां प्रजायेयेति", "यः पृथिवी-मन्तरो यमयति", "य आत्मानमन्तरो यमयति" इति शब्दात् परम-पुरुषस्य स्रष्टृत्वं नियन्तृत्वं चावगम्यते—तथा "एतेन प्रतिपद्यमाना इमं मानवमावर्तं नावर्तन्ते", "मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम्। नाप्नुवन्ति महात्मानस्संसिद्धिं परमां गताः॥ आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन। मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते", "इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः। सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च" इति शब्दादेवैनं कदाचिदपि नावर्तयतीत्यवगम्यते। सूत्रावृत्तिस्तु शास्त्रपरिसमाप्तिं द्योतयतीति सर्वं समञ्जसम्॥ २२॥

इति जगद्व्यापारवर्जाधिकरणम्॥ ६॥

इति श्रीभगवद्रामानुजविरचिते वेदान्तदीपे

चतुर्थस्याध्यायस्य चतुर्थः पादः॥ ४॥

॥ समाप्तश्चाध्यायः॥ ४॥

शास्त्रं च परिसमाप्तम्॥

वेदान्तदीपः संपूर्णः

———

श्रीमते भगवद्रामानुजाय नमः॥

श्रीरस्तु। शुभमस्तु।

———

ஸ்ரீ:

# ப்ரம்ம ஸூத்ரம்—வேதாந்த தீபம்

## (2-ம் அத்தியாயம்—முதற்பாதம்)

முதல் அத்தியாயத்தில் ப்ரஹ்மம் ஜகத்காரணமென்றே வேதாந்த வாக்கியங்கள் கூறுகின்றனவென நிரூபிக்கப் பெற்றது. காரணத்வாத்யாயத்திற்குப் பிறகு அவிரோதாத்யாயம். ப்ரம்மகாரணத்வமென்ற கீழ்ச்சொன்ன விஷயத்திற்கு ஒரு விதத்திலும் விரோதமில்லையென இங்கே விளக்கப்படும். இங்கு முதற்பாதத்தில் கபிலாதிகளின் ஸம்ருதியாலோ, யுக்தியாலோ ப்ரம்ம காரணத்வத்தை பாதிக்கலாகாதென்றது அறிவிக்கப்படும். முதலில் கபிலஸ்ம்ருதியைக் கொண்டு கீழ்ச்சொன்ன வேதாந்தார்த்தத்தை அசைக்க முடியாதென்கிறது.

(1) ஸ்ம்ருத்யதிகரணம்

**ஸ்ம்ருத்யநவகாசதோஷப்ரஸங்க: இதி சேத் ந—அந்யஸ்ம்ருதி-அநவகாசதோஷப்ரஸங்காத். 2–1–1.**

வேதத்திற்கு விருத்தமான ஸ்ம்ருதியை ஆதரிக்கலாகாதென்று பூர்வமீமாம்ஸையிலே நிரூபிக்கப்பட்டது. ஆனலும் ஸ்ம்ருதியின் உதவியின்றி வேதார்த்தத்தை நிர்ணயிக்க முடியாத இடங்களில் ஸ்ம்ருதியை விடமுடியாது. பலகிளைகளான வேதாந்தங்களுக்கு எத்தகைய தத்துவத்தைச் சொல்வதில் நோக்கென்பது மந்தமதிகளான நம்மால் ஸ்ம்ருதியின் உதவியின்றி முடிவு செய்யப்படமாட்டாதாகையால் ஸ்ம்ருதிகளை யாராய இழிந்து, மனு முதலானருடைய ஸ்ம்ருதிகளைக் கொள்வதா, கபிலஸ்ம்ருதியான ஸாங்க்ய சாஸ்த்ரத்தைக் கொள்வதா என விசாரிக்குமளவில், மந்வாதி ஸ்ம்ருதிகளுக்கு தர்மங்களைத் தெளிவிப்பதென்ற பயன் இருப்பது போல் கபிலஸ்ம்ருதிக்கு வேறு பயன் இல்லையாகையால் அது தத்துவத்தையே சொல்லுவதால் அதன்படி தத்துவநிலையைக் கொள்ளாதபோது அந்த ஸ்ம்ருதி ஒருவிதத்திலும் பயன்படாதொழியுமாகையால் கபிலஸ்ம்ருதியைக் கொண்டே வேதாந்தங்களுக்கு அர்த்தம் தெளிய வேண்டும். ஆகையால் அதன்படி ப்ரக்ருதியே ப்ரதான காரணம்; ப்ரம்மமன்று—என்றது பூர்வபக்ஷம்.

தர்மங்களெல்லாம் பரப்ரம்மத்தின் ஆராதனமாக நிற்கின்றன என்று நிருபிப்பதற்காகவே மந்வாதிஸ்ம்ருதிகள் வந்ததாலே பரப்ரம்மத்தைச் சொல்வதிலும் அந்த ஸ்ம்ருதிகளுக்கு நோக்கானதால் அத்தனை ஸ்ம்ருதிகளை உபேக்ஷியாமைக்காக அவற்றை யாதரித்து கபிலஸ்ம்ருதி யொன்றைப் புறக்கணிப்பதே நியாயமாகும். எல்லா தர்மங்களும் ஸகல தேவதைகளுக்கும் அந்தர்யாமியான ஸ்ரீமந் நாராயணனுக்கு ஆராதனங்களாம். (1)

**இதரேஷாம் ச அநுபலப்தே:** **2–1–2.**

இந்திரியங்களுக்கு இலக்காகாதவற்றையும் ப்ரத்யக்ஷமாகக் காணும்சக்தியுடைய கபிலருக்குப் புலப்படாத ப்ரம்மத்தை இசைவது கூடுமோ என்னில், அத்தகைய சக்திபெற்ற மந்வாதிகள் காணாத ஸ்வதந்த்ரமான ப்ரக்ருதி முதலான வஸ்துக்களை இசைவது கூடுமோ? ஆகையால் கபிலருடைய ஸாக்ஷாத்காரமே அப்ரமாணமாகும். (2)

(2) *யோகப்ரத்யுக்த்யதிகரணம்*

**ஏதேந யோக: ப்ரத்யுக்த:** **2–1–3.**

ஈச்வரனை யடியோடு இசையாத கபிலமதம் அப்ராமாணிக்மானாலும் ஈச்வரனை யிசைந்த யோகமதம் ஸர்வவேதப்ரவர்தகனாய் ப்ரம்மாண்டாதிபதியான பிரமன் (ஹிரண்யகர்ப்பன்) ப்ரசாரம் செய்த மதமாகையால் அந்த ஸ்ம்ருதியைக் கொண்டு வேதாந்தத்திற்குப் பொருள் கூறவேண்டுமென்பதும் இங்ஙனமே நிராகரிக்கப்பட்டதாகும். பிரமனும் ஒரு ஜீவனே. ப்ராந்தி என்பது அவனுக்கும் உண்டு. ஆகையால் வேதாந்தத்தின் ஸ்வரஸ அர்த்தத்திற்கு விருத்தமான ஸ்ம்ருதி உதவாது. (3)

(3) *நவிலக்ஷணத்வாதிகரணம்*

வேதத்திற்கும் பொருள் உரைக்க யுக்தியை உதவியாகக் கொள்ளவேண்டுமென்பது எல்லோரும் இசைந்த விஷயம். முன் அத்யாயத்தில் முடிவு செய்தபடி பிரம்மம் ஜகத்காரண மென்றது யுக்திக்குப் பொருந்தவில்லை. ஆகையால் கபிலமதமே பொருந்துவதால் சிறந்ததாகும். வேதாந்தத்திற்கும் அதன்படியே பொருள் கொள்ளவேண்டும் என்று பூர்வபக்ஷம் செய்யப்படுகிறது—

**ந விலக்ஷணத்வாத் அஸ்ய ததாத்வம் ச சப்தாத்** **2–1–4.**

காரணமும் கார்யமும் ஒத்திருக்கவேண்டுமென்பது உலகப்ரஸித்தமாம். ஜடமாயும் துக்கரூபமுமான ப்ரபஞ்சத்

திற்கு ஸர்வஜ்ஞமாயும் ஸுகரூபமுமான ப்ரம்மம் காரணமாக மாட்டாது. ஸாங்க்யர் இசைந்த மூலப்ரக்ருதியே காரணமாகும்.

ப்ரபஞ்சமும் ஜ்ஞானரூபமாயிருக்கட்டு மென்ன வொண்ணுது. 'விஜ்ஞாநம் ச அவிஜ்ஞாநம் ச', 'அநீசயா சோசதி முஹ்யமாந:' என்று வேதம் கூட ப்ரபஞ்சம் அஜ்ஞானரூபமாயும் துக்கரூபமாயு மிருப்பதை ஓதுகின்றதே. மண், நீர், நெருப்பு போன்ற பூதங்களை ஜ்ஞான முள்ளனவாக இசையக்கூடுமோ? (4)

ஆகில், 'நீர் ஆசைப்பட்டது', 'மண் பேசிற்று' என்ற வாறுள்ள வேதவாக்யங்கள் பூதங்களுக்கும் ஜ்ஞானம் இருப்பதாக அறிவிக்கின்றனவே என்ன வேண்டா—

அபிமாநிவ்யபதேச: து விசேஷாநுகதிப்யாம். 2–1–5.

அந்த வேத வாக்யங்களிலே வெறும் நீர் மண் முதலியன சொல்லப்படுகிறன வல்ல. நீர்முதலானவற்றிற்கு அபிமானிகளான தேவதைகளே அவை சொல்லும். 'இந்த மூன்று தேவதைகளினுள் புகுந்த', 'இந்தத் தேவதைகளில் ஒவ்வொன்றும் தானே சிறந்ததென்று விவாதப்பட்டன' என்று ஆங்காங்கு தேவதையென்ற சொல்லைச் சேர்த்திருப்பதாலும், 'அக்னி முதலான தேவதைகள் வாக்கு முதலானவற்றினுட்புகுந்தன' என்று அனுப்ரவேசம் ஸ்பஷ்டமானதாலும் இங்ஙனமாகுக. ஆகையால் 'நீர் ஆசைப்பட்டது' என்றதுபோன்ற வாக்கியங்களைக் கொண்டு பூதங்களையே அறிவுள்ளனவாகக் கொள்ளலாகாது. அவை அசேதனங்களே. அவற்றிற்குக் காரணமும் அசேதனமாகவே யிருக்க வேண்டும். (5)

இனி ஸித்தாந்தம்—த்ருச்யதே து 2–1–6.

கார்யமும் காரணமும் ஒத்திராமலிருப்பதும் ப்ரத்யட்சமாயிருக்கின்றதே. தேனினின்று பூச்சிகளும், சாணத்திலிருந்து தேளும் இப்படி பல உண்டாகின்றன. ஆகையால் சேதநாசேதநங்களும் கார்யகாரணங்களாகலாம். (6)

அஸத் இதி சேத் ந ப்ரதிஷேதமாத்ரத்வாத் 2–1–7.

காரணமும் கார்யமும் விலக்ஷணமாயிருக்கலா மென்றிசைந்தால் அஸத்கார்யவாதமாம். அது தார்க்கிகர்களுடையது. வேதாந்திகளும் ஸாங்க்யரைப் போல் ஸத்கார்யவாதிகள், ஆகையால் அசேதநங்களான மண்முதலானவற்றிற்குச் சேதநம் காரணமென்ருல் அசேதநம் முன் இல்லை

யென்றதாகிறபடியால் அஸத்கார்யவாதமாகு மென்ன வேண்டா. கார்ய காரணங்களுக்கு ஒத்துமை வேண்டா மென இவ்வளவே நாம் சொல்வது. கார்யமான த்ரவ்யமும் காரணமான த்ரவ்யமும் ஒன்றே என்பதை நாம் மறுக்க வில்லை. ஆகையால் அஸத்கார்யவாத மாகாது. (7)

விஞ — அபீதௌ தத்வத்ப்ரஸங்காத் அஸமஞ்ஜஸம் 2-1-8.

ப்ரம்மத்தினிடமே இந்த ப்ரபஞ்சம் லயிக்கிறதென்று ப்ரம்மமென்ற த்ரவ்யத்தையும் ப்ரபஞ்சத்ரவ்யத்தையும் ஒன்ருகக் கொண்டால் ப்ரபஞ்சம் ஜடமாய், பாபம்முதலிய தோஷமுள்ளதுமாயிருப்பதனுலே ப்ரம்மமே அவ்வாருகும். அப்போது ப்ரம்மம் ஸர்வஜ்ஞமானது, ஸர்வதோஷங் களுமற்றதென்ற வேதமெல்லாம் கெட்டுவிடுமே. (8)

விடை—ந து த்ருஷ்டாந்தபாவாத் 2-1-9.

ப்ரம்மத்திற்கு தோஷங்கள் வாரா. உதாரணத்தில் ஊன்றி இதனை யுணர்ந்துகொள்ளவேண்டும். ஜீவன் மனிதனுகப் பிறந்தான், பாலனுய் யுவாவாய் கிழவனுமாகிருன் என்கிருேம். இந்தப் பிறப்பு, பால்யம், இளமை, முதுமை யெல்லாம் உடலைச் சேர்ந்தன; ஜீவனைச் சார்ந்தன வல்ல. ஜீவனிடம் அதன் மூலமான ஸுகம் துக்கம் முதலியனவே உள. அதுபோல் சேதநாசேதநங்களை உடலாக உடைய ப்ரம்மம் பூதங்களாகப் பிறந்து பல வாகின்றதென்ருல் அதன் உடலான சேதநாசேதங்களுக்கே அந்த மாறுதல் களெல்லாம் சேரும். ப்ரம்மம் என்றும் ஸர்வஜ்ஞமாய் தோஷமற்றதாய் அவற்றை நியமித்துக்கொண்டு அதனு லான லீலாரஸத்தை யனுபவியாநிற்கும். ஆகையால் தத்துவம் மூன்று எப்போது மிருக்கின்றன என்றிசைந்தாருடைய ஸித்தாந்தத்திலே குறை கூறவொண்ணுது. (9)

ஸ்வபக்ஷதோஷாச் ச 2-1-10.

ஸாங்க்யமதத்திலே தோஷமிருப்பதாலும் அதனை விட வேண்டும். சுத்தமாய் ஒரு விகாரமு மில்லாத ஜீவனிடத்தில் ப்ரக்ருதியானது தன் தர்மங்களை ஏறிட மாட்டாது. 'ஜீவன் அருகில் இருப்பதாம் ஸந்நிதானம் மட்டும் போதாது. ஒருவிதமான விகாரமும் (மாறுதலும்) வேண்டு' மென்னில், விகாரமென்பது தர்மங்களை ஏறிட்டபிறகன்ருே உண்டாவது. அது முதலில் எப்படியிருக்கும் ? (10)

தர்க்காப்ரதிஷ்டாநாத் அபி 2-1-11.

யுக்தியை ப்ரதானமாகக்கொள்வதும் சரியன்று. அது நிலைக்காது. பௌத்தாதிகளின் தர்க்கங்களும்யுக்திகளே. (11)

**அந்யதா அநுமேயம் இதி சேத்—ஏவம் அபி அநிர்மோக்ஷ ப்ரஸங்க: 2–1–12.**

பௌத்தர்முதலானோரின் தர்க்கங்களால் தொலையாதபடி சரியான தர்க்கங்களைக் கொண்டு ஸாங்க்ய மதத்தை ஸ்தாபிக்கிறோமென்னவேண்டா. அதற்கு மேற்படவும் தர்க்கங்களை எடுத்துரைக்க வல்லரும் அவ்வாறே கிடைப்பர்.(12)

(4) *சிஷ்டாபரிக்ரஹாதிகரணம்*

**ஏதேந சிஷ்டாபரிக்ரஹா: அபி வ்யாக்யாதா: 2–1–13.**

யுக்திவாதமான ஸாங்க்யமதத்தை நிராகரித்தபடியே வைதிகர்களாலே ஆதரிக்கப்படாத மற்ற மதங்களும் நிராகரிக்கப்பட்டனவாம். மூலப்ரக்ருதியைக் காரணமாகக் கொண்ட மதங்களைக் காட்டிலும் பரமாணுக்களைக் காரணமாகக் கொண்ட மதங்கள் பலவானபடியாலே அவற்றை யாதரிப்பது நல மென்னவேண்டா. வெறும் யுக்திவாதம் எத்தனை பேர் சேர்ந்து செய்தாலும் பொருந்தாது. மேலும் அவர்களும் அந்தப் பரமாணுக்களை ஒரேவிதமாக இசையவில்லை. ஒவ்வொருவர் சொல்வதிலும் வேறுபாடு இருக்கிறது. (13)

(5) *போக்த்ராபத்யதிகரணம்*

**போக்த்ராபத்தே: அவிபாக: சேத் ஸ்யாத் லோகவத் 2–1–14.**

சேதநாசேதநங்களை உடலாக உடையது ப்ரம்மமென்றால் உடலை யுடைய ஜீவனைப் போல் அதுவும் ஸுகதுக்கங்களை யனுபவிக்கவேண்டியதாகுமென்னில், இதற்கு உலக ரீதியிலேயே மறுமொழியாம். ஓர் அரசன் தான் உடல் உடையவனுகவே யிருந்து ப்ரஜைகளை யாள்கிறான். உடலுள்ளமை எல்லோருக்கும் பொதுவானாலும் அவனுடைய ஆஜ்ஞைப்படி நடப்பவர் ஸுகத்தையும், மீறினவர் துக்கத்தையு மனுபவிப்பதும், அவன் மட்டும் அந்த ஆஜ்ஞைக்கும் ஸுகதுக்கங்களுக்கும் ஆளாகமலிருப்பதும் கண்டுளோம். அதுபோல் உடல் இருந்தும் பிரம்மம் ஸாதுக்களுக்கு ஸுகத்தையும், துஷ்டர்களுக்கு துக்கத்தையும் கொடுத்துக் கொண்டு தான் அந்த ஸுகதுக்கமில்லாமலிருக்கிறதென்க. ப்ரம்மத்திற்கு சரீரம் இந்த ஆஜ்ஞையின் பலனை யனுபவிக்க வந்ததன்றே. இப்படியே உடல் இருக்கச் செய்தேயும் முக்தர்களுக்கு துக்கம் இல்லையே. (14)

(6) *ததநந்யத்வாதிகரணம்*

**ததநந்யத்வம் ஆரம்பணசப்தாதிப்ய: 2–1–15.**

கார்ய த்ரவ்யமும் காரண த்ரவ்யமும் ஒன்று என்ற ஸித்தாந்தத்திற்கேற்ப ஸாங்க்யாதிகளின் ஆக்ஷேபங்கள் பரிஹரிக்கப்பட்டன. அப்படியொன்றென்ற பக்ஷம் சரியன்றென்கிருன் தார்க்கிகன். அவனது கொள்கை இங்கே நிராகரிக்கப்படுகிறது. அவன் சொல்வதாவது—மண்ணும் குடமும் ஒன்ருனல் மண்ணைப் பார்த்து இது குடம் என்ன வேண்டும். அதில் குடமென்கிற புத்தியும், சொல்லும் பிறப்பதில்லையாதலால் அததற்கேற்பட்ட புத்தியும் வெவ்வேருய் சொல்லும் வெவ்வேருயிருப்பது முதலான யுக்திகளாலே காரணம் வேறு கார்யம் வேறு என்று கொள்ளவேண்டும். இல்லையேல்—காரணமே கார்யமாகில், மண்ணே குடமென்னில், குடம் செய்யக் குயவன்முதலானவர்கள் வேணடுமென்பதேன் என்றவாறு. ஸித்தாந்தமாவது—"குடம் முதலிய உருக்களையும் சொற்களையும், தண்ணீர் கொணர்வது முதலான கார்யங்களுக்கும் அக் கார்யங்களுக்கு உரியனவற்றையே அறிவதற்குமாக மண் போன்ற காரணவஸ்துவே பெறுகின்றதே. குடத்தை இது மண் எனக் கொள்வதை நிராகரிக்க முடியாது" என்று கூறும் வேத வாக்யங்களும், மற்றும் காரணத்தையும் கார்யத்தையும் ஒன்ருக அறிவிக்கும் வாக்கியங்களும் பல உள. ஆகையால் வெவ்வேறென்னவொண்ணுது. சொல் வேறு, புத்தி வேறு, குயவன் முதலான காரணவ்யாபாரம் வேண்டியிருப்பதென்றவையெல்லாம் ஒரே த்ரவ்யத்தில்முன் இருந்த உருவைக்காட்டிலும் வேருேர் உருவத்தைப் பற்றியே யாகையால் த்ரவ்யமொன்றென்று கொண்டே எல்லாம் நிர்வஹிக்கபபடும். (15)

பாவே ச உபலப்தே; 2-1-16.

குடம் முதலியவற்றைக் காணும்போது இது மண் என்று காரணத்ரவ்யம் காணப்படுகிறதே. (16)

ஸத்வாத் ச அபரஸ்ய 2-1-17.

'இக்குடம் முதலியன நாம் காலையில் பார்க்கும்போது வெறும் மண்ணுயிருந்தன' என்று மண்ணைக் குடம் முதலியனவற்ருேடு ஒன்ருக நினைக்கிருேமே. (17)

அஸத்வ்யபதேசாத் ந இதி சேத்-ந, தர்மாந்தரேண வாக்யசேஷாத் யுக்தே: சப்தாந்தராத் ச 2-1-18.

ப்ரளயத்தில் இவ்வுலகு அஸத்தாக (இல்லாமல்) இருந்தது' என்ற வாக்யத்தினுல் அஸத்கார்யவாதம் ஏற்படுகிறதென்னவேண்டா. அங்கு அஸத் என்பதற்கு இந்த த்ரவ்யமே யில்லை யென்ற பொருள் இல்லை. இப்போதுள்ள

ஸ்தூலதசை யின்றி ஸூக்ஷ்மதசையே அப்போதிருந்ததால் உலகிலிப்போது காணும் உரு இல்லாமையைக் கொண்டு அவ்வாறு சொல்லப்பட்டது. ஏனெனில், 'அந்த இல்லாத வஸ்துவே இருக்கவேண்டுமென்று ஸங்கல்ப்பம் செய்தது' என்று மேலே யுள்ளதே. அது அடியோடில்லையாகில் ஸங் கல்ப்பம் செய்வதுதான் எப்படி யாகும்? மேலும் குடம் இருக் கிறதென்றால் குடமாகிற உரு இருப்பதாகவும், குடமில்லை யென்றால் குடமாவதற்கு வேண்டும் மண்ணுண்டை யுருவோ, குடமழிந்தபிறகு வரும் பொடி முதலியனவோ இருப்பதாகவுமே கருத்தாம். மேலும் இவ்வுலகம் ப்ரளயத் தில் ஸத்தாயிருந்ததென்றும் வேதமே மற்றோரிடத்தில் சொல்லுகிறதே, ஆகையால் த்ரவ்யம் எப்போதும் உள்ள தேயாகும். (18)

**படவத் ச 2-1-19.**

நூற்களே குறுக்கும் நெடுக்குமாகச் சேர்க்கப்பட்டு துணி என்னப்படுகிறன வென்பது அனுபவஸித்தம். (19)

**யதா ச ப்ராணாதி: 2-1-20.**

ஒரு ப்ராணவாயுவே ப்ராணம், அபானம், வ்யானம் என்றவாறு பலவாகச் சொல்லப்படுகின்றது. அதுபோல் ஒன்றே பல மாறுதலும் பல பெயரும் பெறும். ஆக ப்ரம்ம மும் பல ப்ரபஞ்சமு மொன்றாகும். (20)

(7) இதரவ்யபதேசாதிகரணம்

**இதரவ்யபதேசாத் ஹிதாகரணாதிதோஷப்ரஸக்தி: 2-1-21.**

ப்ரம்மம் ஜகத்காரணமாகில், ப்ரம்மமும் ஜீவனுமொன் றென்று ப்ரமாணங்களிலேற்படுவதால் ஜீவன் பல துக்கங் களை யனுபவிப்பதால் ப்ரம்மம் தனக்கு ஹிதத்தைச் செய்து கொள்வதில்லை, அஹிதத்தைச் செய்துகொள்ளுகிறதென்று சொல்லும்படி ஆமே என்றது பூர்வபக்ஷம். இதற்காக ப்ரம்மம் வேறு ப்ரபஞ்சம் வேறென்ன வொண்ணாது. கீழ் அதிகரணத்தில் ஒன்றென ஸ்தாபிக்கப்பெற்றதே. இயற் கையிலே அவ்விரண்டும் வெவ்வேறாகில் இப்பூர்வபக்ஷம் பிறவாது ; அத்தகைய பேதம் இசையப்படவில்லையே.

பாஸ்கரமதத்திலே ஜீவப்ரம்மங்களுக்கு அபேதத்தை இயற்கையாகக்கொண்டு பேதமும் ஔபாதிகமாக விசையப் பட்டது. அப்போதும் இந்த பூர்வபக்ஷம் பரிஹரிக்கமுடியா ததே. ஏதோ வொரு காரணத்தால் பேதம் இயற்கையின்றி ஏற்பட்டதானாலும் உண்மையில் அபேதம் இருப்பதால் ஸர் வஜ்ஞமான ப்ரம்மமானது தன்னோடு ஒன்றானவன் ஜீவ

னென்று தான் அறிந்திருப்பதால் அந்த ப்ரம்மம் ஜீவனுடைய துக்கத்தைத் தன் துக்கமாகவே நினைத்தாகவேண்டுமாகையால் தனக்குத் தான் அஹிதம் செய்துகொண்டதாகும். சாங்கரமதத்திலே, 'ஜீவப்ரம்மங்களுக்கு உண்மையில் எவ்விதமாகவும் பேதமில்லை. அஜ்ஞானத்தாலே பேதம் ஏற்படப்பட்டதேயாகையால் பேதம் பொய்யே' எனப்படுகிறது. அப்போது ஜீவன் தனது அஜ்ஞான பலத்தினுலே பேதத்தைக் கற்பித்துக்கொண்டாலும் அந்த ஜீவனுக்கும் தனக்கும் அபேதமிருப்பதை ப்ரம்மம் அறிந்திருப்பதாலே தனக்கு அஹிதத்தைத் தானே செய்துகொண்டதாகும். ஜீவனுக்கு அஜ்ஞானமிருப்பதென்றனர் சில அத்வைதிகள். ப்ரம்மத்திற்கே அஜ்ஞானமென்றனர் மற்றவர். அந்த ப்ரம்மாஜ்ஞானபக்ஷமாகில் எல்லா தோஷங்களும் ப்ரம்மத்திற்கேசேர்ந்துவிடும். தனக்குத் தானே ப்ரகாசித்துக்கொண்டிருக்கும் ப்ரம்மத்தினிடம் அஜ்ஞானம் சேரவும் அதன்மூலம் ப்ரபஞ்சகல்ப்பனமும் கூடா. ப்ரமத்திற்குள்ள தன் ப்ரகாசமும் அஜ்ஞானத்தால் மறைக்கப்பட்டதென்னில்—ப்ரகாசமாவது ப்ரம்மத்திற்காட்டிலும் வேறன்று; அதன் மறைவும் அதன் அழிவு தவிர வேறன்று, ஆக ப்ரம்மமே அஜ்ஞானத்தினுல் அழிந்து விட்டதென்றதே யாம். விரிவு ஸ்ரீபாஷ்யத்தில்.

ஆகையால் ப்ரம்மம் ஜீவனுடன் ஒன்றுனது பற்றித் தனக்குத் தானே கேட்டைப் ப்ரம்மம் செய்துகொண்டதாமே என்று பூர்வபக்ஷியின் அபிப்பிராயமாம்— (21)

ஸித்தாந்தம்—ஸர்வேச்வரன் தான் மாயைக்கு வசப்படாமல் மாயையைக் கொண்டு ஜீவர்களை ஸ்ருஷ்டிக்கிருனென்றும் ஜீவனே பலனை யனுபவிப்பவன், ஈச்வரன் பலனை யுண்ணுமல் சிறந்து விளங்குகிருனென்றுமெல்லாம் பேதமும் ஓதப்பட்டதால் பிரம்மம் வேறு, ஜீவன் வேறு. இருவருக்கும் சரீராத்மபாவம்—உடலுமுயிருமாயிருக்கையே ஸம்பந்தம். உலகும் ப்ரம்மமும் ஒன்று என்பதற்கு என்ன பொருள் என்றுல்,—ஸூக்ஷ்மங்களான சேதநாசேதநங்களை உடலாக உடையதாயிருந்து ப்ரம்மமானது ஸ்த்தூல சேதநாசேதநங்களை யமைத்து ஸ்தூலங்களை உடலாக உடைய ப்ரம்மமாக ஆனதால் உலகு என்ற சொல்லுக்கே ஸ்தூல சேதநாசேதங்களோடுசேர்ந்த ப்ரம்மம் என்றதே பொருளாம். இப்படி ஸூக்ஷ்மவிசிஷ்ட பரம்மமும் ஸ்தூலவிசிஷ்ட ப்ரம்மமும் ஒன்றென்றே முன்அதிகரணத்திற் சொன்னதாகும். அதனுல் உடலான சேதநாசேதநங்களும் உயிரான

ப்ரம்மமும் ஒரு வஸ்து வாகா. நாமும் நமது உடலும் ஒன்றென்ன முடியுமோ? இந்த ஸித்தாந்தத்தை வெளியிடு வது மேல்ஸூத்ரங்கள்—

**அதிகம் து பேதநிர்தேசாத்: 2-1-22.**

ப்ரம்மம் ஜீவனைக்காட்டிலும் வேறே. வேறு என்று சொல்லப்பட்டிருப்பதால். (22)

**அச்மாதிவத் ச ததநுபபத்தி: 2-1-23.**

கல், கட்டை, மண்கட்டி முதலானவைகள் எவ்வாறு ப்ரம்மமாகமாட்டாவோ, அவ்வாறே ஜீவனும் ப்ரம்மமாகமாட்டிலன். ஆகச் சேதநாசேதநங்களுக்கு மேலாகவே ப்ரம்மத்தைக் கொள்ளவேண்டும். (23)

(8) *உபஸம்ஹாரதர்சநாதிகரணம்*

**உபஸம்ஹாரதர்சநாத் ந இதி சேத் ந க்ஷீரவத் ஹி 2-1-24.**

உலகில் காரணமான வஸ்து பல கருவிகளின் உதவி பெற்றே காரணமாவதாகக் கண்டிருப்பதால் ப்ரம்மத்திற்கு அவ்வித ஸஹாயமொன்று மில்லாமையால் அது காரணமாகாதென்ன வேண்டா. பால் ஒன்றுமின்றி தயிருக்குக் காரணமாவதுபோல் ஆகலாமே. (24)

**தேவாதிவத் அபி லோகே 2-1-25.**

தேவதைகளும் ரிஷிகளும் ஓர் உதவி யின்றி ஸங்கல்பமாத்திரத்தாலே பல ஸ்ருஷ்டி செய்வதைக் காணுநின்றோம்; அது போலாம் இது சாஸ்திரஸித்தமான அவ்விஷயத்தை இசைந்த ஸாங்க்யாதிகளுக்கு—ப்ரம்மத்திற்கு வல்லமையை யிசைவதில் என்ன தடை? (தேவதைகளும் ரிஷிகளும் அவ்வாறு செய்வது அக்காலத்தில் காணும்படியுமிருந்ததாலும் அதைத் த்ருஷ்ாந்தமாக்கின.) (25)

(9) *க்ருத்ஸ்நப்ரஸக்தி—அதிகரணம்*

**க்ருத்ஸ்நப்ரஸக்தி: நிரவயவத்வசப்தகோபோ வா 2-1-26.**

ப்ரம்மம் நிரவயவ மென்று வேதம் ஓதுகிறது. ப்ரளய காலத்தில் அது நிரவயவமென்று ஏகமென்கிறசொல்லாலும் தெளியலாம். அத்தகையது காரணமானல் கார்யத்திலேயே முழுப்ரம்மமும் இழிந்துவிட்டதால் காரணம்சம் தனியாக இருக்கமாட்டாது. மேலுமொரு கார்யத்திலேயே முழுப்ரம்மமும் இழிந்துவிடும். இதற்காக அதை அவயவங்களுள்ளதாகக் கொண்டால் நிரவயவமென்ற சாஸ்த்ரவிரோதம். ஆகையால் ப்ரம்மம் காரணமன்று என்றது பூர்வபக்ஷம். (26)

ஸித்தாந்தம்—ச்ருதே: து சப்தமூலத்வாத் 2-1-27.

எந்தெந்த ப்ரமாணத்தாலே எந்தெந்த வஸ்து ஸித்திக்கிறதோ, அந்தந்த வஸ்துவை அந்தந்த ப்ரமாணம் காட்டுகிறபடியிலே நாம் கொள்ளவேண்டுமே யல்லது நம் இஷ்டப்படி ஏதேனும் கொள்ளலாகாது. ப்ரம்மம் வேதத்தினின்றே அறியப்படும் வஸ்து. அது ப்ரம்மத்தை அவயவங்களில்லாததாகவும் கார்யகாரணங்களாகவும் சொல்லும்போது அதன்படியே அதனை நாம் கொள்ளவேண்டும். வேதம் மட்டும் முரண்படுமாறு சொல்லுமோ என்னவேண்டா. இவ்வாறு சப்தம் சொல்லக்கூடுமே; இதிலென்ன முரண்பாடு? (ஒன்றையே கொண்டு இது உண்டு இது இல்லையென்று (भाव) பாவம் அபாவம் இரண்டையும் சேர்த்துச் சொன்னாலன்றோ முரண்பாடு. ப்ரம்மம் ஸாவயவமும் நிரவயவமும் என்று வேதம் சொல்லவில்லையே. உலகில் நிரவ்யவமானது காரணகார்யமாக நம்மால் பார்க்கப்படவில்லையென்பதற்காக ப்ரம்மம் அப்படியிருக்கலாகாதென்னலாமோ?(27)

ஆத்மநி ச ஏவம் விசித்ரா: ச ஹி. 2-1-28.

அசேதனங்களைப் போலன்றி யிருக்கை ஜீவாத்மாவினிடமுமுளதே. அசேதனங்களும் ஒன்றேடொன்று ஒத்திருக்கவில்லையே. (28)

ஸ்வபக்ஷதோஷாத் ச. 2-1-29.

ப்ரக்ருதி முதலானவற்றைக் காரணமாகச் சொல்லும் ஸாங்க்யாதிபக்ஷங்களிலே இந்த தோஷமுளதே. யுக்தியினலேயே ஸ்தாபிக்கப்படும் அந்த வஸ்துக்களுக்கு அனுபவ விருத்தமான தன்மையை யுக்தியானது ஸ்தாபிக்கமாட்டாது. (29)

ஸர்வோபேதா ச தத்தர்சநாத். 2-1-30.

லோகாதீதமான ப்ரம்மம் எல்லா சத்தியுமுடையதாம். அவ்வாறே, 'பலவிதமான சிறந்த சக்தி இதற்கு' என்றெல்லாம் வேதம் ஓதுகிறதே. (30)

விகரணத்வாத் ந இதி சேத் தத் உக்தம். 2-1-31.

கரணகளேபரங்களில்லாத ப்ரம்மம் ஸ்ருஷ்டிக்கமாட்டாதென்னில், வேதம் சொன்னவாறு இசைவதென்று ஏற்கனவே சொல்லியாயிற்றே. (31)

(10) நபரயோஜநவத்வாதிகரணம்

ந ப்ரயோஜநவத்வாத். 2-1-32.

புத்திபூர்வமான செயல்களெல்லாம் ப்ரயோஜனமுள்ளனவாக இருப்பதால் உலகஸ்ருஷ்டியால் பிரம்த்திற்கு ப்ரோஜன மொன்று மில்லையாகையால் ப்ரம்மம் காரணமாகாது. அவாப்தஸமஸ்தகாமனுக்கு இதனுலாம் ப்ரயோஜனமென்? ஜீவர்களை யனுக்ரஹிப்பதே ப்ரயோஜன மென்னில், பிணி பசி மூப்புத் துன்பமயமான உலகில் பிறருக்கு அனுக்ரஹமென்ன இருக்கிறது என்கிறன் பூர்வபக்ஷி. (32)

ஸித்தாந்தம்—லோகவத் து லீலாகைவல்யம். 2–1–33.

எல்லாம் நிறைந்த அரசன் ஒரு ப்ரயோஜனமும் முக்கியமாய் எதிர்பாராமல் பந்துமுதலியன எடுத்து விளையாடுமாபோலே ப்ரம்மத்தின் விளையாட்டுமாத்ரமேயாம் உலகவ்யாபாரம். (33)

உலகஸ்ருஷ்டிக்கு லீலை ப்ரயோஜனமென்னவொண்ணுது. தனது லீலைக்காக ஈச்வரன் ஜீவர்களைப் பலவித விஷமயோனிகளிலே பிறப்பித்துப் பல துக்கங்களுக்கு ஆளாக்குகிருனென்ருல் இது ஈச்வரநிலைக்கு ஏற்குமோ என்னில்—

வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத் ததா ஹி தர்சயதி.
2–1–34.

விளையாடுகிறவன், கிளி, பந்து முதலானவற்றைக் கொண்டு விளையாடும்போது அதற்கேற்றவாறுதானே விளையாடுவான். மேலுங்கீழுமான ஸ்ருஷ்டிகளாலும், துன்பத்தை விளைவிப்பதாலும் ஈச்வரனுக்கு வைஷம்யம், தயையின்மை யென்ற தோஷங்கள் நேரா. அந்தந்த ஜீவனுடைய கர்மாவுக்கிணங்கவன்றே அவன் செய்வது. அங்ஙனமே ப்ரமாணம் சொல்லும். ஸாதுகாரி ஸாது:; பாபகாரி பாபன். (34)

ந கர்ம அவிபாகாத் இதி சேத் ந அநாதித்வாத் உபபத்யதே ச அபி உபலப்யதே ச. 2–1–35.

ப்ரளயத்தில் எல்லாம் அழிந்தபோது கர்மங்கள் ஏதென்னவேண்டா. ஜீவர்களும் ஜீவர்களின் பலவிதகர்மங்களும் அநாதி—எப்போதுமுள்ளதாம். அவிபாகமென்ருல் நாமரூபப்பிரிவில்லை யென்றே சொன்னதாம்; ஜீவர்களும் கர்மங்களு மில்லை யென்றன்று. எல்லாம் அநாதியென்று ப்ரம்மாணமே காட்டும். (35)

ஸர்வதர்மோபபத்தே: ச. 2–1–36.

வேதமூலமல்லாத காரணவஸ்துக்களில் இசைய விய

லாத எல்லா தர்மங்களும் வேதமூலமான ப்ரம்மத்தினிடம் பொருந்தும். ஆகையால் எவ்வித யுக்தியாலும் அதை நிராகரிக்க முடியாதாகையால் ப்ரம்மம் காரணமே. (36)

வேதாந்த தீபத்தில் 2ம் அத்தியாயம்
முதற்பாதம் முற்றிற்று.

## (2-ம் அத்தியாயம் 2-ம் பாதம்)

ப்ரம்மமே ஜகத்காரணமென்று முதலத்தியாயத்திலே முடிவு செய்திருப்பதை ஸ்ம்ருதி அல்லது யுக்தியைக் கொண்டு பாதிக்கவொண்ணாதென்றது முன் பாதத்திலே சொல்லப்பெற்றது. ஸாங்க்யாதிமதங்களும் இதற்கு ஸமமாகலாமென்கிற புத்தியைப் போக்குவதற்காக அவற்றிலுள்ள குன்றகள் இந்த இரண்டாம் பாதத்திலே விரித்துரைக்கப் படுகின்றன. வேதாந்தத்திற்கு விருத்தமாய்க் கொண்டே இதரமதங்கள் வேதாந்தத்தோடு ஸமபலங்களாகலாமென்கிற புத்தியைப் போக்குவதென்றபடி. முதலதிகரணம் ஸாங்க்யமதத்தில் குறைகளைக் குறிக்கும்.

(1) ரசநாநுபபத்யதிகரணம்

ரசநாநுபபத்தே: ச ந அநுமாநம் ப்ரவ்ருத்தே: ச. 2-2-1.

ஸாங்க்யமதமாவது—உலகிலுள்ள வஸ்துக்களெல்லாம் தங்களுக்கொத்த காரணங்களால் உண்டாக்கப்படுகின்றன. எல்லாம் ஸுகம், துக்கம், மோஹம் என்ற மூன்று ஸ்வபாவங்களை யுடையனவாகவே காண்கிறன. ஆகையால் மூலகாரணமும் ஸுகதுக்கமோஹஸ்வரூபமாயிருக்கவேண்டும். அதைத்தான் ஸத்வரஜஸ்தமோமய மென்கிறோம். அப்படிப்பட்ட மூலப்ரக்ருதி யென்கிற அசேதந வஸ்துவே காரணம். அளவிடப்பட்ட வஸ்துக்களெல்லாம் கார்யங்களாகவே காணப்படுவதால், அளவற்றதாய் விபு என்னப்படும் ப்ரக்ருதி யொன்றே காரணம். அது ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்றவை ஸம நிலையிலிருக்கும்போது காரணமாகிறது. ஏற்றத்தாழ்வு ஏற்படுவதால் பல விசித்திர கார்யங்களாகிறது. ஈச்வரன் காரணமாகவேண்டுவதில்லை என்றதாம்.

இம்மதம் யுக்தமன்று—யுக்தியினால் ஸ்தாபிக்கப்பட்டதாலே அனுமானமெனப்படும் ப்ரக்ருதியானது அசேதனமாகையாலே ஸமர்த்தனான ஒரு சேதனனுடைய ப்ரேரணையின்றி உலகத்தை உண்டுபண்ணமாட்டாதாகையாலும்,

சேதனனுடைய ப்ரயத்ன மின்றி அசேதநத்ரவ்யம் (ப்ரவர்த்தேச்ச அநுபபத்தே) ஓர் அசைவைக்கூட அடையமாட்டாதாகையாலும் காரணமாகாது. மேலும், ஸத்துவரஜஸ்தமஸ்ஸுக்கள் கார்யங்களிலுள்ள சில ஸ்வபாவங்களுக்குக் காரணங்களான குணங்களென்பது ப்ரஸித்தமாகையாலே, குணம் வேறு அதற்கு ஆதாரமான குணி வேறுனதாலே அந்த முக் குணங்களின் ஸமத்வமே ப்ரக்ருதி யென்று அவர்கள் சொன்னதும் சரியன்று. (1)

பயோம்புவத் சேத் தத்ராபி. 2-2-2.

பாலும் நீரும் ப்ராஜ்ஞனொருவனுடைய உதவியின்றியே தயிராகவும், மா புளிமுதலிய பழங்களில் பல ரஸங்களாகவும் மாறுவதால் சேதநன் எதற்கு என்னில்—உலகில் குயவன்முதலானோரின்றி குடம் முதலானவை பிறவாமலிருப்பதைக் கொண்டு அங்குங்கூட சேதனன் ஒருவன் இருந்தாகவேண்டுமென்று சொல்லுகிறோம். (2)

வ்யதிரேகாநவஸ்த்திதே: ச அநபேக்ஷத்வாத். 2-2-3.

சேதனனொருவனை யபேக்ஷிக்காமலே அவனுடைய உதவியின்றி ப்ரக்ருதியானது காரணமாகில் வ்யதிரேகம் —இன்மை அதாவது ப்ரளயம் இருக்கமாட்டாது. எப்போதும் ஸ்ருஷ்டியே நடவாநிற்கும். (3)

அந்யத்ர அபாவாத் ச ந த்ருணதிவத். 2-2-4.

பசு உட்கொண்ட புல்லும் நீரும் பாலாவதுபோல் சேதநப்ரயத்ன மின்றியே ப்ரக்ருதியினின்று உலகமாம் என்றலும் சரியன்று. எருது உட்கொண்டவிடத்திலும் கீழ் இரைந்த புல்லினின்றும் பால் உண்டாகவில்லையே. ஆகையால் பசுவில் அதை ஸங்கல்ப்பிப்பவன் உளன். (4)

புருஷாச்மவத் இதி சேத் ததாபி. 2-2-5.

அறிவுற்று நடக்கமுடியாத நொண்டியும் நடக்க இயன்று காண்பதில்லாத குருடனும் சேர இருவரும் ஓரிடம் போய்ச் சேருவது போலும், காந்தத்தினுல் இழுக்கப்பட்டு இரும்பு அசைவதுபோலும் சேதநர்களானலும் வியாபரிக்கவியலாத ஜீவர்களின் சேர்க்கையாலே அசேதநமான ப்ரக்ருதியும் அசைவுற்று உலகின் பிறவிக்குக் காரணமாகுமென்னில்—நொண்டி நடக்கமாட்டிலனுகிலும் வழியை உபதேசிப்பதிலே வியாபரிக்க வல்லனே. குருடனும் அவனது உபதேசத்தைக்கேட்டுணர்ந்தபோது வியாபாரிக்கிறுன். காந்தமும் இரும்புடன் முன் சேராமலிந்து சேர்ந்தபோது இரும்பில் வியாபாரத்திற்குக் காரணமாகி

றது. இங்கு ஜீவன் புதிதாக எதைப் பெற்று ப்ரக்ருதியின் ஸ்ருஷ்டிவ்யாபாரத்திற்குக் காரணமாகிறன். ஜீவனுக்கு ப்ரக்ருதியோடு சேர்க்கை யென்பது எப்பொழுதுமே யுள்ள தாகையால் ஒரு ஸமயத்தில் மட்டும் நடக்கும் ஸ்ருஷ்டிக்கு அது காரணமாகாது. எப்போதும் உலகஸ்ருஷ்டி நடக்க வேண்டியதாகும். மோக்ஷமும் ஒருவருக்கும் வாராதாம். (5)

அங்கித்வாநுபபத்தே: ச. 2–2–6.

ஸத்வரஜஸ்தமோகுணங்களின் ஏற்றத்தாழ்வு ஏற்பட்டாலன்றோ உலக முண்டாகும். ப்ரளயத்தில் எல்லாம் ஸமமாயிருக்க ஏற்றத்தாழ்வு ஏற்படக் காரணமில்லையே (6)

அந்யதா அநுமிதௌ ச ஜ்ஞசக்திவியோகாத். 2–2–7.

உதாரணங்களில் இருக்கும்வண்ணம் ப்ரக்ருதிக்கும் ஜீவனுக்கும் இதுவரையி லிசையாத சில தர்மங்களைக் கல்பனை செய்து ஸ்ருஷ்டிப்ரளயங்களை நிர்வஹிக்க வழி தேடினுலும் ப்ரக்ருதி தனியே காரணமாகாது. அசேதனமான அது சேதநசக்தி யின்றிக் காரணமாகாதே. (7)

அப்யுபகமே அபி அர்த்தாபாவாத். 2–2–8.

ப்ரயோஜனமொன்று மில்லையாகையாலே ப்ரக்ருதியை இசைவதென்? நித்யனுய், விகாரமும் வியாபாரமு மில்லாதவனுய் சைதன்யஸ்வரூபனுமான ஜீவனுக்கும் ப்ரக்ருதிக்கும் ஒன்றினுடைய தர்மம் மற்றென்றுக்கு இருப்பதாக ப்ராந்தியேற்பட அதனுல் உலகினை அனுபவிக்கையாகிற போகமும், அததன் தன்மையை விவேசனம் செய்வதாலாம் மோக்ஷமும் ப்ரயோஜன மென்னவேண்டும். அத்தகைய ப்ராந்திக்கே காரணமில்லையே. ஒன்றினருகில் மற்றென்றிருப்பதாலேயே ப்ராந்தியும் போகமோக்ஷங்களு மென்னவொண்ணது. எப்போதுமே அருகிலிருப்பதால் ப்ராந்தியே நிலா நிற்கும். அருகிலிருப்பதே மோக்ஷத்திற்குக் காரணமாகில் ஸ்ருஷ்டியே உண்டாகாது. (8)

விப்ரதிஷேதாத் ச அஸமஞ்ஜஸம். 2–2–9.

ஒன்றுக்கொன்று முரணுகப் பல விஷயங்கள் ஸாங்க்ய மதத்தில் இருப்பதால் அது ஆபாஸமதம். அசேதனம் சேதனனுக்காக ஏற்பட்டதாகையாலே ஜீவன் காண்கிறன் அனுபவிக்கிறனென்றும், புருஷனுக்கு விகாரமே கிடையாதாகையால் அவன் காண்பது மில்லை அனுபவிப்பது மில்லை, ஆகையாலேயே அவனுக்கு ஸம்ஸாரம் மோக்ஷம் இரண்டு மில்லை யென்றும், அசேதனம் ப்ரக்ருதி, அது

ஜீவன் அருகிலிருப்பதால் அவனுடைய தர்மமான சைதன்யத்தைத் தன்னிடத்திலும் தனது தர்மமான செயலை ஜீவனிடத்திலும் ஏறிட்டுக்கொள்ளுகிறதென்றும், அதுவே ஸம்ஸாரம் மோக்ஷம் இரண்டையும் அடைகிறதென்றும் அது ஜீவனுக்காக ஏற்பட்டதென்றும் சொல்லுகின்றீர்களே. ப்ராந்தி, ஸம்ஸாரம், மோக்ஷம் எல்லாம் ஜீவனுக்கிசையாதபோது ஜீவனுக்காக ப்ரக்ருதி யென்று சொல்லலாகுமோ ? (9)

(2) *மஹத்தீர்க்காதிகரணம்*

ஸாங்க்யமென்ற வைதிகமதத்தைத் தள்ளின பிறகு அதற்கடுத்த தார்க்கிகமதம் தூஷிக்கப்படுகிறது—.

**மஹத்தீர்க்கவத் வா ஹ்ரஸ்வ பரிமண்டலாப்யாம். 2-2-10.**

வைசேஷிகதர்சன மென்ற தர்க்கஸூத்ரத்தை யியற்றிய கணாத மஹர்ஷிகள் பரமாணுவே காரணமென்கிறார். இரண்டு பரமாணுக்கள் ஒன்றோடொன்று சேர த்வ்யணுகமுண்டாகிறது; மூன்று த்வயணுகங்கள் சேர த்ரயணுகம். இவ்வாறு மேன்மேற் சேர இப்பெரிய மண்ணும், நீரும், நெருப்பும், காற்றும் உண்டாகின்றன. நான்கு பூதங்களுக்குக் காரணங்களான நான்குவகைப் பரமாணுக்களும் உண்டாவதில்லை. அவை அவயவங்களில்லாதவை; அழியாதவை. அவற்றிற்கு ரூபம், ரஸம் முதலியகுணங்கள் தகுமாறு உள. அவற்றினின்று த்வயணுகாதிகளான கார்யங்களில் முறையே தக்க குணங்கள் உண்டாகின்றன. அத்ருஷ்டம், ஈச்வரன் என்ற காரணங்களும் உளவே. காரணங்களான பரமாணுக்களுக்கும் கார்யங்களான த்வ்யணுகாதிகளுக்கும் ஸம்பந்த முண்டு. அதற்கு ஸமவாயமெனப்பெயர். குணங்களுக்கும் அவற்றிற்கு ஆதாரங்களான த்ரவ்யங்களுக்குங்கூட அந்த ஸமவாயமே ஸம்பந்தம் என்றவாறெல்லாம் அவர் சொல்வது.

இது சரியல்ல—ஒவ்வொரு வஸ்துவும் உலகில் பத்து திக்குக்களின் ஸம்பந்த முடையது. ஆக ஒவ்வொன்றிலும் பத்து பாகமுள. ஒரு பலகையோடு மற்றொரு பலகையைச் சேர்க்கும்போது ஒரு பலகையின் மூன்று திக்பாகங்களான அவயவங்களிலும் மற்றொரு பலகையின் மூன்று அவயவங்களிலும் ஸம்பந்தம் ஏற்படுகிறது. மற்ற பாகங்கள் சேராமலிருக்கின்றன. ஆகவே இரண்டு வஸ்து சேரும்போது வஸ்து பெரிதாகிறது. இவ்வாறே பரமாணுக்களும் மும்மூன்று தமது பாகங்களான மொத்தமான ஆறு அவயவங்களிற் சேர்ந்து மற்ற அவயவங்களிற் சேராமலிருக்கின்றன

வென்னல் வேண்டும். நிரவயவம் பரமாணு என்ற பிறகு இவ்வாறு சொல்லக்கூடுமோ? இப்படி ஸம்பந்தமே யில்லை யாதலால் உலகு எப்படி யுண்டாகும்? ஆகையால் ஹ்ரஸ்வ மென்ற த்வ்யணுகத்தினின்று மஹத்தான த்ரியணுகமும், பரிமண்டலமென்ற பரமாணுக்களின்று த்வயணுகமும் உண் டாகிறதென்ற கொள்கை ஸமஞ்ஜஸ மன்று. அதுபோல் அவர் சொன்ன மற்ற விஷயமும் ஸமஞ்ஜஸமல்ல. (10)

மற்ற விஷயம் ஸமஞ்ஜஸமல்ல என்பதை விவரிக்க மேல் ஸூத்ரங்கள்—

உபயதா அபி ந கர்ம அத: ததபாவ: **2–2–11.**

ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலே பரமாணுக்களில் ஒன் றோடொன்று சேர்வதற்கு க்ரியை உண்டாகிறது அத் ருஷ்ட பலத்தாலென்கின்றனர். அவ் அத்ருஷ்டம் ஜீவனிட முள்ளதா, பரமாணுக்களிலேயே யிருப்பதா. எப்பக்ஷத்தி லும் முன்னமே அந்த அத்ருஷ்டம் இருப்பதாலே ஏன் க்ரியையுண்டாகி ஸ்ருஷ்டி தொடங்கவில்லை அத்ருஷ்டம் பரிபக்வமாகும் காலம்வேண்டுமே யென்னில்–எண்ணிறந்த சேதனர்கள் செய்துள்ள அளவற்ற கர்மாக்களில் எவையும் அப்போது பலிப்பதில்லை யென்று சொல்லலாகுமோ. சில ருடைய சில கர்மங்களுக்குப் பலன் அளிக்கப் பரமாணுக் களில் க்ரியை உண்டாகலாமே. ஈச்வரனுடைய ஸங்கல்ப் பம் வந்தபோது அது வரு மென்னில், ஈச்வரனைத் தார்க்கி கர்கள் யுக்தியினு ல்ன்றே ஸ்த்தாபிப்பது. அவ்வாறு அவன் ஸித்திக்கமாட்டிலனென்று முன்னமே சொன்னோம். (11)

ஸமவாயாப்யுபகமாத் ச ஸாம்யாத் அநவஸ்தே: **2–2–12.**

காரணமான மண்ணில் கார்யமான குடம் இருப்பது, த்ரவ்யத்தில் குணமிருப்பதெல்லாம் ஒரு ஸம்பந்த மின்றி கூடாதவாகையால் ஸம்பந்தம் வேண்டும், அது ஸமவாயம் என்கின்றனர். குணத்தின் ஸமவாயம் த்ரவ்யத்திற்கு என்ன ஸம்பந்தத்தினுல் கூடுவது. அதற்காக வேறொரு ஸம் பந்தம் அபேக்ஷிக்கப்படும். இப்படி மேன்மேல் அததற்கு ஒவ்வொரு ஸம்பந்தம் அபேக்ஷிக்கப்படுவது ஒத்திருப்ப தால் ஸம்பந்தங்களுக்கு முடிவில்லையாம். மேலே ஸம்பந்தம் வேறு கல்பனை செய்யாமலே அதது இருக்கு மென்னில், த்ரவ்யத்தில் குணமும் ஸமவாயமின்றியே இருக்கலா மாகையால் ஸமவாயத்தையே தவிரவேண்டும். (12)

நித்யம் ஏவ ச பாவாத். **2–2–13.**

ஸமவாயஸம்பந்தம் நித்ய மென்கின்றனர் தார்க்கிகர்.

எந்த இரண்டுக்கு ஸமவாயம் ஸம்பந்தமோ, அவ்விரண்டும் நித்யமாகாமே ஸம்பந்தம் நித்யமாகாதாகையால் கார்யம் காரணம், த்ரவ்யம் குண மெல்லாம் நித்யமாகவேண்டிய தாகும். (13)

ரூபாதிமந்த்வாத் ச விபர்யய: தர்சநாத். 2-2-14.

பரமாணுக்களில் ரூபம் முதலிய குணங்களை யிசைவதால், குணங்களுள்ள வஸ்துக்களெல்லாம் அநித்யங்களாய்க் காணப்படுவதால் பரமாணுக்களும் அநித்யங்களாம்; காணப்படும் வஸ்துக்களைப்போலே அவயவங்களையுடையனவுமாம். (14)

உபயதா ச தோஷாத். 2-2-15.

பரமாணுக்களில் குணங்களை யிசையாவிடில் உலகில் ஒன்றிலும் குணங்கள் உண்டாகா. இசைந்தால் உலகு போலே பரமாணுக்களும் அநித்யங்களாம். ஆக இரண்டு பக்ஷங்களிலும் தோஷமே. (15)

அபரிக்ரஹாத் ச அத்யந்தம் அநபேக்ஷா. 2-2-16.

ஸாங்க்யமதம் வேதத்திற்கும் யுக்திக்கும் முரண்பட்டாலும் ஸத்கார்யவாதம் முதலான சில அம்சங்களைக் கொண்டு வைதிகரால் சிறிது ஆதரிக்கப்படும். காணாதமதமான தார்க்கிகமதத்தை வைதிகர் ஆதரிப்பதில்லையாகையால் அது முற்றும் உபேக்ஷிக்கப்படும். (16)

---

## பௌத்தகண்டனம்.

(வேதம் ப்ரமாண மென்றிசைந்த தார்க்கிகமதமே வைதிகரால் சிறிதும் ஆதரிக்கப்படாதபோது பௌத்தாதி மதங்களைப் பற்றிச் சொல்லவேண்டுவதென்? ஆயினும் அவைதிக ப்ரசாரகாலத்திற்கஞ்சி அங்கும் தோஷங்கள் கூறப்படுகின்றன.

பௌத்தர்கள் நான்குவகைப்பட்டவர்—பூமி முதலிய பெருந்த்ரவ்யங்கள் ப்ரத்யக்ஷமாகப் பார்க்கப்படுகின்றன என்றே இசைந்தவரும், 'த்ரவ்யமெதற்கும் ப்ரத்யக்ஷம் படையாதலால், விஜ்ஞானத்தின் வடிவைக்கொண்டு வெளியில் த்ரவ்யமிருப்பதாக அனுமானம் செய்வது (ஊஹிப்பது) தான் என்பவரும், உள்விஜ்ஞானம் மட்டுமே யுளது, வெளி வஸ்துக்களே இல்லை யென்பவரும், விஜ்ஞானமும் இல்லை, சூன்யமே யென்பவரும். இந்நான்குவகையருக்கும் அடை

வாக வைப்ாஷிகர், ஸௌத்ராந்திகர், யோகாசாரர், மாத்ய மிகர் என்று அவர்களே கொண்ட பெயர்களாம்.

புத்தருடைய முதல் உபதேசம் சூன்யவாதம். அதனை அப்படியே இசைந்தவன் மாத்யமிகன். குரு சொன்னதின் மேல் கேள்வி கேட்டுச் சர்ச்சை செய்யாததால் உயர்ந்தவனு மல்லன், சொன்னதில் ச்ரத்தை வஹித்து அடக்கமாயிருந் ததால் தாழ்ந்தவனு மல்லன்; ஆகையால் நடுநிலையில் நின்றவனாய் மத்யமனாய் மாத்யமிகனானான். சிலர் வெளிவஸ் துக்கள் இல்லை யென்பதை இசைந்து விஜ்ஞானம் இல்லை யென்ன ஒண்ணுமோ என்று கேட்டனர். ஆகையால் ஒரு விஷயத்தில் யோகம்—பர்யநு யோகம்—கேள்வி, மற்றொரு விஷயத்தில் ஆசாரம்—ஸம்மதி இருண்டும் உடையவராய் யோகாசாரரானார். அதன்மேல்—விஜ்ஞானமென்பது ஒரே விதமா யிருப்பதில்லையே, குடம், மடம், நீலம், மஞ்சள் என்றவாறு பல ஆகாரங்கள் உளவே. விஜ்ஞானத்திற்கு இவ்வடிவங்கள் வெளியில் வஸ்துக்களால் தானே வந்தி ருக்கவேண்டும். ஆகையால் வெளிவஸ்துக்களையும் இசைய வேண்டும் என்று சிலர் விசாரிக்க, அவர்களுக்கு புத்தர்— 'ஆம்; அவையு முள. ஆனால் அவை ப்ரத்யக்ஷங்களல்ல. கீழ்ச்சொன்ன வகையிலே ஊஹிக்கப்படவேண்டியவை' —என்றார். அப்போது அவர்கள் புத்தரைப் பார்த்து இந்த உபதேசஸூத்ரத்திற்கு முடிவு எங்கே என்று கேட்டனர். அதனால் ஸௌத்ராந்திகர் என்ற பெயர் பெற்றனர். அதன்மேல் சிலர் ப்ரத்யக்ஷமில்லாமலே அனுமான மென்ற சொல் விபாஷை—விருத்தமான பாஷை என்றனர். அதனால் புத்தபாஷைக்கு விருத்தமான பாஷை (சொல்) கொண்டனராய் வைபாஷிகர் எனப்பட்டனர். ஆயினும் இந்த வைபாஷிகர் பௌத்தரல்லாதார் என்னவொண் ணாது. வஸ்து வொன்றுமே யில்லை யென்ற சூன்யவாதம் செய்யும் மாத்யமிகர் நீங்கலாக, விஜ்ஞானம்மட்டும் உண் டென்ற யோகாசார்களைப் போலவும், வெளிவஸ்துக்களை ப்ரத்யக்ஷமின்றி ஊஹிக்கப்படுகின்றவை யென்றிசைந்த ஸௌத்ராந்திகர் போலவும், தாங்கள் இசைந்த வஸ்துக்க ளெல்லாம் க்ஷணிகங்களே, ஒரு க்ஷணத்திற்கு மேல் இரா மல் பிறந்தழிகின்றவை யென்று நினைத்திருப்பதால் பௌத்தரேயாவர். இதனால்தான் வைதிக பாஷையைக் காட் டிலும் இவருடைய பாஷை விருத்தமாய்விட்டது.)

இந்நால்வரில் வெளிவஸ்துக்களை யிசைந்த வைபாஷி கர் ஸௌத்ராந்திகர் என்ற இருவரின் பக்ஷமும் முதலில்

தூஷிக்கப்படும். உலகமுண்டாவதற்கு அவர்கள் சொல்லும் வழி சரியாயில்லை யாகையால்—

(3) ஸமுதாயாதிகரணம்

ஸமுதாயே உபயஹேதுகே அபி ததப்ராப்தி: 2-2-17.

ஸமுதாயமாவது ஸங்காதம்—சேர்க்கை. அது நிலபரமாணுக்கள் நீர்ப்பரமாணுக்கள் போன்றவை தனித்தனியே சேர்ந்து பூமி ஜலம் என்றவிதமாகும். இது முதலாவது; இதனின்று, உடல், கருவி, மற்றும் பௌதிகவஸ்துக்கள் என்றது இரண்டாம் ஸங்காதம். இவ்விருவகை ஸங்காதங்களுக்கான சேர்க்கை வஸ்துக்களுக்கு பௌத்த பக்ஷத்தில் சொல்லவியலாது. ஏனெனில், அவர்கள் மதத்தில் எல்லாம் க்ஷணிகங்கள்; ஒரு க்ஷணத்திற்கு மேலிருப்பனவல்ல. ஸங்காதமாவது சேர்க்கை ஒன்றோடொன்றுக்கு ஸம்யோகம்; இது வஸ்துக்களில் க்ரியை (அசைவு) உண்டாகி அதன் மேல் அவற்றிற்கு வரவேண்டும். வஸ்துவானது உண்டான க்ஷணமே யிருந்து போய்விட்டபடியால் அதில் க்ரியை எப்போதுண்டாம். க்ரியைக்கே அது இல்லாதபோது அதற்குப் பிறகு வரும் ஸங்காதத்தின்போது அது ஏது? ஆக அவ்வஸ்துக்களுக்கு ஸங்காதமாகுமோ? சேராமல் பரமாணுக்கள் தனித்தனியாக இருக்குமாகில் அவற்றில் பூமி, உடல், கருவி என்ருற்போன்ற வியவஹாரம் வரமுடியாது.

ஆகையால் பிரிந்த காலத்திலுள்ளனவும் சேர்ந்த காலத்திலுள்ளனவும் வெவ்வேறாகையால் தனியேயிருந்தவை சேர்ந்தன என்று அவர்கள் சொல்லவியலாதென்க. (17)

இதரேதரப்ரத்யயத்வாத் உபபந்நம் இதி சேத் ந ஸங்காதபாவாநிமித்தத்வாத். 2-2-18.

வெளிவஸ்துக்களான பூமி முதலானவையும் உள்வஸ்துக்களான அஜ்ஞானம், ஆசை, த்வேஷம் முதலானவையும் ஒன்றுக்கொன்று காரணமாவதால் எல்லாம் கூடுமென்பதும் சரியல்ல. க்ஷணிகவஸ்துக்கள் சேர்வதற்குக் காரணமில்லையாதலின். ஸூத்ரத்தில் ப்ரத்யய என்றதற்குக் காரணமென்றது பொருள்.

பௌத்தர் சொல்லுவதாது உண்மையில் எல்லாம் க்ஷணிகங்களானாலும் அவை ஸ்த்திரங்கள் என்ற விபரீத புத்தி யிருப்பதாலே எல்லாம் கூடுமென்பது. அது சரியல்ல.

வஸ்துக்கள் ஸ்திரமாகில் அவ்வாதம்கூடும். புருஷனுடைய விபரீதபுத்திமட்டிலே அழிந்துபோன வஸ்துக்கள் சேரமுடியுமோ? மேலும், சேதனன் இல்லாமல் கார்யமும் பிறவாது. அவர்கள் மதத்தில் ஆத்மா என்றது எது? அதுவும் க்ஷணிகம். உள்ளே உண்டாகும் ஜ்ஞானங்களுடைய தொடர்ச்சியே வஸ்துவை க்ரஹிக்கிறதாய்க்கொண்டுஆத்மா என்னப்படுகிறதென்கிறனர். ஒன்றின் பின் ஒன்றாக வரும் ஞானங்களின் தொடர்ச்சியில் எந்த ஞானமென்கிற ஆத்மா விஷயத்துடன் சேருவது? சேரும்போதிருந்த ஆத்மா வேறு, அறிகிற ஆத்மா வேறு, அதை எடுத்து உபயோகப் படுத்தும் ஆத்மா வேறு. அவ்வாறே சேர்ந்த வஸ்து வேறு, அதன்பின் உண்டாம் அறியப்படும் வஸது வேறு, பிறகு எடுக்கப்படும் வஸ்து வேறு. ஒருவனே கண்ணில் பட்ட வஸ்துவையே பார்த்து எடுத்துக்கொள்ளுகிறான் என்றனுபவமிருக்க, ஒருவன் கண்ணில் ஒரு வஸ்து பட்டதால் மற்றொருவன் மற்றொரு வஸ்துவைப் பார்க்கிறானென்றும், அதனால் வேறொருவன் வேறொன்றை எடுத்துக் கொள்ளுகிறான் என்றும் சொல்வது எங்ஙனம் கூடுமோ? அதது வெவ்வேறானாலும் அத்தொடர்ச்சி ஒன்றுதானே என்பர். தொடர்ச்சி யென்றதொரு தனி வஸ்துவா என்று அவர்களைக் கேட்கவேண்டும். மேலும் அஸ்த்திரமான வஸ்து சேருவதுபோல் தோற்றுமேயன்றி, சேரமாட்டுமோ. ஈயத்தை ஒருவன் வெள்ளி யென்று நினைத்தானென்றால் அது வெள்ளியணியாகச் செய்யப்படுமோ. ஆத்மாவையும் க்ஷணிகமாக்கி வெளி வஸ்துக்களையும் க்ஷணிகங்களாகச் சொல்லுமவர் உலக முண்டாவதையும், உலகவ்யவஹாரம் ஒன்றையுமே நிர்வஹிக்கமமாட்டிலர். (18)

## உத்தரோத்பாதே ச பூர்வநிரோதாத் 2-2-19.

குடம் முதலிய வஸ்துக்கள் ஒவ்வொரு க்ஷணத்திலும் வேறென்கிறனர். பின் குடம் உண்டாம்போது முன்குடம் அழிந்துவிட்டதே. ஆகக் குடமில்லாமலே குடம் வருவதானால் எங்கும் எப்போதும் உண்டாகலாம். இப்படி யெல்லாமெங்கும் உண்டாகவேண்டும். முன் க்ஷணக்குடம் பின் க்ஷணக்குடத்திற்குக் காரணமென்னில், பின்னால் வரும் குடங்கள் உலகில் எத்தனையோ, அத்தனைக்கும் முன் குடமொன்று காரணமாகும். அந்த இடத்திலுள்ள முன்குடம் அங்கே உண்டாம் பின்குடத்திற்குமட்டும்காரணமென்னில், அதே இடமென்று ஒரு ஸ்திர வஸ்துவை இசையாதவன் இவ்வாறு கூறவியலாது. (19)

அஸதி ப்ரதிஜ்ஞோபரோத: யௌகபத்யம் அந்யதா 2-2-20.

அதிபதி, ஸஹகாரி, ஆலம்பனம், ஸமநந்தரப்ரத்யயம் என்ற நான்கும் ஜ்ஞானத்திற்குச் சேர்ந்து காரணங்களென்பர் பௌத்தர். அதிபதியாவது இந்திரியம். ஸஹகாரி தீபம் முதலானவை. ஆலம்பனமாவது விஷயமானவஸ்து. ஸமநந்தரப்ரத்யயமாவது அடுத்த முன்க்ஷணத்திலுண்டான ஞானம். இந்நான்கும் காரணமென்பவர் எங்ஙனம் ஒன்றுமில்லாமலே கார்யம் பிறக்கிறதென்னலாம்? கார்யம் உண்டாம்போது காரணமும் இருப்பதாகக் கொண்டால், க்ஷணம்தோறும் குடம் வெவ்வேறு உண்டாகின்றதாகச் சொல்பவர் ஒரு க்ஷணத்திலே காரணமானகுடம் கார்யமான குடமென்ற இரண்டையும் இசையவேண்டிவரும். (20)

ப்ரதிஸங்க்யா — அப்ரதிஸங்க்யாநிரோதாப்ராப்தி:
அவிச்சேதாத் 2-2-21.

க்ஷணந்தோறு மழிகின்ற குடம் ஒரு ஸமயம் உடைக்கப்பட்டும் அழிகிறது. உடைந்தபோது வரும் அழிவு ப்ரதிஸங்க்யா நிரோதம். ப்ரதிக்ஷணம் வரும் அழிவு அப்ரதிஸங்க்யா நிரோதம். அதாவது—முதலழிவு ஸங்க்யைக்கு ப்ரதிகூலமானது. ஸங்க்யையாவது புத்தி. இது குடமென்கிற புத்திக்கு விரோதியான அழிவு அது. அவ்வாறுகாத அழிவு இரண்டாவதாம்; ப்ரதிக்ஷணம் குடமழிந்தாலும் குடம் என்கிற புத்தி தொடர்ந்திருப்பதால் அவ்வழிவு விரோதியாகாது. இந்த இரண்டழிவுகளும் பௌத்தர் சொன்னவையாம், இவற்றிற்கு ப்ரமாணமில்லை. ஒரே த்ரவயம் காரணதசையிலும் கார்யதசையிலுமிருப்பதாம். பல பரிணமங்கள்—மாறுதல்கள் ஏற்படுவது மட்டுமே யல்லது த்ரவயம் உண்டாவதுமில்லை, அழிவதுமில்லை. இதுமுன்னே ததநந்யத்வாதிகரணத்திலே மொழியப்பெற்றது. (21)

உபயதா ச தோஷாத் 2-2-22.

உண்டானவுடன் அழிந்து விடுகிறதென்றாலும், ஒன்றுமில்லாமலிருக்க உண்டாகிறதென்றாலும் குறையுண்டு. உண்டானது அழிந்துவிட்டால் மேலே உண்டாகும் வஸ்து இல்லாமையினின்று உண்டாவதாம். அப்போது உண்டானதும் துச்சமே—இல்லாததேயாம். மண்ணின்று உண்டானது மண்ணே போல் அபாவத்தினின்று வருவது அபாவமேயாம். (22)

ஆகாசே ச அவிசேஷாத் 2-2-23.

நான்கு பூதங்களை மட்டும் இசைந்து, ஆகாசமில்லை

யென்கின்றனர். அது தவறு. மற்றவை போல் ஆகாயமும் ப்ரத்யக்ஷானுபவத்திலுள்ளதேயாம். இங்கே கெருடன் பறக்கிறது, அங்கே கழுகு என்று ஆகாயமும் ப்றக்குமிடமாகத் தோன்கிறதே. (23)

அநுஸ்ம்ருதே: ச. **2-2-24.**

அநுஸ்ம்ருதியாவது ப்ரத்யபிஜ்ஞை. அதாவது ஏற்கவே அனுபவித்த வஸ்துவை நினைவுக்குரிய காரணம் கூடியிருக்க மீண்டும் அனுபவிப்பது, 'நேற்று நான் வாங்கின குடத்தையே இன்று தண்ணீர் கொணர எடுத்துக் கொள்ளுகிறேன்' என்று ஒருவன் அறிகிருன். இவ்வறிவு, இரண்டு நாள் இருந்த குடமும் ஒன்று. அதையறியும் ஆத்மாவும் இரண்டு நாளிலிருப்பதொன்று என்று நன்கு தெளிவிக்கிறது. இது தவறென்பதற்கு ஒரு காரணமுமில்லை, இதனையுள்ளபடி யிசையாமற் போனல் தோஷமுண்டென்று முன்னமே சொன்னோம். ஆகையால் அனுபவத்திற்கு முரணான க்ஷணிகவாதம் கூடாததாம். பௌத்தபக்ஷத்தில் தனி நினைவு தனிப்ரத்யக்ஷம் போன்ற ஞானங்களே பிறக்கமாட்டாதிருப்பதால் அநுஸ்ம்ருதியென்ற ப்ரத்யபிஜ்ஞை ஒருபடியும் பிறக்கமாட்டாது. (24)

ந அஸத: அத்ருஷ்டத்வாத். **2-2-25.**

வெளியிலிருக்கும் குடத்தின் உருவம் உள்ளே ஞானத்திலே விழுவதால் ஞானம் குடஆகாரமாமென்னப்படுகிறது. இப்படியே எல்லாவிஷயங்களிலும் என்றனர் ஸௌத்ராந்திகர். க்ஷணிகவாதிகள் இவ்வாறு சொல்லக்கூடுமோ. வெளிவஸ்து ஒரு க்ஷணத்திலழியும்போது அதன் தர்மமான உருவம் ஞானத்திற்குப் போவதெங்ஙனம்? அதுவும் கூட அழிந்து விடுமே. தர்மி அழிந்து தர்மமிருப்பதைப் பார்த்ததில்லையே. (25)

உதாஸீநாநாம் அபி ச ஏவம் ஸித்தி: **2-2-26.**

எல்லாம் க்ஷணிகமாகில் ப்ரயத்னம் செய்கிறவன் ஒருவன், பலன் அனுபவிப்பவன் மற்றொருவனகிருன். தன் பிரயத்னமில்லாமலே ஒருவன் பலன் அனுபவிப்பதானல் ஒருவரும் ஒரு ப்ரயத்னமும் செய்ய வேண்டாமே. வெறுமனே இருந்தும் பலன் பெறலாமே. ஆகையால் இம்மை மறுமைகளுக்காகப் படும் பாடு வீணுவதாலும் வைபாஷிகர் ஸௌத்ராந்திகரென்ற இருவருடைய கொள்கையும் சரியல்லவென இவ்வதிகரணத்திலே சொன்னோம். (26)

ஞான மாத்திரமே யுளதென்ற யோகாசார பௌத்த மதம் இனி நிரஸிக்கப்படுகிறது.

(4) உபலப்த்யதிகரணம்

யோகாசாரன் சொல்வதாவது — வெளிவஸ்துக்களை யிசைந்தவர்களும் அந்தந்த வஸ்துவின் ஞானத்தை யிசைய வேண்டும். ஞானத்தினால்தானே அவை பிரகாசிக்கப் படுகின்றன. இந்த ஞானம் இந்த வஸ்துவைச் சார்ந்த தென்று வரையிட்டுச் சொல்வதற்காக ஞானம் ஒவ்வொன் றும் வஸ்துவுக்கேற்ற வடிவமுடையதாயிருக்கிறதென்னல் வேண்டும். 'இது குடம்' என்று பிறக்கும் ஞானத்தில் ஒரு வடிவம் தோற்றுகிறதே யன்றி இரண்டல்ல. ஆகை யால் ஞானத்திலே தனித்தனியான ஆகாரங்களை இசைந்தே வியவஹாரத்தை நிர்வஹிக்க முடியுமாதல் பற்றித் தனியே வெளியே விஷயங்கள் வேண்டுவனவல்ல. உருவம் வெளி யிலிருப்பதாகத் தோற்றுகிறதே யல்லது உள்ளேயிருப்ப தாகத் தோற்றவில்லையே யென்னவேண்டா. ஞானத்தில் உருவம் வேண்டுமென்றேற்பட்ட பிறகு வெளியிலிருப்ப தாகத் தோற்றம் சொப்பனத்திற்போல் ப்ராந்தி என்றே முடிவு செய்ய வேண்டும் என்றதாம். இதற்கு ஸமாதானம்

ந அபாவ: உபலப்தே: 2-2-27.

'குடத்தை நான் அறிகிறேன்' என்றவாறு ஞானம் பிறக்கிறது. அதில் ஞானம், குடம், அறிகின்ற புருஷன் என மூன்று வஸ்துக்கள் ப்ரகாசிக்கின்றன. வஸ்துவின்றி ஞானம் மட்டும் ப்ரகாசிப்பது எப்போதுமில்லை. ஆகையால் இசைந்தால் மூன்றையுமே இசையவேண்டும். கர்த்தா, கர்ம, இரண்டுமின்றியே க்ரியை மட்டும் இருப்பதாகச் சொல்வது, பிளக்கிறவன், பிளக்கபடுமது இரண்டு மின்றியே பிளத்தல் மட்டும் இருக்கிறதெனச் சொல்வது போல் பொருளற்றதாம், ஞானத்திலே உருவ மொன்றி ருப்பதாக நினைப்பதும் தவறு. கட்டையை வெட்டுகிறான் என்றால் வெட்டுதலில் கட்டையின் உருவ மொன்று வேண் டுமோ ? உருவமற்ற வெட்டுதல் என்ற வினைக்குக் கட்டை செயப்படுபொருளாவது போல் குடத்தை யறிகிறானென்ற விடத்திலும் அறிதலுக்குக் குடம் செயப்படு பொருளா கிறது. ஆக ஞானத்தில் உருவம் வேண்டா. அனுபவப் படி வெளியிலேயே உருவங்கள் உள. ஆகையால் ஞானம் போலே விஷயங்களும் அனுபவிக்கப்படுகின்றபடியால் அவற்றிற்கு இன்மை யில்லை. (27)

சொப்பனம் முதலிய திருஷ்டாந்தங்கள் சரியல்ல என்

வைதர்ம்யாச் ச ந ஸ்வப்நாதிவத். 2-2-28.

தோஷத்தினுல் வரும் ஞானம் பொய்யாகாலாம். அதாவது விஷயமின்றியே வரும் ஞானமாகலாம். ஒருவன் பனியைப் புகையாக நினைத்து அங்கே நெருப்புளது என்று ஊஹிக்கிருன். அது பொய். முதலில் புகையென்ற அறிவே தோஷத்தினுலேற்பட்டது. சொப்பனத்தில் என்ன தோஷமென்னில் ஒரு விதமான உறக்கமே தோஷமாம். மேலும், அந்தந்த இடங்களிலே, 'இங்கு வஸ்து இல்லை' யென்று பின்னுல் தெளிவான அறிவு ப்ரத்யட்சமாயுண்டாகிறது. அவ்விதம் உலகமேயில்லை யென்ற அனுபவம் வருகிறதில்லையே. ஆகையால் சொப்பனம் முதலானவற்றிற்கு ஒப்பாகாது இது. ஸூத்திரத்தில் 'ச' என்ற சொல்லானது வேருென்று சொல்லவேண்டுவதை ஸமுச்சயிக்கிறது. (சேர்விக்கிறது.) அதனுல் சொப்பனம் முதலானவற்றில் சிலவிடங்களில் வைஷம்ய மிருப்பதாலே பொய் என்றிசைய வேண்டியிருப்பதாலும் சிலவிடங்களில் விழித்துக்கொண்டிருக்கும்போது வரும் ஞானம் போலே சொப்பனம் முதலானவற்றிலும் உண்மையில் வஸ்துக்கள் இருப்பதாலும் ஸ்வப்நாதிகளைப் போலே பொய் என்னலாகாதென்று சொன்னதாம். (28)

ந பாவ: அநுபலப்தே: 2-2-29.

விஷயமின்றி ஞானம் மட்டுமிருப்பதாகச் சொல்வது கூடாது. எங்கும் அத்தகைய ஞானம் அனுபவத்திற்கு வரவில்லையே. வேதத்திலும் நிர்விஷயஜ்ஞானம் ஓதப்படவில்லை. (29)

(5) ஸர்வதாநுபபத்யதிகரணம்

ச. 2-2-30.

மாத்யமிகருடைய சூன்யவாதமும் சரியன்று. எல்லா விதத்திலும் அது கூடாததாம். அவர்களின் யுக்தி பின்வருமாறு—விசாரிக்கப் புகுந்தால் வஸ்து இல்லையென்றே தேறுகிறது. உதாரணமாக—குடம் உண்டாவது இருக்கிற வஸ்துவினின்று உண்டாகின்றதா, இன்மையிலிருந்தா பார்க்க. மண்கட்டியை மெறித்துத் துவைத்து குடம் செய்யப்படுவதால் மண்கட்டி தொலைந்தே குடம் வரும். ஆக இன்மையிலிருந்து உண்டாகவேண்டும். இன்மையிலிருந்து உண்டானது உண்மையாமோ ? ஆகையால் ஒன்றுமில்லையென்ப

தாம். இது சரியன்று. உலகில் இல்லையென்ற சொல்லைத் தனியே யாரும் சொல்லார். இது இங்கே இப்போது இல்லை யென்றே சொல்வர். அதனால் வேறொன்று இங்கே இருக்கிறது, இது வேறிடத்திலிருக்கிறது, இது இங்கு வேறு காலத்திலிருக்கு மென்றெல்லாம் ஏற்படுவதால் ஒன்றுமில்லை யென்னலாமோ? குடம் உண்டுபண்ண சாமான்களைச் சேர்த்திருக்குமிடத்தில் குடமில்லையென்றால் அதற்குமுன்னான தசையிருக்கிற தென்றும், குடம் உடைக்கப்பட்ட பிறகு சொன்னால் குடத்திற்குப் பின்னான ஓடா யிருக்கை உளதென்றும், இது குடமன்றென்றால் குடத்திற்கு முரண்பாடான தொன்றிருக்கிறதென்றும், ஆகாயத்தில் குடமில்லை யென்றால் ஆகாயம் குடத்தைத் தாங்குவதற்குகாகாத தன்மையையுடையதென்றும் ஒவ்வொரு வஸ்துவின் இருப்பே எங்கும் தோன்றும். மண்கட்டி தொலையுமிடத்தில் மண்ணே யில்லை யென்னக்கூடுமோ? ஆகையால் ஸத் என்றால் வஸ்து இருக்கின்றதுஎன்று தோற்றுமா போலே அஸத் என்றால் வஸ்து வேறொரு வகையிலிருக்கிற தென்றே பொருளாம். ஆக ப்ரமாணத்தினால் க்ரஹிக்கப்படும் அபாவமெல்லாம் ஒருவிதமான (भाव) பாவமேயாகும். ஸத் என்னுமலும் அஸத் என்னுமலும் வேறுவிதமாகச் சொல்ல முடியாது; இரண்டு விதமாகவே அனுபவங்கள் வருகின்றன வாதலின். (மேலும் ஒன்றுமில்லையென்பதற்கு ஏதேனும் ப்ரமாணம் உண்டாகில் ஒன்றுமில்லையென்ன வொண்ணாது; ப்ரமாணமிருக்கின்றதே. ப்ரமாணமில்லையாகில் அப்ராமாணிகமாகச் சொல்வது நிற்காதென்றவாறு காண்க.) (30)

இனி ஜைநமதத்திற்கு நிராஸம்—

(6) *நைகஸ்மிந்அஸம்வாதிகரணம்*

ந ஏகஸ்மிந் அஸம்பவாத் 2-2-31.

ஒரே வஸ்துவிலேயே ஸத்வம், அஸத்வம் (இருப்பு இல்லாமை) என்றாற்போன்ற தர்மங்கள் இல்லை, விருத்தங்களான தர்மங்கள் சேராவாகையால், தர்மங்களும் தர்மியும் ஒன்றாகாவாகையால். ஜைநர்கள் அநேகாந்தவாதிகள். அதாவது ஒன்றோடொன்று முரண்பட்ட தர்மங்களை ஓரிடத்திலே இசைகின்றவர்கள். ஸப்தபங்கீ என்று ஏழு தர்மங்களை ஒவ்வொன்றிலும் சொல்லுகிறார்கள். அவையாவன— ஸத்வம், அஸத்வம், ஸதஸத்வம், ஸதஸத்விலக்ஷணத்வம், ஸத்வவிசிஷ்ட ஸதஸத்விலக்ஷணத்வம், அஸத்வவிசிஷ்ட விலக்ஷணத்வம், ஸத்வாஸத்வவிசிஷ்ட விலக்ஷணத்வம்

என்பனபோல்வன. இவற்றை,'ஸ்யாதஸ்தி, ஸ்யாத்நாஸ்தி' என்று தொடங்கி ஏழு வாக்யங்களாலே சொல்வர். ஸத்வம் போலே நித்ய மென்பதையெடுத்து, 'ஸ்யாத்நித்யம், ஸ்யாத் அநித்யம்' என்றவாறும், 'ஸ்யாத் பிந்நம் ஸ்யாத் அபிந்நம்' என்றுற் போலுமெல்லாம் ஏழு வாக்யங்களையும் படிப்பர். இப்படி ஸத்வம், அஸத்வம் முதலான விருத்ததர்மங்களும், நித்யத்வம் அநித்யத்வம் முதலான விருத்த தர்மங்களும் இப் படியே பிந்நத்வம் (வேறுயிருக்கை) அபிந்நத்வம் முதலான வைகளும் அவர்களால் ஒன்றிலே இசையப் ப[illegible]நால் அவர் களின் வாதம் அநேகாந்தவாதம்.

இந்த தர்மங்கள் எங்கேயிருக்கின்றன என்னில், உல கிலுள்ள வஸ்துக்களிலென்க. அவை யாவை யென்னில், அவற்றை ஜீவதத்துவம், அஜீவதத்துவம் என்று இரு வகையாகப் பிரித்து அஜீவதத்துவத்தை தர்மம் அதர்மம் புத்கலம் காலம் ஆகாசம் என ஐந்துவிதமாகப் பிரித்து மொத்தம் ஆறு த்ரவ்யங்கள் என்கின்றனர். புத்கலங்களா வன—அணு முதலானஸூக்ஷ்மஸ்தூலங்களான பூமி முத லிய த்ரவ்யங்கள். த்ரவ்யமொன்றுனுலும் அதற்குப் பல மாறுதல்கள் உள. அவையாவன அவஸ்தைகள், குடமா யிருக்கை, பிண்டமாயிருக்கை போன்றவை. அவஸ்தை களுக்கு பர்யாயமென்று அவர் கொண்ட பரிபாஷை. அந் தந்த வஸ்து த்ரவயமென்று பார்க்கப்படும்போது அது ஸத், நித்யம் என்றெல்லாமாகும்; பர்யாயம் என்ற மாறுதல் களைக்கொண்டு பார்க்கும்போது அவை அஸ்திரமானவை யாகையாலே அஸத் அநித்யம் என்றவாறும், ஆகையால் ஒவ்வொரு த்ரவயத்திற்கும் விருத்த தர்மங்களெல்லாம் உள என்பர்.

அவர்கள் ஈச்வரனை அங்கீகரிக்கவில்லை. தத்துவஜ் ஞானம் மோக்ஷமென்பனவெல்லாங்கூட அவர்கள் சொல் வது வேறுவிதமாயிருக்கிறது. அந்த விஷயத்திலே செய்ய வேண்டும் குணதோஷ விசாரம் வேறு. அது நிற்க. ஸூத்ர காரர் இங்கே அந்த அநேகாந்த வாதத்தை தூஷிக்கிறுர்- எவ்வாறெனில். த்ரவ்யத்திற்குப் பல மாறுதல்கள் வருவது உண்மை. மாறுதல்களும் த்ரவ்யமும் ஒன்றல்ல. த்ரவ்யம் மாறுதல்களுக்கு ஆதாரமான வஸ்து. மாறுதல்கள் அதனில் உள்ள தர்மங்கள். தர்மங்களும் தர்மியும் வேறு. அவற்றில் தர்மியான த்ரவ்யம் ஒன்று, ஸத் நித்யம் என்னப்படுகிறது. தர்மங்களான மாறுதல்கள், அநேகம் அஸத், அநித்யம் என்னப்படும். ஆகையால் நன்கு ஆராய்ந்தால் ஒன்றிலே

முரண்படும் பல சேர்வதில்லை. ஆகையால் அநேகாந்த வாதம் சரியன்று. மண் எனப்படுவதொன்றிலே குடமாயிருக்கை மடக்காயிருக்கை என்ற பல மாறுதல்களிருக்கின்றனவே என்ன வேண்டா: குடமாயிருக்கும் மண் பாகம் வேறு. மடக்காயிருப்பது வேறு, ஒரே வஸ்துவுக்குப் பிறப்பும் இறப்புமான விருத்த தர்மங்கள் உளவே என்னில், பிறப்பும் இறப்பும் ஒரே காலத்தில் இருந்தால் விரோதமே யன்றி வெவ்வேறு காலத்தில் வருவதில் விரோதமில்லை. உற்பத்தி என்றும், விநாசம் என்றும் அவஸ்தைகளைச் சொல்வது. அவ்வித பல அவஸ்தையையுடையது பற்றி த்ரவ்யத்தை அநித்யமென்கிறோம்; அவ் அவஸ்தை பெறாத த்ரவ்யத்தை (ஆத்மாவை) நித்ய மென்கிறோம். இத்தகைய நித்யாநித்யத்வங்கள் ஒன்றுக்கே இருக்கமாட்டா. விருத்தமானவையெல்லாம் ஒவ்வோரிடத்திலும் சேருமாகில் உலகில் வாதப்ரதிவாதங்களுக்கே பெரும்பான்மை இடமிராமற்போகுமென்றவாறு. (31)

ஏவம் ச ஆத்மாகார்த்ஸ்ந்யம் 2-2-32.

ஒவ்வொரு ஆத்மாவும் பெரிய உடலிலிருக்கும்போது பெரிதாயும் சிறிய உடலில் சிறியதாயும் உடலுக்கேற்ற உருவமுடையதாகுமென்பர் ஜைநர், இது சரியன்று. பெரிய உடலுக்கேற்ற பேருருவம் கொண்ட ஆத்மா சிறியஉடலில் முழுமையும் புகுந்திருக்கமுடியாதே. (32)

ந ச பர்யாயாத் அபி அவிரோத: விகாராதிப்ய: 2-2-33.

பரவலும் சுருங்கலும் ஆத்மாவுக்கு உண்டாகையால் ஆங்காங்கு முழு ஆத்மாவும் உளதென்னல் ஆகாது. அப்போது ஆத்மா பல விகாரமுள்ளதாய் அநித்யமாய் பூமி ஜலம் இவற்றைப் போலே ஜடமாய் ஆகிவிடுமே. (33)

அந்த்யாவஸ்த்திதே: ச உபயநித்யத்வாத் அவிசேஷ: 2-2-34.

மோக்ஷத்தில் ஜீவனுக்கு ஒரு பரிமாணத்தை (அளவை) இசையவேண்டும். அது எப்போதும் அழியாததாகையாலே உண்டாகாததென்னவேண்டும். ஆகையால் முன்னும் அதே பரிமாணம் ஆத்மாவில் இருக்கவேண்டுமாகையால் அந்த பரிமாணம் இருக்கும்போது வேறு பரிமாணம் ஸம்ஸார காலத்திலும் ஆத்மாவுக்கு இருக்கவியலாது, ஆகையால் உடலுக்கொத்த அளவு ஜீவனுக்கென்னவொண்ணாது.

(7) பத்யதிகரணம்

பத்யு: அஸாமஞ்ஜஸ்யாத் 2-2-35.

பாசுபத மென்ற பசுபதியின் மதமும் ஆதரிக்கத்தக்க தன்று. தத்துவம், ஆசாரமிரண்டும் வேத விருத்தங்களாகவே கொள்ளப்பட்டிருப்பதால். பசுபதி என்ற சிவனுர் எல்லாம் ப்ரத்யக்ஷமாகப் பார்த்தவராகையால் அவர் உபதேசித்த மதம் உயர்ந்ததென்னலாகாது, ஒரு காரணத்திற்காக அவர் வேத விருத்தமாகவே உபதேசம் செய்திருப்பதால். வேதாந்தத்தில் நிமித்த காரணமும் உபாதாந காரணமுமொன்று, அது நாராயணனென்ற தத்துவம் எனவுபதேசமிருக்க, நிமித்தம் வேறு சிவன், உபாதாநம் வேறு ப்ரக்ருதி யென்றங்கே சொல்வதும், கள் மொடாவை வைத்து அதில் தேவதையைப் ப்ரதிஷ்டை செய்து பூசிப்பது, முத்ரிகாஷடகம் (லிங்கம் கட்டிக்கொள்வது, ஹாரம், குண்டலம், குடுமிமணி, பஸ்மம், யக்ஞோபவீதம்) தாரணம் முதலான விபரீத தர்மங்களைச் சொல்வதும் கூடா. (35)

அதிஷ்டாநாநுபபத்தே: ச. **2–2–36.**

ஈச்வரனை யுக்தியினுல் ஸ்தாபிக்கின்றனர். அப்படியாகில் குயவன் முதலான கர்த்தாக்கள் உடலின்றி மண் முதலானவற்றிலே வியாபாரிக்க வியாலாததுபோல் ஈச்வரனுக்கு மியலாதென்று உடல் வேண்டும். அது ஸாவயவமாய் அநித்யமாயிருக்கும். ஆக அவன் சரீரமில்லாதபோது அஸமர்த்தனுவான். (36)

கரணவத் சேத் ந போகாதிப்ய: **2–2–37.**

ஜீவன் தனது உடல், இந்திரியங்கள் இவற்றை ஏவுதற்கு வேறு உடலை வேண்டுகிறதில்லையே; அதுபோல் ஈச்வரனும் உடலின்றியே உலகில் காரணங்களை ஏவுகின்ருனென்னில்—அத்தகைய ஏவுதல் ஜீவனுக்குப் புண்யபாபங்களின் துணையாலேற்பட்டது. அதுபோல் புண்யபாபங்கள் ஈச்வரனுக்குமாம். ஆக ஸுகதுக்கங்களெல்லாம் வரும். (37)

அந்தவத்த்வம் அஸர்வஜ்ஞதா வா. **2–2–38.**

புண்யபாபங்களுக்கு வசப்படுவதால் அழிவும் அஜ்ஞானமும் ஈச்வரனுக்கும் இசையும் படியாம். (38)

(8) உத்பத்யஸம்பவாதிகரணம்

இக் கடை யதிகரணத்தில் பாஞ்சராத்ரம் மட்டும் முன் மதங்கள்போலன்றி ப்ரமாணம் எனப்படுகிறது. அதுவும் அப்ரமாணமாகவேண்டும் என்று முதலில் இரண்டு ஸூத்ரங்களால் பூர்வபக்ஷம் செய்யப்படுகிறது—

**உத்பத்யஸம்பவாத். 2-2-39.**

வாஸுதேவனிடமிருந்து ஸங்கர்ஷணன் என்ற ஜீவன் உண்டாகிறு னென்றது பாஞ்சராத்ரம். ஜீவனுக்கு உத்பத்தி கூடுமோ? (39)

**ந ச கர்த்து: கரணம். 2-2-40.**

ஸங்கர்ஷணனிடமிருந்து ப்ரத்யும்ந மென்ற மனம் பிறக்கிறதென்கிறது. மனது அஹங்காரதத்துவத்தினின்று பிறப்பதே யன்றி ஜீவனிடமிருந்து பிறப்பதில்லையே. ப்ரம்மத்தினிடமிருந்து மனது பிறக்கிறதென்றாலும் வேதத்துடன் இணையும். அதுவு மில்லை. மேலும் வேதங்களினின்று பேறு பெறமாட்டாமல் சாண்டில்யர் பாஞ்சாராத்ரத்தைக் கற்றாரென்று வேதங்களை நிந்திக்கிறது. ஆகையால் பாஞ்சராத்ரம் அப்ரமாணமென்பது பூர்வபக்ஷம். (40)

**விஜ்ஞாநாதிபாவே வா தத்ப்ரதிஷேத: 2-2-41.**

ஸங்கர்ஷணன் ஜீவனாகாமல் விஜ்ஞானஸ்வரூபமாய் காரணமுமான நாராயணனாகிறபடியால் பரவாஸுதேவ மூர்த்தியினின்று வ்யூஹரூபியான ஸங்கர்ஷணமூர்த்தியான பகவான் அவதரிப்பதையே பாஞ்சாரத்ரம் சொல்வதால் விரோதமில்லை. ஜீவனுக்குப் பிறப்பைச் சொல்லவில்லையே. 'ஸங்கர்ஷணன் ஜீவன்' என்பதற்கு ஜீவாபிமானியான ஸங்கர்ஷணபகவான் என்பது பொருள். ஜீவசப்தம் ஜீவனையுடலாக உடைய பரமாத்மாவைச் சொல்லும். தேஜஸ், அப், முதலான சப்தங்களால் வேதத்தில் அந்தந்த பூதத்தையுடலாக உடைய பரமாத்மாவைச் சொல்லுகிறோமே. அது போலாமிது. இவ்வாறே ஸங்கர்ஷண மூர்ததியினின்று ப்ரத்யும்னமூர்த்தியான பகவானின் அவதாரமே மேலே மொழியப்படுகிறது. மனம் என்பதற்கு மனத்திற்கு அபிமானி, மனத்தையுடலாக உடைய ப்ரத்யும்னனென்ற பொருளாம். ஆகையால் பாஞ்சராத்ர சாஸ்திரத்திற்கு ப்ராமாண்யத்தைத் தகையலாகாது. (41)

**விப்ரதிஷேதாத் ச. 2-2-42.**

பாஞ்சராத்ரத்திலும், 'ஜீவன் அநாதி. அழிவற்றவன் ப்ரக்ருதியோடு எப்போதும் முற்கால முழுதும் ஸம்பந்தமுடையவன்' என்று சொல்லப்பட்டிருப்பதால் அதுடன் முரண்படுவதால், 'ஜீவன் உண்டாகிறுன்' என்ற பொருள் முன் வாக்யத்திற் கொள்ளலாகாது. அங்ஙனமே வேதத்திற்கு ப்ராமாண்யத்தைப் பாஞ்சராத்ரத்திற் பலவிடங்களில் சொல்லியிருப்பதால் முன் எடுத்த வாக்கியத்திற்கு வேத

நிந்தை பொருளாகாது. பின் அதன் கருத்தென்ன வெனில்—சாந்தோக்யத்திலே ருக்வேதம் முதலான எல்லா வித்யைகளையும் பெற்றும் தமக்கு ஆத்மஜ்ஞான மில்லை யென்று நாரதர் சொன்னதாகவும், ஸநத்குமாரர் பூமவித்யை யைக் கொண்டு அவருக்கு ஆத்மஞானத்தைப் பிறப்பித்த தாகவும் கூறப்பட்டுள்ளதே, இங்ஙனம் எல்லா வித்யைகளை யும் நிந்திக்கலாமா. பூமவித்யையைக் கொண்டாடுவதற்கா கப் பேசின பேச்சு அது என்னில், இங்கும் பாஞ்சராத்ரத் தைப் புகழ்வதற்காகப் பேசினதுமட்டுமேயல்லது வேதங்களை நிந்திப்பதற்கன்றென்னல் வேண்டும். இல்லை யேல், பாஞ்ச ராத்திரத்திலுள்ள மற்ற வாக்கியங்களோடு முரண்படும். ஆகையால் ஒரு விரோதமுமில்லையாகையால் ஸர்வஜ்ஞனாய் ஆப்தனான ஸ்ரீமந்நாராயணனாலே அருளப்பெற்ற ஸ்ரீ பாஞ்ச ராத்ரம் ப்ரமாணமே யாகிறது. (42)

2-ம் அத்யாயம் 2-ம் பாதம் முற்றிற்று.

---

## 2-ம் அத்யாயம் மூன்றும் பாதம்

வேதாந்தத்திற் சொல்லப்பட்ட ஸர்வஜகத்காரணமான ப்ரம்மத்தை வேறு மதங்களின் போக்கைக் கொண்டு பாதிக் கவோ, அதில் விவாதப்படவோ முடியாதென்றது நிரூபிக் கப்பட்டது. இனி வேதாந்தத்திலேயே சில வாக்கியங்களைக் கொண்டு ப்ரம்மம் சில வஸ்துக்களுக்குக் காரணமாகமாட் டாதென விஞக்கள் எழ அவற்றை இரண்டு பாதங்க ளாலே விலக்கி ஸர்வகாரணம் அதென்றது ஸ்தாபிக்கப் படுகிறதாம்.

(1) வியததிகரணம்

**ந வியத் அச்ருதே:** **2–3–1.**

ஆத்மாவைப் போல் ஆகாயமும் அவயவமற்றதாய் எங் கும் வியாபித்திருப்பதாலே உண்டாகமாட்டாது. அதனால் தான் சாந்தோக்யோபநிஷத்தில் அதன் உற்பத்தியைச் சொல்லவில்லை. தைத்திரீயத்திலே சொன்னவிடம் வேறு பொருள் கொண்டு நிர்வஹிக்கப்படவேண்டும் என்றது பூர்வபக்ஷம். (1)

**அஸ்தி து.** **2–3–2.**

தைத்திரீயத்தில் ஓதினபடி ஆகாயத்திற்கு உற்பத்தி யுண்டு. அது அவயவங்களற்றதென்றதும் எங்கும் பரவின

தென்றதும் ப்ரமாணவிருத்தமாம். ஆகாயத்திற்கு மேலாக விபுவான வஸ்துக்கள் உள. ஆகாயத்தைப் பல பாகமாகப் பிரிப்பதும் உண்டென்றது சித்தாந்தம். (2)

மீண்டும் இரண்டு ஸூத்ரங்களில் பூர்வபக்ஷம்.

கௌணீ அஸம்பவாத் சப்தாத் ச. 2-3-3.

சாந்தோக்யத்திலே முதலில் தேஜஸ்ஸின் ஸ்ருஷ்டியைச் சொன்னதால் ஆகாயமுண்டாவதானால் முதலில் அதனைச் சொல்லியிருக்குமாகையால் ஆகாயம் உண்டாகவில்லை. (ஆகில் வாயுவும் உண்டாகமாட்டாதென்னில் அங்ஙனமே ஆகுக.) வாயுவும் ஆகாயமும் அழிவற்றதென வேதமே ஓதுகின்றதே. ஆகையால் சாந்தோக்யப்படி ஆகாயம் உண்டாகமாட்டாதாகையாலும் அழிவற்றதென்ற வேதத்தினாலும் ஆகாயம் அநாதியானபடியாலே தைத்திரீயத்தில் ஸம்பூத என்றதற்குப் பொருள் வேறு, மேலே வேண்டும் ஸ்ருஷ்டிக்கு உரியதான ஸாமக்ரியுடன் இருந்ததென்றவாறு பொருளாம். (3)

ஸ்யாத் ச ஏகஸ்ய ப்ரஹ்மசப்தவத். 2-3-4.

'ஸம்பூத:' என்ற சொல்லே, வாயுவினின்று அக்னி, அக்னியினின்று நீர்' என்ற மேல்வாக்கியங்களிலே சேரும்போது உண்டாயிற்றென்ற பொருளையும், ஆகாயம் ஸம்பூதமென்றபோது வேறு பொருளையும் உரைக்குமோ என்ன வேண்டா. ப்ரம்மசப்தம் போலாம். ஒரே ஸந்தர்ப்பத்தில் 'ஸர்வஜ்ஞமான அக்ஷர தத்துவத்தினிடம் இந்த ப்ரம்மம் நாமரூபங்கள் பூமியெல்லாம் உண்டாகின்றன', 'ஸங்கற்பத்தினால் ப்ரம்மம் புஷ்டி யடைகிறது. அதனின்று பூமி உண்டாகிறது' என்ற விடத்திலே முதல் ப்ரம்ம சப்தம் ப்ரக்ருதி பரிணமத்தையும் இரண்டாம் ப்ரம்மசப்தம் பரப்ரம்மத்தையும் சொல்லுகிறதுபோல் ஸம்பூதசப்தமும் இரண்டுவாக்யங்களில் வெவ்வேறு பொருளைக் கூறலாகுமே. (4)

ப்ரதிஜ்ஞா஽ஹாநி: அவ்யதிரேகாத். 2-3-5.

'எது கேட்கப்பட்டதால் கேட்கப்படாததும் கேட்கப்பட்டதாகுமோ' என்றவாறு ப்ரம்மஞானத்தினாலே ஆகாயம் முதலியன வெல்லாம் அறியப்பட்டுவிட்டன வாகும் என்று முதலில் ப்ரதிஜ்ஞை செய்து அதை மேலே விரித்துரைக்கிற விடத்திலே ஆகாயத்தை யெடுக்காமற்போனாலும் 'எல்லாம்' என்ற சொல் ஆகாயத்தையும் கூட்ட, ப்ரம்மத்தினிடமிருந்து எல்லாம் உண்டாகின்றது போல் ஆகாயமும் உண்டாவதா

யிருந்து ப்ரம்மமாகிற காரணத்தைக் காட்டிலும் ஆகாய மாகிற கார்யமும் வேருகாமலிருக்கவேண்டும். இல்லாமற் போனல் எல்லாம் அறியப்படும் என்ற ப்ரதிஜ்ஞைக்குக் கேடாம். (5)

சப்தேப்ய: **2–3–6.**

'ஸத்து ஒன்றுதான் முன் இருந்தது.' 'அதனையே எல்லாம் ஆத்மாவாக உடையது' என்ற வாக்கியங்களில் ஒன்றே இருந்ததென்றதால் ஆகாயம் முன் இல்லை யென் றும், எல்லாம் ஸத்தே என்றதால் ஆகாயத்திற்கும் ஸத்து காரணமென்றும் தெளியலாம். தேஜஸ்ஸை முதலிற் சொன் னதைமட்டும் கொண்டு மற்ற சப்தங்களினின்று கிடைப் பதை விடலாகாது. (6)

யாவத்விகாரம் து விபாகோ லோகவத். **2–3–7.**

தேஜஸ்ஸை முதலிற் சொன்னலும் வேறு ப்ரம்மாணங்க ளால் விகாரமாய் ஏற்பட்டவற்றிற்கெல்லாம் உற்பத்தியைச் சொன்னதாகக் கொள்ளவேண்டும். உலகிலும் இவரெல் லோரும் தேவதத்தனுடைய பிள்ளைகளென்று சொல்லி அவர்களில் ஒரு சிலரைப் பெயரிட்டுச் சொல்வதுண்டு. அங் கும் முதற்பிள்ளையையே முதலில் குறிப்பதென்பது கிடை யாது. பின் பிறந்தாரிலும் சிலரை யறிவிப்பதிலுள்ள ஸௌகர்யத்தையிட்டுக் குறித்துவிட்டுப் பொதுவாக எல் லோரும் என்று முடிப்பதுண்டு. ஆகாயத்தை அழிவற்ற தென்று சொல்லிற்றே யென்னில், தேவதைகளை அமரர்க ளென்னுமா போலே வெகுகாலமிருப்பதைக் கருதி அவ் வாறு சொன்னதாம். (7)

ஏதேந மாதரிச்வா வ்யாக்யாத: **2–3–8.**

ஆகாயத்தைப் போலே காற்றும் ப்ரம்மத்தினின்று உண்டானதெனத் தெளிக. காற்றும் நித்யமாயிருக்கட்டு மே யென்று முன் சொன்னதை மாற்றிக்கொள்க. வெகு காலமிருப்பதாலே அதனையும் அழிவற்றதாகச் சொல்ல லாமே. மேல் அதிகரணத்திலே தேஜஸ்ஸு இதினின்று உண்டா[illegible] போலிருந் [illegible] 'இதினின்று' என்ற [illegible] த்தைக் கொள்வதற்கு இணங்க இங்கே காற்றுவிஷயமாக ஒரு ஸூத்ரம் இயற்றியதல்லாது காற்று விஷயத்தில் ஆகாயத்தைவிட ப்ரபலமாக ஒரு பூர்வபக்ஷம் பிறந்து அதன் ஸமாதானத்திற்காக வன்றெனத் தெளிக. (இந்த ஸூத்ரம் இருப்பதால்தான் காற்றும் உண்டாகாத

தாயிருக்கட்டுமே என்று பூர்வபக்ஷி நினைக்கிறனென்று முன்னே ஊஹிக்க அவகாச மேற்பட்டது). (8)

**அஸம்பவ: து ஸத: அநுபபத்தே:** **2–3–9.**

ஸத்து என்று சொல்லப்படும் ப்ரம்மமொன்றே உண்டாகாதது. ஆகாயத்திற்குப் பின் உள்ள காற்று முதலானவை மட்டுமன்றி, முன்னுன மஹத் அஹங்காரம் என்றுற் போன்றவையும் உண்டாகின்றனவேயாம். இல்லாவிட்டால் ஒன்றையறிந்ததா லெல்லாம் அறியப்படுமென்கிற ப்ரதிஜ்ஞை சரிப்படாதாதலின். (9)

(2) தேஜோதிகரணம்

நான்கு ஸூத்ரங்களில் பூர்வபக்ஷம்.

**தேஜோऽத: ததா ஹி ஆஹ.** **2–3–10.**

வாயுவினின்றே தேஜஸ்ஸே உண்டாகிறதல்லது ப்ரம்மத்தினின்றல்ல. 'வாயோரக்நி:' என்றுதானே ஓதுகின்றது. (10)

**ஆப: 2–3–11.** **ப்ருதிவீ. 2–3–12.**

நீரே அக்னியினின்றே,பூமியே நீரினின்றே உண்டாம். அவ்வாறே ஓதப்படுவதால். (11-12)

**அதிகார ரூப சப்தாந்தரேப்ய:** **2–3–13.**

சாந்தோக்யத்திலேஅந்நமென்றதுபூமியேயாம். அக்னி, நீர் இவற்றோடுசேர்ந்து சொல்லப்பட்டதால். மேலே கறுப்பு நிறம் அன்னத்தினுடையதென்றதால் ; பூமிக்கே கறுப்புநிறமானதால். தைத்திரீயத்திலே நீரினின்று பூமியுண்டாயிற்றென்றதால். இந்த மூன்று காரணங்களாலே அன்னமென்றது பூமியையென்க. இது சித்தாந்தியுமிசைந்ததே. (13)

**ஸித்தாந்தம்—தததபித்யாநாத் ஏவ து தல்லிங்காத் ஸ: 2–3–14.**

காரணமாயிருப்பதும் கார்யமாயிருப்பதும் பரமாத்மா என்பதற்கு ஸாதகமாயுள்ள காரணத்தின் ஸங்கல்பத்தைக் கொண்டு பரமாத்மாவே தேஜஸ் முதலானவற்றை உடலாக உடையவனுய் கார்யமும் காரணமுமாகிறுனென்க. நான் வெகுவாக ஆகக்கடவேன் என்று ஸங்கல்ப்பித்து ஸத்து தேஜஸ்ஸை ஸ்ருஷ்டி செய்தது—தேஜஸ்ஸு, நீர் என்பனவும் அவ்வாறே ஸங்கல்ப்பித்து நீர், பூமி இவற்றை ஸ்ருஷ்டித்தன என்றுல் தேஜஸ்முதலான சொற்களுக்கு வெறும் பூதங்கள் பொருளாகமாட்டாவே.

ஸங்கல்ப்பசக்தி யவற்றிற்கில்லையே. ஆகையால் தேஜச்சரீரகப்ரம்மம் உண்டாகிறது. அதுவே ஜலசரீரகப்ரம்மத்திற்குக் காரணமாகிறதென்றவாறும். (14)

**விபர்யயேண து க்ரம: அத: உபபத்யதே ச. 2-3-15.**

ப்ரம்மம் முதலிலொன்றுக்கு மட்டும் காரணம்; மற்றவை அததனின்று உண்டாகிறன, ஒரு ஸந்ததியிலே கூடஸ்தபுருஷன் எல்லோருக்கும் தந்தையாக மாட்டுமோ, அது போலென்கிறது சரியன்று—பூர்வபக்ஷி நினைத்ததற்கு மாறுகப் பரமாத்மாவினிடமிருந்தே ப்ராணன், மனம், இந்திரியங்கள், பூமிவரையிலான பூதங்களெல்லாம் உண்டாகின்றதாகச் சொன்னது எல்லாவற்றிலும் அந்தர்யாமியாயிருந்து ப்ரம்மம் காரணமாமென்று கொண்டால்தான் பொருந்தும். (15)

**அந்தரா விஜ்ஞாநமநஸீ க்ரமேண தல்லிங்காத் இதி சேத் ந அவிசேஷாத். 2-3-16.**

கீழ்ஸூத்திரத்தில் எடுத்த வசனத்தின் கருத்து வேறு. என்எனில்—வசனத்தின் பொருளாவது—ப்ரம்மத்தினிடமிருந்து ப்ராணன் உண்டாகிறது; மனதும். இந்திரியங்களும், வானமும், காற்றும், தீயும், நீரும், உலகினை தரிக்கும் பூமியும் (உண்டாகின்றன) என்றதே. இதன் கருத்தாவது. ஐந்து பூதங்களுக்கும் தன்மாத்ரைகள் காரணமென்று ஸாங்க்யரும் இசைந்தனர். அவையாவன--சப்ததன்மாத்ரம், ஸ்பர்சதன்மாத்ரம், ரூபதன்மாத்ரம், ரஸதன்மாத்ரம், கந்ததன்மாத்ரம் என்பன. இத் தன்மாத்ரங்கள் பிறந்தவுடனே பூதங்கள் உண்டாகிறன வென்று நினைக்கவேண்டாம். இடையிலே இந்த்ரியங்களும் மனதும் சேர்ந்து உண்டாகின்றன என்று கொள்க என்கிறது. இதற்கு ஸுபாலோபநிஷத்தை ஆதாரமாகக் கொள்க. அங்கே பூமி நீரில் லயிக்கிறதெனத் தொடங்கி, 'வாயு ஆதாசத்தில் லயிக்கிறது, ஆகாசம் இந்திரியங்களில், இந்திரியங்கள் தன்மாத்ரங்களில்' என்று லயமுறையைச் சொன்னதினின்று உற்பத்திமுறையும் ஏற்படுமே. அங்கே ப்ராணனைச் சொல்லவில்லையே யென்னில், இங்குச் சொன்னதால் அங்கும் அதைக் கொள்ளலாம்; ஸூத்ரத்திலும் விஜ்ஞானம் என்ற சொல் அறிவுக்கு சாதனங்களான இந்திரியங்களோடு ப்ராணனையும் குறிக்கலாம். ஆகையால் ஸுபாலோபநிஷத்து ஸாதகமாயிருப்பதால் இவ்வசனத்திற்கு இது கருத்தென்னில்—

இது யுக்தமன்று. இவ்வாறு நிர்ணயம் செய்வதற்கு

உரிய ஸாதகமில்லையாகையால். எவ்வாறேனும் முறை யிருக்கட்டும்; ஒன்றின்பின் மற்றொன்றென்பதையெல்லோ ரும் இசைந்துளோம். அப்போதும் காரணமான வஸ்து, அதத்தற்கந்தர்யாமியான ப்ரம்மமேயல்லது தனிவஸ்துவல்ல வென்பதே தெளியவேண்டுவது. (ஸூத்ரத்தில் அவி சேஷாத்' என்பதற்குப் பல கருத்துக்கள் உள. அதாவது, ப்ரணனை இடையில் உண்டாவதாகக் கூறமுடியாமையால் அதுபோலே மற்ற விஷயத்திலு மாமென்றதொன்று; ஸ்வபாலோபநிஷத்தே அவ்வாறு பெரருள் கூறவியலா தென்பது மற்றொன்று!; நாம் முன்சொன்ன கருத்தைவிட்டு இக்கருத்தைக்கொள்வதற்கு ஸாதகமில்லை யென்பது வேறொன்று; தன்மாத்ரங்களைப் பற்றின ப்ரஸ்தாவமும் இங் கில்லை யென்பது மொன்றென்றவாறு). (16)

இப்படி எல்லாச் சொற்களுக்கும் ப்ரம்மம் பொருள் என்று கொண்டால் சொற்கள் ஆகுபெயர்களாய்விடுமே என்ற கேள்விக்குப் பரிஹாரமாக மேல் ஸூத்ரம்)

**சராசரவ்யபாச்ரய: து ஸ்யாத் தத்வ்யபதேச:**
**அபாக்த: தத்பாவபாவித்வாத்.** **2–3–17.**

உலகிலுள்ள ஜங்கமஸ்தாவரங்களைச் சொல்வதற் கான சொற்கள் ப்ரம்மத்தைச் சொல்வதென்றால் ஆகுபெய ராகா. ஜங்கமஸ்தாவரங்களான பொருட்களை விடாமல் அவற்றிற்கு அந்தர்யாமியென்று அவற்றையுமுள்ளடக்கி ப்ரம்மத்தைச் சொல்லும்பொழுது முக்கியமேயாம். ப்ரம்மத் தின் ஸத்தைக்கு அதீனமன்றோ அவற்றின் ஸத்தை; ஆக அது அப்ருதக்ஸித்தமான ஆதாரம். ப்ரம்மத்தை விட்டு இவை இருக்கமாட்டா; இவை அப்ருதக்ஸித்த ஆதேயம். அவ்வாறு உள்ளவிடத்தில் ஆதேயத்திற்கேற்பட்ட சொல் ஆதாரத்தையும் சேர்த்தே சொல்லும். (17)

(3) *ஆத்மாதிகரணம்*

**ந ஆத்மா ச்ருதே: நித்யத்வாத் ச தாப்ய:** **2–3–18.**

அசேதனங்களெல்லாம் உண்டாகின்றன வென்ற வண்ணம் ஜீவாத்மாவும் ப்ரம்மத்தினிடமிருந்து உண்டாக வேண்டும். இல்லையேல் ப்ரம்மஜ்ஞானத்தினால் எல்லாம் அறிந்ததாகுமென்ற ப்ரதிஜ்ஞைக்குக்கேடாமே. 'ஜீவர்களை யும் நீருடன் பூமியிலே விசேஷமாக ஸ்ருஷ்டித்தான்,' 'ப்ரஜைகளின் நாதன் ப்ரஜைகளை ஸ்ருஷ்டித்தான்' என்ற வாறு வசனங்களும் உள. ஜீவாத்மா நித்யமென்ற வாக்ய மோவெனில், ஆகாயம் அழியாததென்ற வாக்யம்போலே,

வெகுகாலம் ஆத்மா இருக்கின்றதென்ற கருத்துடையதாம் என்கிருன் பூர்வபக்ஷி. ஸித்தாந்தமாவது—ஆத்மா பிறக்கிறதில்லை யென்று வேதம் ஓதுவதாலும், வேதங்களினின்றே ஆத்மா அழிவற்றதெனத் தெரிவதாலும் ஜீவாத்மா உண்டாகாது. உண்டாகின்றதாகக் கொண்டால் அதற்குமுன் ஆத்மா இல்லையாகையாலே முதன் முதல் உண்டாம் போது ஆத்மாக்களின் ஸுகதுக்கங்களில் உள்ள வேறுபாட்டுக்குப் பூர்வ கர்மம் காரணமாகா. அப்போது கர்மமின்றியே பலனென்பதாம். ஈச்வரனுக்கு தயையின்மை வைஷம்யம் என்ற தோஷங்களும் நேரும். ஆகில் ஜீவஸ்ருஷ்டியைச் சொல்லும் வேதத்திற்கு என்ன கதியென்னில் பலனை யனுபவிப்பதற்கேற்ப ஜீவனுடைய தர்மபூதஜ்ஞானத்தில் ஒருவிதமான விகாஸமுண்டாகிற தென்பதாம். ஸ்ருஷ்டிக்குமுன் ப்ரம்மமொன்றே யிருந்ததென்கிற வாக்யத்தில் ஒன்று என்றதும் ஸ்ருஷ்டிகாலத்திற்போலே நாமரூபங்களாலாம் பிரிவில்லை யென்பதனுலல்லது ஜீவர்களே இல்லையென்பதாலல்ல. ஆக ஏகவிஜ்ஞானத்தினுலே ஸர்வவிஜ்ஞானம் என்பதற்கு நாமரூபவிபாகமற்ற சேதனர்களோடு சேர்ந்த ப்ரம்மத்தின் ஞானத்திலே நாமரூபவிபாகம் பெற்ற சேதனர்களோடு சேர்ந்த ப்ரம்மம் கோசரமாகவே யிருக்கிறதென்று பொருளாம். (18)

(4)

ஜ்ஞ: அத: ஏவ. **2–3–19.**

ஜீவனுக்கு ஜ்ஞானமென்பது எப்போதுமுள்ள குணமென்றிங்கே ஸ்தாபிக்கிறதாம். ஜீவன் ஞானஸ்ரூபனய் மட்டுமிருக்கிறவனு ? அல்லது ஞானம் குணமாக உண்டு— ஆனல் சிற்சில காலங்களில் உண்டாகுமென்பதா ? அல்லது எப்போதுமே அவனுக்கு ஞானம் குணமாகவுமுண்டென்பதா என விசாரிக்கப்படுகிறது. வேதத்தில், 'விஜ்ஞானமானது யாகத்தைச் செய்கிறது, [illegible] [illegible] றவன, ஆத்மா ஜ்ஞானஸ்வரூபமாய் மிக நிர்மலமானது' என்றவாறுள்ள வாக்கியங்களைக் கொண்டு ஆத்மாவே ஜ்ஞானஸ்வரூப மல்லது ஞானம் குணமாக இல்லை யென்றது முதற்பூர்வபக்ஷம்.

உறக்கம், மூர்ச்சை முதலான தசைகளில் ஆத்மா இருந்தும் ஞானமில்லையாகையால், விழித்துக்கொண்டிருக்கும்போதும் இந்திரியங்கள் பரவாதபோது ஞானமுண்டாகவில்லையாகையால் ஞானமென்பது சிற்சில காலத்தில் உண்

டாம் குணமே. ஆகையால் ஆத்மா கல்லு போல் ஜடமா னதே. ஆத்மா எங்கும் வியாபித்துள்ளதானதாலும் ஜ்ஞான ஸ்வரூபமாகாது. ஸ்வயம்ப்ரகாசமாய் எங்குமிருந்தால் எங் கும் தன் ப்ரகாசமிருக்கவேண்டும். அதற்காக அணுஸ்வரூப னென்னவுமொண்ணுது, ஸ்வர்கம், பூமி முதலிய பல இடங் களிலும் ஆத்மாவுக்கு போகம் ஏற்படுவதால் ஆங்காங்கு ஆத்மா இருந்தாகவேண்டுமே. அனுபவிக்குமிடத்திற்கு ஆத்மா செல்லுகிருனென்கிற கல்ப்பனை யின்றி எங்குமுளன் என்றே சொல்லக்கூடுமாயிருக்க அக் கல்ப்பனையும் யுக்த மன்று. காஞ்சியிலிருப்பவனுக்கு வேண்டும் கார்யம் காசி யிலும் நடக்கிறது. இவனது கார்யத்திற்கு இவனது ஸம் பந்தம் அவசியம் வேண்டும். ஆகையால் ஆத்மா வ்யாபி யாய் ஜடமாயிருக்குமென்றது தார்க்கிகபூர்வபக்ஷம்.

ஸித்தாந்தமாவது—வெளியிந்திரியங்களால் விஷயங் களை யுணர்கின்ருன், மனத்திஞல் எல்லாம் பார்த்தனுபவிக் கிருன். காணும் ஸ்வபாவ முடையவன் அழிவைக் காண்ப தில்லை. காண்கின்றவன் எல்லாவற்றையும் காண்கிருன் என்றவாறு அறிவையுடையவஞக வேதம் சொல்வதால் ஞானம் குணமாம். அது எப்போதுமுளதாகில் உறக்கம் மூர்ச்சை முதலான தசைகளில் தோன்றவில்லையே யென்ன வேண்டா. ஞானம் அந்தந்த ஆத்மாவின் கர்மங்களுக்கீடாகச் சுருங்கியிருப்பதால் இந்திரியங்கள்வாயிலாகப்பரவினபோது விஷயங்களைக்ரஹித்துத் தோன்றுமாம். 'மரணமடைந்த பிறகு ஸம்ஜ்ஞையில்லை' என்கிற வசனத்திற்கு அறிவே யில்லை யென்றபொருளில்லை. ஸம்ஸாரத்திலுள்ள தேஹாத் மப்ரமாதிகள் முக்தனுக்கில்லை யென்பதாம். பிறவியைச் சார்ந்த உடலை யவன் நினைக்கமாட்டான் என்றும் ஓதிற்றே, வ்யாபியான ஆத்மா ஞானஸ்வரூபஞகலாமோ என்னில், ஞானமுடையவஞவது போல் ஆத்மா ஜ்ஞான ஸ்வரூபனு மாம்; ஜீவாத்மா அணுவானபடியாலே வியாபியென்றதே இசையவியலாததாம். (1ீ)

உத்க்ராந்திகத்யாக்நீநாம். 2–3–20.

ப்ரகாசத்தை உதவியாகக்கொண்டு ஆத்மா உடலி னின்று வெளிக்கிளம்புகிருன், இவ்வுலகத்தினின்று போகின்றவர்களெல்லாம் சந்திரனையே யடையகின்றனர், அவ்வுலகினின்று இவ்வுலகுக்குக் கர்மங்களைப்பெற மீண் டும் வருகின்ருன்' என்று வெளிப்படுவது, போவது, வரு வது என்றிவற்றை யோதுவதால் ஆத்மா வியாபியல்லன்,

**ஸ்வாத்மநா ச உத்தரயோ:** **2-3-21.**

வெளிப்படுவது என்பதற்கு உடலுக்கு ஸ்வாமியான தன்மையை இழப்பது எனப் பொருள் கூறலாமாயினும் மேலிரண்டும் ஆத்மாதன்னாலேயே பெறப்படுவதாம் (21)

**ந அணு: அதத்ச்ருதே: இதி சேத் ந இதராதிகாராத்.** **2-3-22.**

விஜ்ஞானமயனை ஜீவனையெடுத்து மஹான் என்றதாலே அணுவல்லனென்ன வேண்டா. ஜீவாந்தர்யாமியான பரமாத்மாவை அங்கே மஹான் என்றது. (22)

**ஸ்வசப்தோந்மாநாப்யாம் ச.** **2-3-23.**

'யாதொருவனிடத்தில் ஐந்து விதமான ப்ராணவாயு அமர்ந்திருக்கிறது, இந்த அணுவான ஆத்மாவை மனத்தினால் த்யானிக்கவேண்டும்' என்று அணுசப்தமேயிருப்பதாலும் ஜீவாத்மா அணுவே. உந்மானத்தினாலும் அணுவென்றது அறியப்படுகிறது ; உந்மானமாவது ஓர் உதாரணத்தை யெடுத்து அதன் அளவை யிடுவது. 'செருப்பாணியின் முனையின் அளவுடையனாக அவரனான—கீழ்ப்பட்டவனான ஆத்மா அறியப்படுகிறான்' என்றதே. (23)

ஆத்மா அணுவாய் ஓரிடத்திலுள்ளனாகில் உடல் அடங்கலும் உண்டாம் ஸுகாதிகளை யனுபவிப்பது எங்ஙனமென்ற கேள்விக்குச் சிலர் சொல்லும் மறுமொழி—

**அவிரோத: சந்தநவத்.** **2-3-24.**

சிறந்த சந்தனம் ஸ்வல்ப்பமாக உடலில் ஓரிடத்தில் வைக்கப்பட்டாலும் அது உடலெங்கும் பரவும் களிப்பை உண்டுபண்ணுகிறதுபோலாகக் குறையில்லை. (24)

**அவஸ்திதிவைசேஷ்யாத் இதி சேத் ந அப்யுபகமாத் ஹ்ருதி ஹி.** **2-3-25.**

சந்தனத்தின் சிறிய பாகமானது உடலில் ஒருவிதமான இடத்தில் இருக்கும்போது அவ்வாறு களிப்பை யளிப்பதென்னில், இங்கும் குற்றமில்லை—ஆத்மாவும் ஹ்ருயத்திலேதானே இசையப்பட்டுள்ளது. 'ஞானங்கள் பலவகை பெற்றவன் இந்திரியங்களுடன் ஹ்ருதயத்திலுளன். தானேப்ரகாசிக்கின்றவன், என்றன காண்க. (25)

சிலரின் மறுமொழியைக் கூறினார் ; தம் கருத்தை வெளியிடுகிறார்.—

**குணாத் வா ஆலோகவத்.** **2-3-26.**

வா என்ற சொல் முன்சொன்ன மதத்தைத் தள்ளவாம். ஆத்மா அணுவாயினும் தன்னுடைய குணமான ஞானத் திறல் எங்கும் பரந்துளன். மணி சூரியன் முதலானவை தம் ஒளியால் பரந்திருப்பதுபோல்; ஆகையால் உடல் முழுவதிலும் ஸுகாதிகளை யனுபவிக்கும். (26)

'விஜ்ஞானம் யாகத்தைச் செய்கிறது' என்ற வேதம் ஆத்மாவை ஞானமாகவே சொல்லாநிற்க ஞானம் குண மாமோ வென்னில்.—

வ்யதிரேக: கந்த்தவத் ததா ச தர்சயதி. 2–3–27.

நான் அறிகிறேன் என்று அறிவுக்கு ஆதாரமாகத் தோற்றுவதால் அறிவைக்காட்டிலும் வேறுவான்; மண முள்ளது மண் என்றதினின்று மண்ணுக்கு மணம் குணம் என்னுமாபோலே. வேதமும் ஆத்மா எப்போதும் அறிவை யுடையவன் என்கிறது. (27)

ப்ருதக் உபதேசாத். 2–3–28.

முன் சொன்னது அன்றி, 'அறிவானுடைய அறிவுக்கு அழிவில்லை' என்று ஆத்மாவைக்காட்டிலும் வேறாக அறிவை உபதேசிக்கின்றதும் காண்க. (28)

தத்குணஸாரத்வாத் து தத்வ்யபதேச: ப்ராஜ்ஞவத். 2–3-29.

ஆத்மாவை ஞானமென்றே சொன்னதும் ஞானமவ னுக்கு ஸாரமான குணமாகையாலாம். பரமாத்மா ஸர்வஜ்ஞ ஞய் அறிவு நிறைந்தவனுயிருக்க அவனை, ஸத்யம் ஜ்ஞா னம்' என்ற ச்ருதி அறிவாகவே சொல்லியுள்ளதே. அது போலாகுக. (29)

யாவதாத்மபாவித்வாத் ச ந தோஷ: தத்தர்சநாத். 2–3–30.

ஞானமானது ஆத்மாவான ஆதாரமிருக்கும் போதெல் லாம் விடாமலிருப்பதாலே தர்மத்தைச் சொல்லும் சொல் லால் தர்மியைச் சொல்வதில் குற்றமில்லை. கண்டம், முண் டம், என்றவாறு மாட்டில் சில ஜாதிகளைக் கூறும் சொற்க ளாலே வஸ்துவையும் சொல்வது அனுபவத்திலுள்ளதே. (ச என்ற சொல் ஆத்மாவுக்கு ஞானஸ்வரூபனுகையு முண் டென்கிறது), (30)

உறக்கம் முதலான காலத்தில் ஆத்மாவில் ஞானமில் லாமலிருக்க, எப்போதுமுளதென்னலாமோ என்னில்—

பும்ஸ்த்வாதிவத் து அஸ்ய ஸத: அபிவ்யக்தியோகாத். 2–3–31.

இக் கேள்வியும் எழாது. புருஷனுக்கு ஆண்மை

யென்பது எப்போது மிருந்தாலும் யௌவனத்திலேயே அதற்குத் தோற்றம் உளது. இரத்தம், மாம்ஸம் முதலிய ஏழு தாதுக்களும் உடலில் எப்பொழுது மிருப்பதால் ஆண்மையும் எப்போதுமுளதே. இவ்வாறு உதாரணங்களைக் காண்க. (31)

ஆத்மா அணுவாய் ஞானத்தை யுடையவனென்ற பக்ஷம் ஸ்த்தாபிக்கப்பட்டது. பிற மதத்திலே தோஷம் மேலே கூறப்படுகிறது—

**நித்யோபலப்த்யநுபலப்த்திப்ரஸங்க: அந்யதரநியம: வா அந்யதா.** 2–3–32.

**அந்யதா**=வேறுவிதமாகில், அதாவது ஜ்ஞானஸ்வரூபனாய் எங்கும் பரவியுளனென்றுகொள்ளில் குற்றமாம். எவ்வாறெனில்—ஆத்மா இருப்பது ஹ்ருதயத்தில் தோற்றுகிறது. வேறிடத்திலும் வெளியிலும்தோற்றவில்லை. இப்படியுள்ள ப்ரகாசம், அப்ரகாசம் இரண்டுக்கும் எங்குமுள்ள ஆத்மா காரணமாகில் ப்ரகாசமும் அப்ரகாசமும் சேர்ந்தே எல்லாவிடத்திலும் எப்போதுமிருக்கட்டுமே. ஓரிடத்தில் ப்ரகாசம், மற்றோரிடத்தில் அப்ரகாசமென்பதெங்ஙனம்? ப்ரகாசத்திற்கு மட்டும் காரணமாகில் எங்கும் அது தோன்றவேண்டும், அப்ரகாசத்திற்குமட்டும் காரணமாகில் ஓரிடத்திலும் தோற்றமிருக்கலாகாது. ஞானஸ்வரூபம் ஆத்மா என்னுது, 'ஞானம் ஆத்மாவின் குணம், சிலகாலம் உண்டாகிறது, எப்போதுமில்லை. ஞானமுண்டாகிறபோது ஆத்மா தோன்றும்' என்கிற தார்க்கிகமதத்திலும் ஆத்மா எங்குமுளதானதால் ஆத்மாவுக்கு எல்லாவிடங்களிலும் பல மனங்களோடு ஸம்பந்த மிருப்பதால் எப்போதும் எங்கும் ஞானமுண்டாகி ஆத்மாவின் தோற்றம் எப்போதும் வரவேண்டியதாகும். ஒவ்வொரு மனமே ஒவ்வொரு ஆத்மாவைச் சார்ந்ததென்று அத்ருஷ்டத்தின் மஹிமையாலேற்பட்டிருப்பதால் வேறு மனதோடு ஸம்பந்தம் இவனுக்கு ஞானத்தை யுண்டுபண்ணுதென்னவேண்டா. அத்ருஷ்டத்திற்குக் காரணமான செயல்களும் அத்ருஷ்டமும் கூட ஆத்மா எங்குமுளதானபடியால், எல்லோருக்கும் பொதுவாகலாமே. மேலும், ஞானம் ஓரிடத்தில் ஒரு ஸமயம் உண்டாவதானாலும் எங்குமுள்ள ஆத்மா ஹ்ருதயத்தில் மட்டும் தோற்றுவது கூடுமோ? அன்றி, உண்டாகும் ஞானம ஆத்மாவைத் தோற்றுவிக்கும் ஸ்பாவமுடையதா, தோற்றுவிக்காமையை ஸ்வ்பாவமாக வுடையதா. இரண்டுமென்னில் தோற்றம் தோற்றமின்மை இரண்டும் எப்போதுமாம். ஒரே ஸ்வபாவமாகில்

ஒன்றுமட்டுமே எப்போதுமாம். (இங்கு ஆத்மாவுக்கு ஞானம் எப்போதுமிருக்கிறதென்ற ஸித்தாந்தபக்ஷத்தில் ஞானம் தன்னை ப்ரகாசப்படுத்தும் ஸ்வபாவமுடையதா இல்லையா. ஞானம் தோன்றும் ஸமயமுண்டு, தோன்றாத ஸமயமு முண்டு, இரண்டும் அதற்கு ஸ்வபாவ மென்னில்—ஆத்மா வோடு ஞானம் எப்போதும் ப்ரகாசித்துக்கொண்டும் ப்ரகா சிக்காமலு மிருக்கவேண்டியதாம். அப்ரகாசமே ஸ்வபாவ மாகில் எப்போதும் ப்ராசிக்காதாம். ப்ரகாசமே ஸ்வபாவ மாகில் எப்போதும் ப்ரகாசிக்கவேண்டுமாம்—என்று பிறர் கேட்பதை மனதில் கருதி ஸூத்ரகாரர் இத்தகைய தோஷம் பிறருக்கே உண்டென்கிறார். ஸித்தாந்தத்தில் தோஷத் தைப் பரிஹரிப்பதெவ்வாறெனில், ஆத்மாவின் ப்ரகாசம் எப்போது மிருக்கவேண்டு மென்று கேள்வியா, ஞானத் திற்காக ஆத்மா உறக்கத்திற்கூட 'நான்' என ப்ரகாசிக் கின்றதென இசைந்தே யுளோம். ஞானம் எப்போதுமன்றி விஷயஸம்பந்தம் நேர்ந்தபோது தான் ப்ரகாசிக்குமென்ப தால் ஆண்மையைப் போல் அது தோன்றுவது சில பொழுதே யாகையால் குற்றமில்லை யென்க.) (32)

(5) *கர்த்ரதிகரணம்*

**கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்வாத். 2-3-33.**

ஆத்மா செய்கின்றவனல்லன். ப்ருக்ருதியே காரியங் களைச் செய்கிறது. ப்ரக்ருதி பரிணமமான புத்திதத்துவத் தோடு தன்னை ஒன்றாக ஆத்மா ப்ரமித்துக்கொண்டதால் அதற்குள்ளதை தன்மேல் ஏறிட்டுக்கொண்டு தான் கருத்தா என நினைக்கிறானென்பது ஸாங்யமதம். ப்ரக்ருதியே செய் கிறது; ப்ரக்ருதியின் குணங்களான ஸத்துவரஜஸ்தமஸ் ஸுக்களைத் தவிர வேறொன்றைக் கர்த்தாவாக நினைக்கலா காதென்று கீதையும் அறிவிக்கின்றது என்றது பூர்வபக்ஷம். ஸ்வர்க்கம், மோக்ஷம் முதலான பலன்களுக்காகச் செயல் களை விதிக்கும் சாஸ்திரம் பயன்படுவதற்காக ஆத்மாவையே கர்த்தாவாகக் கொள்ளவேண்டும். சாஸ்த்ரம் உபதேசிப் பது அறிகின்றவனைக் குறித்தாம். அறிகின்றவன் சேத னன் ஆத்மா. அறிகின்றவன் அனுஷ்டிக்கவேண்டுமென் றிருக்க அறியாத ப்ரக்ருதியை கர்த்தா என்பது கூடுமோ? (கீதையின் கருத்தென்னவெனில், ஆத்மாவுக்கு ப்ரக்ருதி ஸம்பந்தமிராமல் இத்தகைய கர்த்ருத்வம் இல்லை. அந்தந்த குணங்களின் சேர்க்கைக்குத் தக்க காரியங்களையே ஆத்மா செய்பவன் என்றதேயாம். (33)

**உபாதாநாத் விஹாரோபதேசாத் ச. 2-3-34**

'இப்படியே இந்த ஜீவாத்மா தனது இந்திரியங்களை எடுத்துக்கொண்டு தனது சரீரத்தில் இஷ்டப்படி ஸஞ்சரிக்கிறான்' என்று எடுக்கையிலும் ஸஞ்சரிக்கையிலும் ஆத்மாவைக் கர்த்தாவாகச் சொல்வதாலும்.

சரீரம் இந்திரியம் இவற்றை பிரித்தன்றோ ஆத்மாவுக்கு ஸஞ்சரிக்கும் தன்மையைச் சொல்லுகிறது. (34)

**வ்யபதேசாத் ச க்ரியாயாம் ந சேத் நிர்தேசவிபர்யய: 2-3-35.**

யாகத்தைச் செய்கிறான், மற்ற செயல்களைச் செய்கிறான் சேதநனென்று விஜ்ஞாநபதத்தாலே ஆத்மாவை யெடுத்துச் சொல்லுகிறது. விஞ்ஞானபதம் புத்திதத்வத்தைச் சொல்வதாகில் 'விஜ்ஞானத்தினுல் செய்கிறான்' என்று மூன்றும் வேற்றுமையே யிருக்கும். கருத்தாவாக விஜ்ஞானத்தைச் சொல்வது பொருந்தாது. (35)

**உபலப்திவத் அநியம: 2-3-36.**

ஆத்மா எங்குமுள்ளவனுனல் ஆத்மா ஓரிடத்தில் அறியப்படுகிறதும் மற்றவிடத்திலே அறியப்படாமலிருப்பதுமான வ்யவஸ்தை இசையவியலாதென்று 32-ம் ஸூத்ரத்திலே சொன்னது போல், 'ப்ரக்ருதியே செய்கிறது, ஆத்மா அனுபவிப்பதுமட்டு' மென்றுகொண்டால் ப்ரக்ருதி எல்லா ஆத்மாக்களுக்கும் பொதுவானதாலே அது செய்ததை எல்லா ஆத்மாக்களும் அனுபவிப்பதாம்; எல்லா போகங்களும் எல்லோருக்குமாம். அவனவன் அந்தக்கரணம் செய்ததற்குப் பலன் அவனவன் அனுபவிக்கிறனென்னலுமாகாது. எல்லா ஆத்மாக்களும் வியாபிக்கின்றவர்களாய் எல்லா அந்தக்கரணங்களோடும் ஸம்பந்தப்பட்டிருக்கும் போது ஒன்றை ஒருவனுக்கென்று வகுக்கக் காரணமில்லையே. (36)

**சக்திவிபர்யயாத். 2-3-37.**

புத்திதத்துவமாகிற ப்ரக்ருதிபரிணமத்திற்குக் கர்த்ருத்வ சக்தியை யிசைந்தால், அநுபவிக்கின்றதும் அதுவேயாம். ஆக சேதநதத்துவமே இராதொழியும். போகாநுவத்திற்காக ஆத்மாவைக் கொள்ளவேண்டு மென்றன்றோ ஸாங்க்யர் சொன்னது. அது போம். (37)

**ஸமாத்யபாவாத் ச 2-3-38.**

புத்திக்கே கர்த்ருத்வமென்றிசைந்தால் மோக்ஷத்திற்காகச் செய்யப்படும் த்யானம் நடைபெருது. 'ப்ருக்ருதியைக்

காட்டிலும் வேருகிறேன்' என்ற த்யானத்தை ப்ரக்ருதி செய்யுமோ? இச் செயல் உலகிலுள்ள செயல்கள்போலே ப்ரக்ருதிக்கும் ஆத்மாவுக்கும் பேதமறியாமையால் வருவதன்று. (38)

**யதா ச தக்ஷா உபயதா.** **2–3–39.**

ஆத்மாவைக் கருத்தனுக இசைந்தால் எப்போதும் செய்துகொண்டே யிருக்குமென்பதில்லை. தச்சன் தச்சு வேலையை இஷ்டப்படும்போது செய்கிருன், இல்லையேல் விடுகிருன். அது போல் ஆத்மாவும் இச்சையிருந்தால் செய்யும், இல்லையேல் செய்யாதென்னலாமே. (கர்த்ருத்வம் போல் இச்சையும் ஆத்மாவைச் சேர்ந்தது. அறிவில்லாத ப்ருக்ருதி வேலை செய்வதானல் முடுக்கிவிட்ட யந்த்ரம் போலே எப்போதும் செய்வதாயிடும். (39)

(6) *பராயத்தாதிகரணம்*

**பராத் து தத்ச்ருதே:** **2–3–40.**

ஜீவனுக்குள்ள கர்த்ருத்வம் பரமாத்மாவுக்கு அதீனமே. ஜீவன் ஸ்வதந்த்ரனுகச் செய்யவியலான். அவ்வாறு வேதம் ஓதுகிறதனுல். (40)

**க்ர்தப்ரயத்நாபேக்ஷ: து விஹிதப்ரதிஷித்தாவையர்த்யாதிப்ய:** **2–3–41.**

அவ்வாருகில், ஜீவன் நல்வினையையோ தீவினையையோ பரமாத்மா செய்விக்கவே செய்கிருனுகிறது. அப்போது ஜீவனைக் குறித்து விதிநிஷேதசாஸ்திரங்கள்— இதைச் செய்யவேண்டும் இதைச் செய்யலாகாதென்ற சாஸ்த்ரங்கள் வீணேயாமென்னில்—

செய்யவேண்டுமென்ற விதிகளும் வேண்டாமென்ற நிஷேதங்களும் வீணுகாமைக்காகவும், மற்றும் ப்ரமாணங்களைக்கொண்டும், ஜீவன் செய்த ப்ரயத்னத்தை முன்னிட்டே பரமாத்மா ஜீவனைச் செய்விக்கிருனென்று கொள்ளவேண்டும். பதுமைகளை ஆட்டுகின்றவண்ணம் ஜீவனை ஈச்வரன் ஆட்டுவதில்லை. அறிவு, ஆசை, முயற்சி யென்ற மூன்று குணங்கள் ஜீவாத்மாவுக்கு ஒவ்வொரு செயலிலுமுள. அவ்வறிவுதானும் சாஸ்த்ரோபதேச மில்லாதபோது பெறப்படாது. இப்படி யறியத் தகுதியற்று ஒருவன் பிழை செய்தால் தண்டிப்பது நியாயமே. தனது புத்தியைக் கொண்டு செய்ய முயன்ற ஜீவனைப் பார்த்து அவனுடைய மனேரதம் நிறைவேறுதற்காக அச் செயலை நடத்திவைத்து அதனு

லேற்படும் ஸுகத்துடன் துக்கத்திற்கும் அவனை ஆளாக்கு கிருன் ஈச்வரன். இப்படி நடத்திவைப்பதால் ஜீவனுடைய கர்த்ருத்வம் பரமாத்மாவுக்கு அதீனமென்கிறது. (41)

(7) அம்சாதிகரணம்

அம்ச: நாநாவ்யபதேசாத் அந்யதா ச அபி
தாசகிதவாதித்வம் அதீயதே ஏகே. 2-3-42.

ஜீவன் பரத்மாவைக்காட்டிலும் மிக வேறுபட்டவனு, அல்லது பரமாத்மாவே அஜ்ஞானம் அடைந்து ஜீவனுகிருனு, அல்லது தேஹம் முதலிய உபாதிகளால் ஜீவனுகிருனு, அல்லது ஜீவன் வேருய் பரமாத்மாவுக்கு விசேஷணமாயிருந்து அம்சமாகிருனு என்று விசாரிக்கப்படுகிறது. ஜீவாத்மாவையும் பரமாத்மாவையும் வெவ்வேருக உபாஸித்து' என்றும், 'இருவரில் ஒருவனை ஜீவன் கர்மபலனைச் சுவைத்துண்கிருன்; மற்றொருவன் உண்ணுமலே மிக்க நேர்த்தியாகவிளங்குகிருன், கர்மபலனையனுபவிக்கவேண்டியவனுயிருப்பதால் ஸ்வாதந்த்ர்ய மில்லாமல் ஜீவன் கட்டுண்டிருக்கிருன். எல்லோரையும் வசமாக்கிக்கொண்டு நியமிக்கின்றவன் அவன்' என்றெல்லாம் இருவருக்கும் ஸ்வாதந்த்ர்யம் பாரதந்த்ர்யமாம் பேதம் ஓதப்பட்டதால் இருவரும் மிக் வேருவர். ஒன்ருகச் சொல்லும் வேதத்திற்கு, 'அரசனே ப்ரஜைகளும்' என்ற வாக்யத்திற்குப் போலே ஒருவிதத்தில் ஒத்தமையைச் சொல்வதிலே நோக்கா மென்றது முதற் பக்ஷம். இந்தப் பக்ஷத்தில் பேதச்ருதிக்கு ப்ராபல்யம். இரண்டாவது பக்ஷமாவது—அபேதச்ருதியைத் தழுவிக் கொண்டு பேதச்ருதிக்கு வேறு நிர்வாஹம் செய்வது கூடும். ஒரு ஆத்மா அஜ்ஞானமுள்ள நிலை, அஜ்ஞானமற்ற நிலை என்ற பிரிவைக் கொண்டு வெவ்வேருகக் கூறப்படலாம்; அல்லது தேஹாதிகளோடு சேர்ந்த நிலை, சேராது சுத்தமாயிருக்கை யென்கிற பேத மாகலாம் என்று முறையே சாங்கரமதத்தினரும் பாஸ்கரமதத்தினரும் கொண்டது. இனி நான்காவது பக்ஷமான ஸித்தாந்தம்—பரமாத்மாவை ஸத்ய ஸங்கல்ப்பன், ஸர்வஜ்ஞன், தோஷமற்றவனென்றெல்லாம் வேதம் கோஷியாநிற்கஅவனுக்கு அஜ்ஞானமோ தேஹாதிகளின்சேர்க்கையால் மற்றும் தோஷங்களோ கொள்ளத்தகாவாகையாலே ஜீவனும் ப்ரமாத்மாவும் வேறே ஆனுல் அபேதச்ருதியும் கெடாதபடி அந்த பேதத்தைக் கொள்ளவேண்டும். ஆக ஜீவாத்மா உடல், பரமாத்மா அவனுக்கும் ஆத்மா. ஆக ஜீவாத்மா உடலாய் விசேஷணமாய் அம்ச மெனப்படுகிருன். நீலமான வஸ்துவிலே நைல்யம் அம்சம், மதுரமான

வஸ்துவுக்கு இனிப்பு ஓரம்சம் என்னுமா போலே சேதநா சேதநவிசிஷ்டமான பரமாத்மா என்ற தத்துவத்தில் சேதனன் அம்சமாகிறான். இப்படி யிசைவது பேதச்ருதியாலும் அபேதச்ருதியாலுமாம். அபேதச்ருதியை யுபேக்ஷிக்கலாகாது, 'செம்படவர்கள் ப்ரம்மம், ஊழியர்கள் ப்ரம்மம், சூதாடுகின்றவர்கள் ப்ரம்மம்' என்றெல்லாம் மிகவும் நீசரானவர்களோடும் ஐக்யம் சொல்லப்பட்டிருக்கிறதால். ஆகையால் சரீராத்மபாவமென்கிற ஸம்பந்தத்தைக் கொண்டு யாவருக்கும் அந்தர்யாமி என்று அவனது பெருமையைக் குறைக்காமல் அவனுக்கு மேன்மையைச் சொல்வதிலே நோக்கு வேதத்திற்கென்க. (42)

மந்த்ரவர்ணாத். 2-3-43.

ஸகலப்ராணிகளும் இவனுடைய பாதம் என்றதாலே அம்சமெனத் தேறுகிறது. (43)

அபி ஸ்மர்யதே. 2-3-44.

ஜீவலோகத்திலிருக்கும் சாச்வதமான ஜீவன் எனது அம்சமென்றது கீதையும். (44)

ப்ரகாசாதிவத் து ந ஏவம் பர: 2-3-45.

அம்சமென்றால் உடலில் கை ஓர் அம்சம், கால் ஓர் அம்சம் என்றாற்போலே அம்சமென்று கொள்ளலாகாது. அப்போது ஜீவனும் சேர்ந்து ப்ரம்மமாகையால் ப்ரம்மத்திற்கு ஜீவனிடமுள்ள தோஷங்களை யெல்லாம் இசைந்ததாம். பின் வேறெதென்னில்—

ஒளியுள்ள மணி, தினமணிபோன்றவற்றிற்கு ஒளி போலவும், நீலம் முதலிய வஸ்துக்களுக்கு நீலநிறம் முதலியன போலவும் ப்ரம்மத்ரவ்யம் வேறு, ஜீவத்ரவ்யம் வேறாய் ப்ரம்மத்திற்கு ஜீவன் அம்சமாகிறான், ஜீவனுக்கு தேஹம் போலே பரமாத்மாவுக்கு ஜீவாத்மா உடலாகிறானென்றால் உடலும் ஆத்மாவும் எப்பொழுதும் வேறாகையால் ஒன்றுக்குள்ள ஸ்வபாவம் மற்றொன்றுக்கு வரவேண்டு மென்பதில்லை. ஆகையால் பரமாத்மா ஜீவாத்மாவைப் போலாகான்; ஸர்வஜ்ஞனாய் தோஷமற்றே யிருப்பான். (45)

ஸ்மரந்தி ச. 2-3-46.

'ஓரிடத்திலிருக்கும் தீபம் முதலான அக்னிக்கு வெளிச்சம் எல்லா இடமும் பரவுமா போலே பரப்ரம்மத்தினின்று பிரியாமல் எங்கு முளது இச்சேதநாசேதநரூபமான உலகம் என்றும், உலகில் ப்ராணியால் உண்டுபண்ணப்படுவதும்

உண்டுபண்ணுவது மெல்லாம் விஷ்ணுவின் உடலாம் என்றும் பராசரமஹர்ஷி முதலானோர் அருளினர். (46)

அநுஜ்ஞாபரிஹாரௌ தேஹஸம்பந்தாத் ஜ்யோதிராதிவத் 2-3-47.

எல்லா ஜீவர்களும் ப்ரம்மத்தின் அம்சங்களாய் சமத்வ முடையரா யினும், சிலரை நல்லவரென்று சேர்த்துக் கொள்வதும் சிலரைத் தீயவரென்று விடுவதும் அவரவர் தேஹத்திலுள்ள மேன்மைகீழ்மையைப்பபற்றியனவாய்—பெரியோர்வீட்டிலுள்ள நெருப்பு அன்னம் முதலானவற்றைக் கொள்வதும், மயானம் முதலான விடத்திலுள்ள நெருப்பு, குற்றமுள்ளவராகக்கருதப்பட்டவரின் அன்னம் முதலானவற்றை விடுவதும் போலவாம்; (47)

அஸந்ததே: ச அவ்யதிகர: 2-3-48.

ஒவ்வொரு ஜீவனும் அணுவாய் ஒவ்வொரு உடலிலேயே ஸம்பந்தப்பட்டிருப்பதால் ஒருவனுடைய ஸுகதுக்கம் மற்றொருவருக்குக் கலக்க வழியில்லை. ஒரே ஆத்மா அஜ்ஞானத்தாலோ தேஹம் முதலிய உபாதியினாலோ பிரிக்கப்பட்டது போலிருக்கிறதென்ற அத்வைதமதங்களிலே, எல்லாவிடத்திலும் ஒன்றே ஸம்பந்தப்பட்டிருப்பதால் வ்யவஸ்த்தையைக் கடந்ததாம். (48)

ஆபாஸ: ஏவ ச 2-3-49.

ப்ரம்மத்திற்கு அஜ்ஞானத்தையும் அதனால் அது ப்ரகாசத்தை யிழிந்ததையும் கல்ப்பிக்கக் கூறும் யுக்திகளெல்லாம் ஆபாஸங்கள். தோஷமற்றதாக ப்ரம்மத்தைப் பணிக்கும் வேதத்துடனும் முரண்படும் அது. (49)

அத்ர்ஷ்டாநியமாத்: 2-3-50.

ஒரே ப்ரம்மம் உபாதியினால் பிரிக்கபபடுகிறதென்ற பாஸ்கர பக்ஷத்திலும் உபாதியான தேஹாதிகளின் ஸம்பந்தமும் அதற்குக் காரணமான அத்ருஷ்டமும் ப்ரம்மத்திற்குப் பொதுவாயிருப்பதால் ப்ரம்மம் அவயவமின்றியிருத்தல் பற்றி வெட்டிப் பாகங்களாக்க முடியாமையால் எல்லோரும் எல்லாம் அனுபவிக்கும்படியாம். (50)

அபிஸந்த்யாதிஷு அபிச ஏவம்: 2-3-51.

அத்ருஷ்டத்திற்குக் காரணமான அபிஸந்தி—நான் இதற்காக இதனைச் செய்கிறேனென்ற நோக்கு முதலானவையும் ப்ரம்மத்தினிடத்திலே பொதுவாயிருப்பனவேயாம்.

ப்ரம்மம் துண்டாக்கப்படுவதன்றே. ஆக அங்குமிதே தோஷமாம். (51)

ப்ரதேசபேதாத் இதி சேத் ந அந்தர்பாவாத்: 2-3-52.

அந்தந்த தேஹம் ஸம்பந்தப்பட்ட ப்ரம்மப்ரதேசம் வெவ்வேறுனதால் ஒரு தேஹத்தினுலேற்படும் போகம் மற்றொரு ப்ரதேசமானவேறு ஜீவனுக்கு வாராதென்ன வேண்டா. ஒரு தேஹம் இருந்த இடத்திற்கு மற்றொரு தேஹம் அசைந்து வந்தால் முன்தேஹத்தைச் சார்ந்த ப்ரம்மப்ரதேசம் வேறு தேஹத்தைச் சார்ந்ததாகின்றபடி யாலே ஒரு தேஹத்திற்கு (ஓர் உபாதிக்கு) ஸம்பந்தப்பட்ட னவேயாம் அனேக ப்ரதேசங்கள் (பாகங்கள்) என்று எல்லா தேஹங்களாலும் வரும் போகங்கள் எல்லாவற்றிற்குமே யாகும்படியாம், மற்றொரு தேஹத்தைச் சார்ந்த ப்ரம்மப்ர தேசம் இந்த தேஹத்திற்கும் சார்ந்ததாயிற்றே.

ஆகையால் ஜீவன்கள் வேறு ப்ரம்மம் வேறு என்றே கொள்க. ஆனல் ப்ரம்மத்தின் அம்சமாகும் ஜீவன். (52)

(2-ம் அத்தியாயம் மூன்றும்பாதம் முற்றிற்று.)

---

## 2-ம் அத்தியாயம் நான்காம் பாதம்

### போகஸாதனங்களைப் பற்றிய விசாரம் இப்பாதத்தில்—

(1) *ப்ராணுத்பத்யதிகரணம்*

ததா ப்ராணு: 2-4-1.

ஜீவாத்மாவுக்கு உற்பத்தியில்லை யென்று கீழே சொல்லி அந்த ப்ரஸங்கத்திலே அதன் குணுதிகளையும் விசாரித்தது. இங்கு அவ்வாத்மாவுக்குப் போலே இந்த்ரி யங்களுக்கும் உற்பத்தியில்லையாகையாலே ப்ரம்மத்திற்கும் ஸர்வகாரணத்வம் கூடாதென்று பூர்வபக்ஷம் செய்யப்படு கிறது. "ப்ரளயகாலத்திலே இவ்வுலகு இவ்வண்ணமின்றி ஸூக்ஷ்மதசையிலிருந்தது. எது அது என்னில், ரிஷிகள். யார் அவர் என்னில், ப்ரணன்களே" என்கிற ச்ருதியானது இந்த்ரியங்களை ப்ரளயத்திலுமிருப்பனவாக ஓதினதால் ஜீவனைப் போல் இந்திரியங்களும் உண்டாகின்றவை யல்ல என்றது ஸூத்ரார்த்தம். (1)

ஸித்தாந்தம்—ஸ்ருஷ்டிக்குமுன் ஒரே வஸ்து இருந்த தாகச் சொல்லியிருப்பதால் கண் மூக்கு என்றவாறு நாம ரூபவிபாகமுள்ள இந்திரியங்கள் அப்போது இருக்கமாட்டா.

பரமாத்மாவினிடமிருந்து இந்திரியங்களும் பிறக்கின்றன' என்ற வசனமும் முன்பாதத்திலே உதாஹரிக்கப்பட்டது. 'ப்ராணன்கள் ப்ரளயத்திலிருந்தன' என்ற வசனத்திற்கு இந்திரியங்கள் பொருளல்ல. ப்ராணசப்தத்தினலே பரமாத்மாவே சொல்லப்படுகிருன். ரிஷி என்ற சொல்லும் ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரிக்கும் பரமாத்மாவையே சொல்லத்தகும். ப்ராணசப்தம் பரத்மாவைச் சொல்வதென்பது முதல் அத்யாயத்திலேயே தெளிந்ததாம். ஆக ப்ராணு: என்ற பன்மை பொருந்தாதென்றே கேள்வி நின்றது—அதற்கு ஸமாதானம்....

**கௌணீ அஸம்பவாத் தத்ப்ராக்ச்ருதே: ச** 2-4-2.

பன்மையைச் சொல்லும் பகுவசனச்ருதியானது கௌணமாகும். பன்மை யென்றபொருளை விட்டு ஒருமையையே ஆகுபெயராய் உணர்த்தும்; பன்மை அப்போதுள்ளதற்குப் பொருந்தாதாதலின். ஒருமையுமில்லை யென்னவொண்ணுது; ப்ரமாத்மா ஒருவன் அப்போதிருந்தானென ச்ருதி யிருப்பதால். (2)

**தத்பூர்கத்வாத் வாச:** 2-4-3.

ப்ரமாத்மாவைத் தவிர மற்ற வஸ்துக்களின் பெயரெல்லாம், ஆகாயம் முதலிய வஸ்துக்களின் ஸ்ருஷ்டியை முற்கொண்டு உண்டாகின்றவையாதலால், 'நாமரூபங்களில்லாத வஸ்துவே முன் இருந்தது, பிறகே நாமரூபங்கள் உள்ளதாக்கப்படும்' என்று அதுவிஷயத்தில் ச்ருதியிருப்பதால் இந்திரியங்கள் அப்போதிருக்கமாட்டா. (3)

(2) ஸப்தகத்யதிகரணம்

**ஸப்தகதே: விசேஷிதத்வாத் ச** 2-4-4.

[illegible] என்று விசாரிக்கப்படுகிறது. ஏழா, பதினென்ரு என விசாரம், ப்ரமாத்மாவினின்று ஏழு ப்ராணங்கள் உண்டாகின்றன—இந்த ப்ராணன்கள் இந்த ஏழு லோகங்களிலும் ஸஞ்சரிக்கின்றன' என்று ஜீவனுடன் ஏழே இந்திரியங்கள் சொல்லப்பட்டதாலும், ஐந்து இந்திரியங்களும் மனதும் புத்தியுமென்ற ஏழும் எப்போது அசையாமலிருக்கின்றனவோ, அப்போது யோகமென்று இவ்[illegible]மைச் சொன்னதாலும் ஏழே என்றது பூர்வபக்ஷம். (4)

**ஹஸ்தாதய: து ஸ்த்திதே அத: ந ஏவம்** 2-4-5.

ஏழுதான் என்பதில்லை. ஞானேந்திரியங்கள் போலே [illegible]முதலிய கர்மேந்திரியங்களும் சரீரம் இருக்கும்போது

உபகரணங்களாக உள. ஆகையால் ஏழென்பதில்லை. 'ஏழு இந்திரியங்கள் கூடவே ஸஞ்சரிக்கின்றன' என்பதைக் கொண்டு கர்மேந்திரியங்கள் கூடப் போகாமல் உடலோடு அழிந்து விடுகின்றன என்றுவது கல்ப்பிக்கலாமல்லது அவை இந்திரியங்களல்ல வென்னவொண்ணுது. (உண்மையில் கர்மேந்திரியங்களும் கூட ஸஞ்சரிக்கின்றவையே. ஞானேந்திரியங்கள் ஸஞ்சரிக்கிக்கின்றன என்கிற ச்ருதிக்கு, அவை விஷயங்களை உணர்கின்றன என்றே பொருளாகலாம்) ஆக,'ப்ராணன்கள் உடலில் இருக்கும் இந்தப் பத்தும் பதினொன்றுவதான மனதும்' என்கிற வேதத்தைக் கொண்டு இந்திரியங்கள் பதினொன்றென்க. (4)

(3) இந்த்ரியாணுத்வாதிகரணம்

**அணவ: ச** **2-4-5.**

இந்திரியங்கள் விபுக்களா (எங்கும் பரவினவா), அணுவுருக்களா என்ன, 'எல்லா இந்திரியங்களும் ஸமங்கள் அளவற்றவைகள்' என்ற வசனத்தாலே விபுக்களாமென்று பூர்வபக்ஷம் பிறக்க, அணுக்களே யெனப்படுகிறது.'ஜீவனைப் பின்தொடரும் ப்ராணவாயுவை எல்லாப்ராணன்களும் பின் தொடர்ந்து புறப்படுகின்றன' என்றதால் ஸஞ்சாரம் செய்கின்றவை அவையெனத் தெளிவதால் விபுக்களல்ல. கண்ணுக்குப் புலப்படாமையால் அனுவுருக்களே, அதாவது ஸூக்ஷ்மங்களே. அளவற்றனவாகச் சொன்னது அவ்வாறு உபாஸனை செய்பவனுக்குப் பலன் ஒன்றைச் சொல்வதுமட்டுமென்க. (5)

**ச்ரேஷ்ட: ச** **2-4-6.**

இந்திரியங்கள்போலே முக்யப்ராணனென்ற ப்ராணவாயுவும் உண்டாகின்றதென்பது சொல்லாமலே விளங்கும். (6)

அது பொதுவான வாயுவா, வேறு என மேலே விசாரிக்கப்படுகிறது.

(4) வாயுக்ரியாதிகரணம்

**ந வாயுக்ரியே ப்ருதக் உபதேசாத்** **2–4–7.**

ப்ராணனென்று எல்லா வாயுவையும் சொல்வதா, உடலில் ஒருவகையான பரிணமத்தைப் பெற்ற வாயுவை மட்டும் சொல்வதா என்று விசாரமாம். எல்லா வாயுவையும் ப்ராணனென்று யாரும் சொல்வதில்லை. மூச்சு விடுவது உட்கொள்வது இரண்டையும் ப்ராணனெனச் சொல்வதால் வாயுவின் கதி ப்ராணனென்னலாம். உண்மையில்

அதுவுமன்று. உடலே விழாமல் தரிக்கத்தக்கதொரு வாயுவே ப்ராணனும். வாயுவைக்காட்டிலும் தனிமையாகப் படிக்கப் பட்டதால் ஸாமான்யவாயு வாகாது. த்ரவ்யங்களுடன் சேர்த்துப் படிக்கப்பட்டதைக் க்ரியை யென்னவொண்ணுது. பஞ்சபூதங்கள்போலே தனிப்பட்டதொன்று மன்று. இந்திரியங்களோடு சேர்த்துப் படிக்கப்படுவதால் இந்திரியங்கள் போலே ஜீவனுக்கு உடலில் உதவி செய்யும் ஒருவகை வாயுவே ப்ராணனெனப்படவேண்டும். (7)

சக்ஷுராதிவத் து தத்ஸஹசிஷ்ட்யாதிப்ய: 2-4-8.

இந்திரியங்களோடு சேர்த்தும் சொல்லுகிறது. எல்லாவற்றையும் ப்ராணன்களாகச் சொல்லி இதை முக்யப்ராணன் என்கிறது. ஆகையால் இந்திரியங்கள்போல் உதவுவதாம். (8)

அகரணத்வாத் ச ந தோஷ: ததா ஹி தர்சயதி. 2-4-9.

கண், செவி முதலானவற்றிற்குத் தனித்தனியே சில வியாபாரங்கள் இருக்குமா போலே ப்ராணனுக்கு ஒரு செயலுமில்லை யாகையால் ப்ராணன் அவ்வாருகாதென்ன வேண்டா; 'எது கிளம்பிவிட்டால் உடல் வெகு விகாரமாய் ஆபாஸமாய்த் தோற்றுகின்றதோ' என்றதால் ப்ராணன் உடலுக்கும் இந்திரியங்களுக்கும் சக்தியைக் கொடுத்து எல்லாச் செயல்களையும் நடத்துவதாய் அவற்றைத் தரிப்பது மாகிறபடியால். (9)

பஞ்சவ்ர்த்தி: மநோவத் வ்யபதிச்யதே. 2-4-10.

ஒரே மனமானது, காமம், ஸங்கல்ப்பம், ஸந்தேஹம், நம்பிக்கை யென்றவாறு பலவாகப் பிரிக்கப்படுவது போல் ப்ராணன் ஒன்றே ப்ராண-அபான-வ்யான-உதான-ஸமானங்களாய் ஐந்து விதமான தொழில் உள்ளதாகச் சொல்லப்படுகிறது. (10)

(5) ப்ராணுணுத்வாதிகரணம்

அணு: ச 2-4-11.

மூன்று லோகங்களோடு ஸமம் ப்ராணன் என்றதால் எங்கும் வியாபித்துள்ளது ப்ராணனென்றது பூர்வபக்ஷம். ஜீவன் உடலினின்று புறப்படும்போது உடன்புறப்படுவதால் விபு வன்று, அணு வென்பது சித்தாந்தம். (11)

(6) ஜ்யோதிராத்யதிகரணம்

ஜ்யோதிராத்யதிஷ்ட்டாநம் து ததாமநநாத்
ப்ராணவதா சப்தாத். 2-4-12.

அக்னி முதலான தேவதைகள் இந்திரியங்களுக்கு அபிமானிதேவதைகள் என்பது, அவர்கள் ஸ்வதந்த்ரர்களாயிருந்து அபிமானிக்கிறபடியாலென்பதில்லை. கீழ்ச் சொல்லப்பட்ட ப்ராணனை யுடைய ஜீவனுடன் இந்திரியங்களை அவர்கள் அபிமானிப்பது அந்தர்யாமிப்ராஹ்மணப்படி பரமாத்மாவின் ஸங்கல்பத்தினுலே. ஆகையால் அவர்களுடைய கர்த்ருத்வமும் அவனுக்கு அதீனமாம். (12)

தஸ்ய ச நித்யத்வாத். 2–4–13.

'சேதநாசேதநங்களை ஸ்ருஷ்டித்து உள்ளே புகுந்து' என்றபடி பரமாத்மா உட்புகுந்து நியமனம் செய்வது எப்போது மானபடியாலே தேவதைகளுக்கும் கர்த்ருத்வம் பரமாத்மாதீனம். (ஆக ஜீவவ்யாபாரம் பரமாத்மாதீனமென்று முன்பாதத்திற் சொன்னதுபோல் இங்கும் ப்ராணேந்திரிய வ்யாபாரங்கள் பரமாத்மாதீனர்களான அக்னி முதலிய அபிமானிதேவதைகளுக்கு அதீனங்களென்றதாயிற்று.) (13)

(7) இந்த்ரியாதிகரணம்

தே இந்த்ரியாணி தத்வ்யபதேசாத் அந்யத்ர ச்ரேஷ்டாத். 2–4–14.

ப்ராணசப்தத்தினுலே சொல்லப்படும் ப்ராணவாயுவும் கண்முதலான பதினுெரு கருவிகளும் எல்லாம் இந்திரியங்கள், ஜீவனுக்கு உடலில் உதவிசெய்வன எல்லாமாகையாலென்றது பூர்வபக்ஷம். பதினுென்றே இந்திரியங்கள் அவ்வாறு கணக்கிடப்பட்டிருப்பதால். ப்ராணவாயுவில் ப்ராணசப்தம் முக்கியமாகும்; இந்திரியங்களுக்கு அது ஆகுபெயராம்; ப்ராணவாயுவுக்கு அதீனங்களாக அவற்றின் செயலெல்லாமிருப்பதால். 'ஜீவனுக்கு உடல்போலே இந்திரியங்கள் ப்ராணவாயுவுக்கு எப்போதும் அதீனங்களானதால் ப்ராணசப்தத்தால் அவையும் சொல்லப்படுகிறன' என்று வேதமே சொல்லும். (14)

பேதச்ருதே: வைலக்ஷண்யாத் ச. 2–4–15.

'பரமாத்மாவினிடமிருந்து ப்ராணனும் இந்திரியங்களும் உண்டாகின்றன' என்று பிரித்துச் சொல்லுகிறது. இந்திரியங்களெல்லாம் ஓய்ந்திருக்கும்பொழுதும் மூச்சு வருவதும் போவது மாயிருக்கையாலும், உடலுக்குள்ளே நடக்கும் செயல்களாலும் ப்ராணவாயு வியாபரித்திருப்பது தெரியவருகின்றது. ஆதலால் ப்ராணன்களும் இந்திரியங்களென்னும்படி ஒப்புமையில்லை. (15)

(8) ஸம்ஜ்ஞாமூர்த்திக்லப்த்யதிகரணம்

**ஸம்ஜ்ஞாமூர்த்திக்லப்தி: து த்ரிவ்ருத்குர்வத: உபதேசாத். 2–4–16.**

ஸ்ருஷ்டியானது ஸமஷ்டி, வ்யஷ்டி யென இருவிதமாகும். ப்ரம்மாண்டஸ்ருஷ்டிக்கு முற்பட்டவை யெல்லாம் ஸமஷ்டிஸ்ருஷ்டி. பிரமனை யுண்டுபண்ணுவதும் பிரமனுல் பிறகு செய்யப்படுவது மெல்லாம் வ்யஷ்டிஸ்ருஷ்டி. ஸமஷ்டிஸ்ருஷ்டி முழுவதும் பரமாத்மாவினுலேயே செய்யப்படுகிறதென்றது தீர்ந்துவிட்டது. வ்யஷ்டிஸ்ஷ்ருடி அதாவது பிரமனுல் செய்யப்படும் தேவாதிஸ்ருஷ்டி பிரமனுலேயே செய்யப்படுகிறதா, பரமாத்மாவும் நிமித்த காரணமா என்று விசாரிக்கப்படுகிறது. இதனுல் பரமாத்மாவுக்கு நேராகவே ஸர்வவ்யஷ்டிகாரணத்வமு முண்டென்று ஸர்வகாரணத்வம் நன்கு ஸ்தாபிக்கப்பெற்றதாகும். பூர்வபக்ஷமாவது 'அநேந ஜீவேநாத்மநா அநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி' என்ற சாந்தோக்ய வாக்யம் வ்யஷ்டிஸ்ருஷ்டியைச் சொல்லுகிறது. 'இந்த ஜீவன் மூலமாக உட்புகுந்து நாமரூபங்களை யமைக்கிறேன்' என்று அதன் பொருளாம். இந்த ஜீவனைக்கொண்டென்று சொன்னதால் பரமாத்மா நேரிலே நாமரூபவ்யாகரணம்செய்வதில்லை யென்று தெரியவருகிறது. ஏற்கனவே பரமாத்மா எங்கும் புகுந்திருப்பதால் ஜீவன் புகுவதே இங்குச் சொல்லப்படவேண்டும். புகுவதும் நாமரூபவ்யாகரணமும் ஒருவர் செயலாம். அந்த ஜீவன் யாரென்றில் ஹிரண்யகர்ப்பன்-நான்முகன்-பிரமன். அவனை ஜீவனென்றது அவனும் ஜீவனுயிருப்பதோடு எல்லா ஜீவர்களும் அவனிடம் தங்குவதால் அவன் ஜீவஸமஷ்டி யெனப் பெயர் பெற்றவனுகையால். ஓர் அரசன், நான் எனது சாரனைக் கொண்டு பகைவரின் சைன்யத்தைக் கணக்கிடுகிறேன் என்பது போலாம் இது. அங்குச் சாரனுக்கும் அரசனுக்கு முள்ள ஸம்பந்தத்தைவிட பிரமனுக்கும் ப்ரம்மத்திற்கு முள்ள ஸம்பந்தம் சிறந்தது. ப்ரம்மத்தின் அம்சமல்லனே பிரமன். ஆகையால் பிரமன் செய்யும் நாமரூபஸ்ருஷ்டியைத் தான் செய்வதாக பரமாத்மா நினைப்பதில் குற்றமில்லை யென்றவாறு.

ஸித்தாந்தமாவது—'அநேந ஜீவேநாத்மநா அநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி; தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருதம் ஏகைகாம் கரவாணி' என்று வாக்யமிருப்பது. 'நாமரூபவியாகரணம் செய்யக்கடவேன்; அதற்காக த்ரிவர்த்கரணம் செய்யக்கடவேன்' என்று பரமாத்மா ஸங்கல்ப்பம்

செய்வதாம். த்ரிவ்ருத்கரணமாவது—மூன்று பூதங்களையும் ஒருவாறு பங்கிட்டு ஒன்றோடொன்றை இணைப்பது. இது பஞ்சீகரணத்தின் குறிப்பாகும். ஆக ஐந்து பூதங்களையும் பங்கிட்டுச் சேர்ப்பதாம். இதுவும் நாமரூப வியாகரணமும் ஒருவர் செய்வதென்பது இங்கே தெளிவாம். த்ரிவ்ருத்கரணம் செய்யப்பட்ட பூதங்களினின்றே ப்ரம்மாண்டம் ஸூர்யனைப் போன்ற வொளியுடையதாக உண்டாவதும் அதில் பிரமன் பிறப்பதும் கூறப்பட்டுளது. 'ஐந்து பூதங்களும் அதததற்கேற்பட்ட சக்தியை மட்டும் உடையனவாய் சேராமல் தனியே யிருந்து ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்க வல்லமையைப் பெருமே, ஒன்ருேடொன்று சேர்ந்து ஒன்றினுள்ளே ஒன்று பாகிக்கப்பட்டுப் புகுந்து நின்று ஒன்றுக்கொன்று உதவி பெற்றதால் பிரம்மாண்டத்தை உண்டுபண்ணுகின்றன' என்றது விஷ்ணுபுராணமும். ஆகையால் ப்ரம்மாண்டத்திற்குப் பிறகு பிறக்கும் பிரமன் அதற்கும் முன் செய்யப்படும் த்ரிவ்ருத்கரணத்தைச் செய்வதாமோ? இப்படி பரமாத்மாவே த்ரிவிர்த்கரணம் செய்கிறவன். அதுவும் நாமரூபவியாகரணமும் ஒருவனால் செய்யப்படுவதாகையால் நாமரூபஸ்ருஷ்டியையும் (பிரமனுக்கு அந்தர்யாமியாயிருந்து) பரமாத்மா செய்கிருனென்க. 'ஜீவேந ஆத்மநா' என்று ஜீவனைக்கொண்டு செய்வதாகக் கூறப்பட்டதே யென்னவேண்டா. இங்கு ஆத்மநா என்பதற்கு, தன்னாலே (என்னாலே) என்றே பொருளாம். ஜீவேந என்பதற்கு ஜீவாந்தர்யாமியான என்றது பொருள். அந்தந்த ஜீவாந்தர்யாமியாயிருந்து நான் அந்தந்த ஜீவனுடன் அங்கங்குப் புகுந்து தேவமனுஷ்யாதிவிசித்ர நாமரூபஸ்ருஷ்டியைச் செய்கிறேனென்றபடி. ஆகையால் ஜீவேநாத்மநா என்பதற்கு ஹிரண்யகர்ப்பனாலே என்ற பொருள் இல்லை. அப்போது 'ஆத்மநா' என்ற சொல்லும் வீணும். ஆகையால் பரமாத்மாவே (பஹு ஸ்யாம் என்று கீழே சொன்னபடி) நாமரூபவ்யாகரணத்திற்கு நேராகவும் கர்த்தாவாகிருன். (16)

மாம்ஸாதி பௌமம் யதாசப்தம் இதரயோ: ச 2–4–17.

த்ரிவர்த்கரணமும் ஸமஷ்டிஜீவனை பிரமனே செய்வதாகலாம். மேலே, 'புருஷனை யடைந்து ஒவ்வொன்றும் த்ரிவ்ருத்தாவதைச் சொல்லுகிறேன்; கேள்' என்று சிஷ்யனுக்குக் கூறி அதனை மேலே விளக்குகிருர்—அன்னம் புசிக்கப்பட்டு மூன்ருக்கப்படுகிறது, நீரும், தேஜஸ்ஸுங் கூட அவ்வாறு மூன்ருக்கப்படுகின்றன என்று. இந்த அன்னமும் நீரும் தேஜஸ்ஸும் ப்ரம்மாண்டத்திற்குட்பட்டு புருஷனால் புசிக்கப்படும் வஸ்துவே. ஆகையால் பிரமனே

த்ருவிருத்கரணம் செய்பவனுகலா மென்ற கேள்விக்கு மேலே ஸமாதானம்—

'அன்னம் மூன்ருக்கப்படுகிறது. அதில் மிகப் பெரிய பாகம் மலம், நடுவான பாகம் மாம்ஸம், வெகு நுண்ணிய பாகம் மனது (அதாவது மனதுக்குப் போஷகமாம்)' என்ற வாக்யத்திலே முதலிற் சொன்ன மலமும், மாம்ஸமும், மனத்துக்குச் சேரும் பாகமுங் கூட பூமியைச் சேர்ந்தனவே. இவ்வாறே நீர் அருந்தப்பட்டு மூன்ருக்கப்படுமவற்றில் மூன்று பாகங்களும் நீரே, தேஜஸ்ஸின் பாகங்களிலும் மூன்றும் தேஜஸ்ஸே. ஆகையால் நமக்கு விசாரத்திலுள்ள த்ரிவ்ருத்கரணமும் இதுவும் ஒன்ருகா. முதலில் சொன்ன த்ரிவ்ருத்கரணமாவது பூமி, ஜலம் முதலியவற்றைப் பல பாகங்களாகப் பிரித்து எல்லாவற்றிலும் எல்லாம் கலக்கும்படி சேர்ப்பது. அதைப் பிரிப்பதென்ருல் ஒரு பாகம் பூமியும் மற்ெருரு பாகம் நீரும் மற்ெருன்று தேஜஸ்ஸுமாம். அவ்வகையையே இங்கும் சொல்வதாஞல் மாம்ஸம் நீராகவேண்டும்; மனதிற்குச் சேரும் ஸூக்ஷ்மம் தேஜஸ்ஸாகவேண்டும். அவ்வாறு கூறுவது அனுபவத்திற்கிசையாது. மூன்றில் அன்னத்தின் ஸூக்ஷ்மம் மனதிற்கும், நீரின் ஸூக்ஷ்மம் ப்ராணனுக்கும், தேஜஸ்ஸின் ஸூக்ஷ்மம் வாக்இந்திரியத்திற்கும் சேருகின்றன. மனதிற்சேரும் ஸூக்ஷ்மம் தேஜஸ்ஸாகில், 'அந்நமயம் மந:' என்ற வாக்யம் சேராது. தேஜோமயம் மந: என்னவேண்டியதாகும். அவ்வாறே ஆபோமய: ப்ராண: என்றதும், தேஜோமயீ வாக் என்றதும் சேரா. ஆகையால் மேற்கூறப்படும் விபாகம் ப்ரம்மாண்டத்திலுள்ள அன்னம் முதலான ஒவ்வொரு பூதத்திற்கே மூன்ருகும் விபாகமாம். முதறிற் சொன்ன த்ரிவிர்த்கரணம் மூன்று பூதங்களிலும் பாகம் செய்து ஒன்ருேடொன்றை ப்ரம்மாண்டஸ்ருஷ்டிக்கு முன்னே சேர்ப்பதாம். அது பரமாத்மாவிஞலேயே ஆகவேண்டும். (17)

**வைசேஷ்யாத் து தத்வாத: தத்வாத:** **2–4–18.**

ப்ரம்மாண்டத்திலுள்ள ஒவ்வொரு பூதமும் ஒன்ருேடொன்று கலந்திருக்குமாகில் எல்லாவற்றையும் எல்லாப் பெயராலும் சொல்லவேண்டுமே என்னவேண்டா. அந்தந்த பூதத்தின் பாகம் அதிகமாயிருப்பதைக் கொண்டு அந்தந்தப் பெயராலே வழங்கப்படுதலாம். அத்யாயமுடிவை யறிவிக்க ஸூத்ரத்தில் ஒரு சொல்லை மீண்டும் சொன்னது. (18)

நான்காம் பாதம் முற்றிற்று. இரண்டாம் அத்யாயம் முற்றும்.

சுபமஸ்து.

ஸ்ரீ:

# 3-ம் அத்தியாயம் முதற்பாதம்

இரண்டு அத்யாயங்களால் ஜகத்காரணமான ப்ரம்மதத்துவம் ஸ்தாபிக்கப்பெற்றது. இனி ஹிதம் புருஷார்த்தம் இரண்டையும் அறிவிக்க இரண்டத்தியாயங்கள். ப்ராப்யமான பரமாத்மாவினிடத்தில் ஆசை பிறவாமல் அதற்கு உபாயத்தை யனுஷ்டிக்கமாட்டாளுகையால் அவ் வாசையை விளைவிக்க, அந்த பரமாத்மாவுக்குள்ள நிர்தோஷகல்யாண ரூபத்வத்தைத் தெரிவிக்கவேண்டும் அவன் தவிர வேறு பலன்களில் நசை யறுப்பதற்காக ஸம்ஸாரத்தில் ஜீவன் படும் துன்பங்களையும் தெரிவிக்கவேண்டும். ஆகையால் முதலில் வைராக்யபாதத்தில் வைராக்யம் பெறுதற்கான விசாரம் செய்யப்படுகிறது.

(1) *ததந்தரப்ரதிபத்யதிகரணம்*

**ததந்தரப்ரதீபத்தௌ ரம்ஹதி ஸம்பரிஷ்வக்த:**
**ப்ரச்நநிரூபணாப்ப்யாம். 3-1-1.**

முன் அதிகரணத்தில் ஸம்ஜ்ஞையு (நாமமு)ம் மூர்த்தியும் ஜீவனுக்குச் சொல்லப்பட்டன. இம்மையிலுள்ள மூர்த்தியை விட்டு வேறு மூர்த்தியை மறுமையிலே (ஸ்வர்க்கத்திலே) பெறுவது காரணமாக, ப்ராணனும் இந்திரியங்களும் சேர்ந்த ஐந்து பூதஸூக்ஷ்மங்களாம் ஸூக்ஷ்மசரீரத்தால் அணைக்கப்பட்டவனாகவே ஜீவன் போகிறான். கேள்வியும் மறுமொழியும் இதை யறிவிக்கும். பஞ்சாக்நிவித்யையில், 'ஐந்தாவது ஆஹுதியிலே நீ புருஷனாக ஆவதை அறிவாயா' என்று கேள்வி கேட்டு மறுமொழியும் கூறப்பட்டதே, 'இவ்வாறு ஐந்தாவது ஆஹுதியில் நீர் புருஷனாகிறது' என்று. அதாவது, ஸ்வர்க்கலோகம், மேகம், பூமி, புருஷன், ஸ்திரீ என ஐந்தை அக்னிகளாகக் கல்பனை செய்து, இந்திரியங்களாம் தேவர்களாலே ஜீவன் ஸ்வர்க்காக்னியில் ஹோமம் செய்யப்பட்டு அழகிய சரீரத்தோடிருந்து அனுபவித்தபிறகு கீழே இறங்குகின்றவனாய் மேகத்திலும், மண்ணிலும், ஆணிடமும் ஹோமம் செய்யப்பட்டபிறகு ஸ்த்ரீ யென்ற அக்னியில் சேர்ந்தபோது ஸ்த்தூலசரீரமுடையவனாகிறான் என்கிறது. அதே புருஷனாகை. ஐந்தாவது ஆஹுதியிலே ஹோமம் செய்யப்பட்ட ஜலமானது பஞ்சீகரணம் செய்யப்பட்ட ஜலமானது பற்றி எல்லா பூதஸூக்ஷ்மங்களும் உள வென்பது விளங்கும். ஸ்வர்க்கலோகத்தில்

ஹோமம் செய்யப்படுவதும் நீரே. அங்கே ச்ரத்தையை ஹோமம் செய்கிறார்களென்றது. ச்ரத்தை யென்ற சொல்லுக்கு வேதத்தில் நீரிலே ப்ரயோகமுண்டு. (1)

**த்ர்யாத்மகத்வாத் து பூயஸ்த்வாத். 3–1–2.**

நீரை மட்டும் சொன்னாலும் அது த்ரிவிருத்கரணம் அல்லது பஞ்சீகரணம் செய்யப்பட்டதாகையால் எல்லா பூதஸூக்ஷ்மங்களுமுள. நீரென்ற பெயராலேயே சொல்வது ஏனென்னில், நீரின் அம்சம் அதிகமாயிருப்பதாலென்க. (2)

**ப்ராணகதேஃ ச 3–1–3.**

'உடலினின்று வெளிக்கிளம்பும் ஜீவனுக்குப் பின்னே ப்ராணனும் கிளம்புகிறது. அதனைப் பின்பற்றி எல்லா இந்திரியங்களும்' என்று ப்ராணன்கள் செல்வதைச் சொல்லுவதால் ஸூக்ஷ்ம சரீரமும் வேண்டும். அதிலேயே அவை யிருப்பனவாகையால், மனதை ஆருவதாக உடைய இந்திரியங்களை இழுத்துக்கொண்டு போகிறானென்று கீதையும் கூறும். (3)

**அக்ந்யாதிகதிச்ருதேஃ இதி சேத் ந, பாக்தத்வாத் 3–1–4.**

வாக்கு முதலான இந்திரியங்கள் அக்னி முதலான தேவதைகளிடம் மரணகாலத்திலே லயித்துவிடுவதாக வேதம் ஓதுவதால் அவை பின்செல்லா என்னலாகாது. 'மரணமடைகின்றவனின் மயிர்களும், உரோமங்களும் செடிகளிலும் மரங்களிலும் லயிக்கின்றன' என்றதே. மயிர்கள் உடலிலேயே காணப்படுகின்றனவே; அவற்றிற்கு லயம் கூடுமோ? ஆகையால் மயிர்களுக்கும் மரங்களுக்கும் அபிமானிதேவதை ஒன்று. அது மரணமடைந்தவனின் மயிர்களிலுள்ள அபிமானத்தை விட்டு மரங்களின் அபிமானத்தோடு நிற்கின்றன என்றே அங்குப் பொருளாகையால் முதலிலும், அக்னிதேவதை வாக்கில் தனது அபிமானத்தை அப்போது விடுகிறதென்றே கருதினதாம். ஆக இந்திரியங்கள் லயிக்காமல் கூடத் தொடர்ந்துபோம். (4)

**ப்ரதமே அச்ரவணாத் இதி சேத் ந, தாஃ ஏவ ஹி உபபத்தேஃ 3–1–5.**

முதல் ஹோமத்தில் நீர் சொல்லப்படவில்லை யென்ன வேண்டா. அங்குச் சொல்லப்பட்ட ச்ரத்தை யென்பது நீரேயாம். 'ஐந்தாவது ஆஹுதியில் நீர் புருஷனாகிறது' என்றால் முதலினின்று ஐந்து ஆஹுதிகளிலும் ஒன்றே ஹோமம் செய்யப்படுவது விளங்குமே. ச்ரத்தா என்ற

சொல் வேதத்தில் நீரைச் சொல்லுவதையும் கண்டுளோம்.

**அச்ருதத்வாத் இதி சேத் ந இஷ்டாதிகாரிணும் ப்ரதீதே: 3-1-6.**

ச்ரத்தை யென்ற நீர் ஹோமம் பண்ணப்படுகிறதென்றதால் ஜீவன் ஹோமம் பண்ணப்படுகிறது அங்குப் புலப்படவில்லையே யென்னவேண்டா. நீரைச் சொல்லும் சொல் ஐந்து பூதஸூக்ஷ்மங்களைச் சொல்வது மட்டுமன்றி அவற்றுடன் சேர்ந்த ஜீவனையும் சொல்லும். யாகம் முதலானவற்றைச் செய்கின்றவர்கள் புகை தொடக்கமான மார்க்கத்தில் செல்லுகிருர்களென்று மேலே சொல்லியிருப்பதால் மேலுலகம் செல்வதும் திரும்புவதும் ஜீவர்களுக்கென்பது தேறினதால். (6)

**பாக்தம் வா அநாத்மவித்த்வாத் ததா ஹி தர்சயதி. 3-1-7.**

ஆகாயத்தினின்று சந்திரனை யடைந்ததும் சந்திரனைப் போன்ற போக்யமான உருவமாகி தேவதைகளுக்கு அன்னமாகிறதென்றதே. ஜீவனைப் புசிக்க முடியுமோ. ஆகையால் ஜீவன் அங்குச் சொல்லப்படமாட்டானென்னில்—

ஆத்மஞானமில்லாத ஜீவனை தேவதைகள் தங்களுக்காக உழைக்க உபயோகப்படுத்தி வருத்துகிருர்களென்பதை யறிவிக்க தேவதைகள் இவனை சாப்பிட்டுவிடுகிருர்கள், வாயில் போட்டுக்கொள்ளுகிருர்கள், இவன் அன்னமாகிருனென்றது. ‘நமக்கு மாடுகள் போலே ஸ்வர்க்கம் போகின்றவன் தேவர்களுக்கு’ என்கிறதே வேதம். (7)

(2) *க்ருதாத்யயாதிகரணம்*

**க்ர்தாத்யயே அநுசயவாந் த்ர்ஷ்டஸ்ம்ர்திப்ப்யாம் யதேதம் அநேவம் ச 3-1-8.**

ஸ்வர்க்கம் சென்ற ஜீவன் தான் செய்த கர்மம் செலவானவுடன் பண்டு செய்த புண்யபாபங்கள் உடையனுகவே இறங்குகிருன். வேதமும் ஸ்ம்ருதியும் இதில் ப்ரமாணம். போன வழியிலே சிறிது பாகம் திரும்பும் போதுமுண்டு. அதற்கு மேல் வேறு வழியாக வருகிருன். ஆகாயத்தினின்று ஸ்வர்க்கம் போனவர்கள் திரும்பும்போது ஆகாயத்திற்கு வருகிருர்கள். புகை முதல் ஆகாயம் வரையிலான மார்க்கம் போகும் போதிருந்தது வரும் போதில்லை; மழை, பூமி வழியாக வருகிருர்களாதலால் பிறகு வழி வேறு. (8)

சரணுத் இதி சேத் ந ததுபலக்ஷணுர்த்தா இதி கார்ஷ்ணுஜிநி: 3-1-9.

‘ரமணீய சரணு:’ என்ற சரணசப்தம் ஆசாரத்தைதான்

சொல்லும், புண்யம் பாபம் ஒன்றையும் சொல்லாதென்னில்—ஸுகதுக்கங்களுக்குக் காரணமான உடல் பெறுவதற்குக் கர்மமே காரணமாகையால் இங்கு சரணசப்தத்தினல் ஆசாரத்தைச் சொன்னது கர்மாவையும் கருத்திற் கொண்டே என்று கார்ஷ்ணாஜிநி என்ற ரிஷி விடையளிக்கின்ருர். (9)

ஆநர்த்தக்யம் இதி சேத் ந ததபேக்ஷத்வாத் 3-1-10.

அப்படியாகில் ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்ட ஆசாரங்களெல்லாம் வீணு மென்னவேண்டா. ஆசாரமிருந்தால் தான் புண்யகர்மங்கள் பலனளிக்கும். (10)

ஸுக்ருதுஷ்க்ருதே ஏவ இதி து பாதரி: 3-1-11.

ஆசாரம் புண்யகர்மங்களுக்காக என்பது உண்மை. ஆயினும், 'புண்யகர்மாவை ஆசரிக்கிருன்' 'பாபகர்மாவை ஆசரிக்கிருன்' என்றவாறு ப்ரயோகமுளதாகையால் சரண சப்தமே புண்யபாபகர்மங்களைச் சொல்லவல்லதாகையால் ஆயாஸமொன்று மில்லை யென்கிருர் பாதரிமஹர்ஷி. (11)

(3) அநிஷ்டாதிகார்யதிகரணம்

அநிஷ்டாதிகாரிணும் அபி ச ச்ருதம் 3-1-12.

பூர்வபக்ஷமாவது—யாகாதிகளைச் செய்கின்ற புண்ய புருஷர்கள் தவிர அக்ருத்யகரணம் க்ருத்யாகரணம் என்ற (வேண்டாமென்றதைச் செய்கை, வேண்டுமென்றதைச் செய்யாமையாம்) தோஷமுள்ள இருவகையாரும் சந்த்ர மண்டலம் செல்லுகின்றனர். 'மரணமடைந்து இவ்வுலகின்று செல்பவர் யாவரும் சந்திரனையே யடைகின்றனர்' என்று ஓதப்பட்டதால். (12)

ஆகில் புண்யம் செய்பவருக்கும் பாபிகளுக்கும் விசேஷமில்லை யாமென்னில்—

ஸம்யமநே து அனுபூய இதரேஷாம் ஆரோஹாவரோஹௌ தத்கதிதர்சநாத் 3-1-13.

புண்யம் செய்பவர் முதலிலேயே சந்த்ரமண்டலம் ஏறுகின்றனர். பாபிகள் யமனுடைய ஆக்ஞையாலானவற்றை யனுபவித்துவிட்டு சந்த்ரமண்டலமேறி யிறங்குகின்றனர். யமனிடம் சேர்வதும் ஓதப்பட்டதால். (13)

ஸ்மரந்தி ச 3-1-14.

இவர் எல்லோரும் யமனுக்கு வசப்படுகின்ருர்களென ஸ்ம்ருதிகாரரும் சொன்னுர்கள். (14)

அபி ஸப்த 3-1-15.

ரௌரவம் முதலிய ஏழு நரகங்களு மிருக்கின்றன. (15)

**தத்ர அபி தத்வ்யாபாராத் அவிரோத:** **3–1–16.**

ஏழு நரகங்கள் சென்றால் யமனிடம் போனதாகுமோ என்னவேண்டா. அங்கு எங்கும் அவனது ஆஜ்ஞையி னாலே செல்வதால் குற்றமில்லையே. ஆகப் பாபிகளுக்கும் சந்திரலோகம் செல்வதுண்டு. (16)

**வித்யாகர்மணோ: இதி து ப்ரக்ருதத்வாத்** **3–1–17.**

ஸித்தாந்தம்—ப்ரம்மவித்யைக்கு அர்ச்சிராதிமார்க்கம், நல்வினை செய்பவருக்கு தூமாதிமார்க்க மென்றே கொள்ள வேண்டும். பஞ்சாக்னிவித்யையிலே அப்படியே சொல்லி யிருப்பதால், பாபிகளுக்கு பரப்ரம்மப்ராப்தி போல் சந்த்ர ப்ராப்தியும் கிடையாது. (17)

ஆனால் பாபிகளுக்கு ஐந்து ஸ்த்தானங்களில் ஹோமம் என்பதில்லை யாகையால் மறு பிறவி இராதொழியு மென் னில்—

**ந த்ருதீயே ததா உபலப்தே:** **3–1–18.**

மூன்றாவது வகுப்பிற்கு ஐந்தாம் ஆஹுதி வேண்டுவ தில்லை. 'கீழ்ச் சொன்ன இரு மார்க்கங்களிலும் செல்லாத ப்ராணிகள் க்ஷுத்ரங்கள் அடிக்கடி பிறப்பது இறப்பதா னவை மூன்றாம் வகுப்பு. அவர்களுக்கு இருமார்க்கங் களுமில்லை.' (18)

**ஸ்மர்யதே அபி ச லோகே** **3–1–19.**

த்ரௌபதி முதலானோர்க்கு ஐந்து ஆஹுதிகளின் றியே பிறப்பு வழங்கப்படுகிறது. (19)

**தர்சநாத் ச** **3–1–20.**

ஐந்தாம் ஹோமமின்றியே சில ப்ராணிகளுக்கு தேஹம் உண்டாவதை வேதத்திலும் காண்கிறோம், 'முட் டையினின்று பிறப்பு, ப்ராணியினின்றே நேராகப் பிறப்பு, மண்போன்ற பூதத்தைப் பிளந்து பிறப்பு என ப்ராணிகளுக் குப் பிறப்புக்கு காரணங்கள் மூன்றும்' என்றதே. (20)

**த்ருதீயசப்தாவரோத: ஸம்சோகஜஸ்ய** **3–1–21.**

வியர்வையினின்று பிறக்கும் ஜந்துக்களுக்குக் காரணம் நான்காவது கூறப்படவேண்டுமே யென்னில், பூதத்தைப் பிளந்து பிறக்குமவற்றைச் சொல்லும் உத்பிஜ்ஜ சப்தத்தி னாலேயே அவற்றையும் கொள்க. (21)

(4) *தத்ஸ்வாபாவ்யாபத்யதிகரணம்*

**தத்ஸ்வாபாவ்யாபத்தி: உபபத்தே:** **3–1–22.**

தூமாதி மார்க்கத்தினுல் சந்திரனைச் சேர்ந்திருந்து திரும்புகின்றவன் இறங்கும் விதம் சொல்லப்படுகிறது.

'போனபடியே ஆகாயம் வந்து ஆகாயத்தினின்று வாயுவை யடைகிருன். வாயுவாய்ப் புகையாகிருன், புகையாய் மஞ்சாகிருன், மஞ்சாய் மேகமாகிருன், மேகமாய் மழையாகிருன்' என்றவாறு ஓதுகிறது. இங்கு ஆகாயம், வாயு முதலியன வாகையாவது, தேவமனுஷ்யாதியாகைபோல் சரீராத்மபாவமா, அல்லது ஆகாசாதிகளைக்காட்டிலும் வேருகத் தெரியாமே அங்குச் சேர்ந்திருப்பதா என்று ஸந்தேஹமாம். ஸ்வர்க்கத்தில், நீர் சந்திரனுயிற்று என்றவிடத்தில் சரீராத்மபாவமென்று முன்னே கூறப்பட்டது. பூமியிற் பிறந்த பிறகும் சரீர மெடுப்பது தெரிந்த விஷயம். ஆகையால் இடையிலும் அவ்வாறே யென்பது பூர்வபக்ஷம். ஸுகதுக்கானுபவம் உள்ளவிடத்தில் சரீராத்மபாவத்தை யிசையவேண்டும். ஆகாயம் வாயு முதலானவற்ருேடு சேரும்போது அவை யில்லை யாகையாலே ஆகாசாதிகளைப் போலாகுகை மட்டுமே. (22)

(5) நாதிசிராதிகரணம்

**நாதிசிரேண விசேஷாத்** **3-1-23.**

ஆகாயம் முதல் அடைவாக மழையாகிறவரையில் தாமதமு மாகலாம், விரைவிலு மாம், வ்யவஸ்தை யில்லையென்ன வேண்டா. விரைவாகவே அவ்வளவு தூரம் வந்து விடுகிருன். ஏனெனில், மழையாய் பூமியில் விழுந்து நெற்பயிர் முதலானவையாவதை மேலேசொல்லி,'அங்கிருந்து ஆத்மா வெளிப்புறப்படுவது கஷ்டஸாத்ய' மென்றதாலே அதற்கு முன் எளிதில் எல்லாம் கடந்துவருகிறது தோற்றுமே. (23)

(6) அந்யாதிஷ்ட்டிதாதிகரணம்

**அந்யாதிஷ்ட்டிதே பூர்வவத் அபிலாபாத்:** **3-1-24.**

'இறங்கிவருபவர், மழையானபிறகு, நெல், யவம், செடி, மரம், எள்ளு, உளுந்து என்றவாருன பயிர்களாக உண்டாகின்றனர்' என்றது. இங்கே உண்டாகின்றதாலே நெற்பயிர் முதலானவற்றிற்கு முக்கியமான ஜீவர்கள் இவர்களே எனத் தெரிவதால் சரீராத்மபாவமே ஸம்பந்த மென்றது பூர்வபக்ஷம், அவ்வாறு பிறக்கைக்குக் கர்மங்கள் இருப்பனவாக அங்கே சொல்ல வில்லையாகையால் வேறு ஜீவன்கள் நெல் முதலிய பயிராகி இருக்கின்றனரென்றும், அங்கு இவர்களும் ஆகாசாதிகளைப்போல் சேர்வது மட்டு மென்றும் அறியலாகிறது. மேலே ப்ராம்மணுதிசரீரங்களுக்கு நல்வினை

தீவினையென்ற காரணங்களைக் குறிப்பிட்டிருப்பதால் வினைப் பயனுன உடல் மேலே பெறப்படப்போகிறது. அதற்கு முன் இவர்கள்வரும் வழிமட்டுமாம் இதென்றே கொள்ளலாகும். (24)

அசுத்தம் இதி சேந் ந சப்தாத் 3-1-25.

ஸ்வர்க்கம் ஏறுவதற்காக இவர்கள் செய்த யாகாதி கர்மங்களில் ஆடு முதலிய ஜந்துக்களையும் ஹிம்ஸித்திருப்ப தால் பாபகர்மங்களும் இருப்பதால் அவற்றின் பலனுகப் பயிர்களாகின்றமையைக் கொள்ளலா மென்ன வேண்டா. யாகத்தில் ஹவிஸ்ஸுக்காக ஜந்துக்களை மாய்ப்பது ஹிம்ஸை யன்று; அவைகளுக்கு அது சிறந்த உடல் பெற்றுச் சுவர்க்கம் புகக் காரணமாகிறது. 'நீ மரணமடைவதோ அழிவதோ இல்லை' என்றவாறு அந்த ப்ராணிகளைப் பார்த்துச் சொல்லும் மந்த்ரத்தை நோக்குக. (சரபங்காதிரிஷிகள் தங்களைத் தீயில் வீழ்த்திக்கொண்டது ஹிம்ஸையாகுமோ?) (25)

ரேதஸ்ஸிக்யோக: அத 3-1-26.

'எவனெவன் அன்னம் புசிக்கிருன், எவன் சுக்லத்தை யோனியில் விடுகிருன், அவனுகிருன் கீழ்வந்த ஜீவன்' என்ற வாக்யத்திலே சுக்லம் விடும் தகப்பனுகுகையாவது தகப்பனது உடலிற் சேர்ந்திருப்பது மட்டுமே யன்றோ? அதுபோல் அதற்கு முன்னுமாம். (26)

யோநே: சரீரம் 3-1-27.

ஆகையால் யோனியிலிருந்து பிறக்கும்போதே ஜீவன் சரீரமடைவதாம். அங்கே ஸுகதுக்கானுபவம் இருக்கிறது அதற்குமுன் வேறு ஜீவனுடைய இடத்தில் இவன் தனியே தெரியாதபடி ஒத்துச் சேர்ந்திருக்கைமட்டு மென்க. (27)

3-ம் அத்தியாயம் முதற்பாதம் முற்றிற்று.

## 3-ம் அத்தியாயம் 2-ம் பாதம்

வேறு லோகத்திற்குப் போய்வரும்போது போலே இங்கும் பல தசைகளில் ஜீவன் படுவதை முதலிற் சொல்லுகிறது, பரமாத்மாவின் சிறப்பை யறிவிப்பதற்காக.

(1) ஸந்த்யாதிகரணம்

ஸந்த்யே ஸ்ருஷ்டி: ஆஹ ஹி 3-2-1.

'ஸ்வப்னம் காணுமிடத்தில் வண்டிகள், குதிரைகள்,

வழிகளெல்லாம் இல்லையே. ஆயினும் அவற்றை ஸ்ருஷ்டிக்கிருன்' என்றெல்லாம் ஸ்வப்னத்தில் ஸ்ருஷ்டி உண்டென்கிறது வேதம். இந்த ஸ்ருஷ்டியை ஜீவன் செய்துகொள்ளுகிருனு, அல்லது பரமாத்மா செய்கிருனு என்று விசாரிக்கப்படுகிறது. ஜீவனுக்கும் ஸத்யஸங்கல்பனுயிருக்கும் தன்மை யிருப்பதால் அவனே ஸ்ருஷ்டிக்கிருனென்றது பூர்வபக்ஷம். 'அவனல்லனே செய்கிருன்' என்று ஸ்வப்னனுபவம் யாருக்கோ அவனைச் சொல்லுவதால். (1)

**நிர்மாதாரம் ச ஏகே புத்ராதய: ச** 3–2–2.

(இந்திரியங்கள்) உறங்கும்போது (ஜீவன்) தனக்கு அனுபவிக்கவேண்டியவற்றைச் செய்துகொள்வதாக வேதம் ஓதுகிறது. அனுபவிக்கவேண்டியவை காம என்ற சொல்லால் சொல்லப்பட்டன. அச் சொல்லால் சொல்லப்படுமவை புத்ரன் முதலான இஷ்டங்களென்பது கடோபநிஷத்திலே, 'எல்லா இஷ்டங்களையும்' என்று பொதுவிலே சொல்லி, 'நூறு ஆண்டு வாழும் பிள்ளைபேரன்மார்களையும் கேட்டுப் பெறு' என்று விரித்ததால் தெரியவரும். (2)

நாந்தம்—

**மாயாமாத்ரம் து கார்த்ஸ்ந்யேந அநபிவ்யக்தஸ்வரூபத்வாத்** 3–2–3.

சொப்பனத்திலுள்ள வஸ்துக்களெல்லாம் மிக விசித்ரமானவைகளே, ஜீவனுல் ஸ்ருஷ்டிக்கப்படக் கூடியவையல்ல. ஜீவனுக்கு ஸத்யஸங்கல்பத்வமாகிற ஸ்வரூபம் இருப்பதானுலும் அதற்கு அடியோடு தோற்றமில்லையாகையால். அது சிறிதும் தோற்றுமலிருக்க ஜீவன் ஸ்ருஷ்டிக்க வல்லனே. (பல உபகரணங்கள் இருக்குமிடத்திலும் ஒன்றும் செய்ய வல்லராகாத ஜீவர்கள் மாயை யென்ற ப்ரக்ருதி மட்டும் இருந்து கருவிகள் ஒன்றுமில்லாமலே வரும் ஸ்ருஷ்டியை இந்திரியங்கள் உறங்கும்போது தாமே செய்துகொள்ளுகிருர்கள் என்பது மிக விசித்ரமாகும்). 'அவனே செய்கிறவன்' என்ற வேதவாக்யத்திற்கும் 'ப்ரஸித்தனுன பரமாத்மாவே கர்த்தா' என்ற பொருளாம். மற்றொரு வாக்கியமும், 'இந்திரியங்கள் உறங்கும்போது தனக்கு வேண்டும் புத்ராதிகளைத்தான் செய்துகொள்கிருன்' என்ற பொருளதல்ல. 'ஜீவர்கள் உறங்க இழிந்தபோது பரமாத்மா ஸங்கல்பித்து ஸங்கல்பித்தே சொப்பன வஸ்துக்களை ஸ்ருஷ்டிசெய்கிருன்' என்ற பொருளதாம், 'எல்லா உலகும் அவனை யாச்ரயித்திருக்கும்; அவனை மீளமாட்டா' என மேலே சொல்லுகிறதே. (3)

பராபித்யாநாத் து திரோஹிதம் ததஃ ஹி அஸ்ய பந்த்த விபர்யயௌ 3-2-4.

ஸத்யஸங்கல்ப்பத்வம் முதலியன ஜீவனின் ஸ்வபாவ மாகில் அவை தோன்றவேண்டாவோ, அவற்றின் கார்யங் களும் உண்டாகலாமே என்ன வேண்டா. இயற்கையான ஸ்வரூபமே பரமாத்மாவின் ஸங்கல்ப்பத்தினுலே மறைந்தி ருக்கிறது. ஸம்ஸாரபந்தமும் மோக்ஷமும் ஜீவனுக்கு அவ னுடைய ஸங்கல்பத்தினுலேயல்லவோ ஏற்படுகின்றன. (4)

தேஹயோகாத் வா ஸஃ அபி. 3-2-5.

அந்த ஸ்வரூபம் மறைந்திருப்பதென்பதும் உடலோடு நன்கு சேர்ந்திருப்பதாலும், ப்ரளயகாலத்திற் போலே வெறும் ப்ரக்ருதிஸம்பந்தத்தினுலு மாம். (5)

ஸூசகஃ ச ச்ருதேஃ ஆசக்ஷதே ச தத்விதஃ 3-2-6.

சொப்பனத்தில் ஒன்றும் ஜீவனுல் தானே ஸ்ருஷ்டிக் கப்பட்டதன்று. 'நல்ல தர்மங்களைச் செய்யுமவன் சொப்ப னத்திலே பெண்மணியைக் கண்டானுகில் தனது தர்மம் பலிக்கு மென்று தெரிந்துகொள்ளலாம்', 'கறுப்பாய் கறுத்த பற்களையு முடைய புருஷனைப் பார்ப்பவனுக்கு விபத்து' என்றெல்லாம் வேதம் ஜீவனின் நன்மை தீமை வரப்போ கின்றவற்றை சொப்பனம் காட்டு மென்கிறதே. ஸ்வப்னச் சிறப்பை ஸ்வப்னுத்யாயம் என்ற நூல் மூலம் அறிந்தவரும் சொல்லுகின்றுர்களே. இப்படி பின்னே உணர்ந்துகேட்டு அறிவுறவேண்டும் ஜீவன் சொப்பனத்தில் தானே ஸ்ருஷ்டித்துக் கொள்ளுகிருனென்னக்கூடுமோ? தனக்கு வேண்டாதவற்றையும் தான் ஸ்ருஷ்டிப்பனே? ஆகையால் சொப்பன வஸ்துக்களும் ஈச்வரஸ்ருஷ்டியே யாம். (6)

(2) ததபாவாதிகரணம்

ததபாவஃ நாடீஷு தச்ச்ருதேஃ ஆத்மநி ச 3-2-7.

சொப்பனமுமில்லாமை அதாவது உறக்கம் ஜீவனுக்கு ஹ்ருதயத்திலுள்ள நரம்புகளிலும், புரீதத்து என்ற மாமிச கோளத்திலும், பரமாத்மாவினிடத்திலுமாம். வேதத்தில், 'இந்த நரம்புகளிலே உறங்குகிருன்', 'அந்த நரம்பு வாயி லாக அகன்று புரீதத்தில் படுக்கிருன்', 'அப்போது ஸத்து என்ற பரமாத்மாவுடன்சேருகிருன்' என்று படுக்கு மிடங்கள் மூன்று சொல்லப்பட்டதால் மூன்றில் யாதானுமொன்றில் உறங்குவான் என்றுன் பூர்வபக்ஷி. மாடியில் கட்டிலில் படுக்கையில் படுத்துக்கொள்ளுகிருன் என்ற விடத்திற்

போல மூன்று ஆதாரங்களையும் ஒன்றின் மேலொன்ருகக் கொள்ளலாமாகையாலே, ஒன்றுள்ளபோது மற்ரென்றில் லையென்று தள்ளாமல் மூன்றையும் எல்லாவுறக்கத்திலும் இசைவதே நியாயமாகுமென்பது சித்தாந்தம். நேராக ப்ரஹ்மமே இவனுக்குப் படுக்கைபோல் ஆதாரமாயிருக்குமென்றதாயிற்று. மாம்ஸபிண்டம் கட்டில் போலவும் நரம்புகள் மாடி போலவுமாம். (7)

அத: ப்ரபோத: அஸ்மாத் 3-2-8.

ப்ரம்மம் எப்போதும் உறக்கத்தில் ஆதாரமாயிருப்பதால்தான் ப்ரம்மத்தினினின்றே விழித்து வருவது ஓதப்பட்டுள்ளது. (8)

(3) *கர்மாநுஸ்ம்ருதி சப்தவித்த்யதிகரணம்*

ஸ ஏவ து கர்மாநுஸ்ம்ருதீ-சப்த-விதிப்ய: 3-2-9.

உறங்கினவனே விழித்தெழுந்திருக்கிருனு, வேருருவனு என்று விசாரிக்கப்படும். உறங்கும்போது எல்லாம் விட்டு ப்ரஹ்மத்தினிடம் சேர்ந்தானுகில் மோக்ஷமடைந்தவனுகிற படியால் பின் உடலில் அவனுக்கென்ன ஸம்பந்தமிருக்கிறது. ஆகையால் வேருருவன் என்றது பூர்வபக்ஷம். உறங்கப்போனவனுக்குப் ப்ரம்மஞானமில்லை யாகையாலே முன்வினைகளை யனுபவிக்க வேண்டுமாகையாலும், அவனே நான் என்று எழுந்தவனுக்கு ஐக்யப்ரத்யக்ஷம் வருகிற படியாலும், 'புலியோ, சிங்கமோ, மற்றும் எதெது உறங்குவதற்கு முன் இருந்ததோ, அததுவாகவே மீண்டும் ஆகிறது' என்று ஓதுவதாலும், உறக்கத்திலேயே வீடு பெறுவதானுல் அதைப் பெற விதிகள் ஏற்பட்டது வீணுமாகையாலும் உறங்கினவனே விழிப்பவன் என்றது சித்தாந்தம். (9)

(4) *முக்த்தாதிகரணம்*

முக்த்தே அர்த்தஸம்பத்தி: பரிசேஷாத் 3-2-10.

மூர்ச்சை என்பதும் மரணத்தைக்காட்டிலும் வேருனதொரு தசையன்று. ப்ராணன் இந்திரியங்கள் எல்லாம் அப்போது ஓய்ந்துவிட்டதால் மரணமேயாம் என்ருன் பூர்வபக்ஷி. மரணத்தில் உடலுக்கேற்படும் விகாரங்கள் மூர்ச்சையில் இல்லாமையால் ப்ராணனும் ஸூக்ஷ்மமாயிருப்பதால் மரணமன்று. ஆகையால் அரைமரணமென்னலாம். விழிப்பு, சொப்பனம், உறக்கம் இவைகளில் ப்ராண வியாபாரம் நன்கு இருக்கின்றபடியால் அவை யாகா மூர்ச்சையென்பது மரணத்திற்போல் ப்ராணன் போய்விடவில்லை

யாகையால் மரணமுமாகாது. ஆகையால் மூர்ச்சித்தவனிடத்தில் மரணத்திற்காம் தசையில் பாதி யிருக்கிறதென்ன வேண்டும். (10)

(5) உபயலிங்காதிகரணம்

ந ஸ்த்தாநத: அபி பரஸ்ய உபயலிங்கம் ஸர்வத்ர ஹி 3-2-11.

ஜீவன் உடலிலிருக்கிறவண்ணம் பரமாத்மாவும் இருக்கிருனென்று அந்தர்யாமிப்ராம்மணத்தில் நன்கு விளக்கப் பட்டதால் ஜீவனுக்கு ஏற்படும் குறைகளெல்லாம் அவனுக்குண்டாம். அவன் எல்லாரையும் ஆஜ்ஞாபிக்கும் ஸ்வதந்தரனுயிற்றே யென்னில்—ஸ்வதந்தரனுயொருவன் இரத்தமலக் குழியில் மூழ்கினுலும் பரதந்த்ரனுய் மூழ்கின வனைப் போலே அவஸ்தைப்படுகிறவன் தானே என்றது பூர்வபக்ஷம். ஆபாஸமான இடங்களிலே இருந்தாலும் பரமாத்மாவுக்கு அக் குறையில்லை. 'வினை மூப்பு முதலியன இல்லாதவன்–குற்றமும் அதன் பலனு மற்றவன், அழியாத இஷ்டங்களை யுடையவன், தடையற்ற ஸங்கல்ப்பசக்தியுடையவன்','எல்லாம் செவ்வனே அறிந்தவன்','யாவனெருவன் அனுதியாய்ப் பிறக்காதவனுகவும் உலகுக்கெல்லாம் உயர்ந்த ஈச்வரனுகவு மென்னையறிகிருனே', 'கீழ் மேலானவற்றிற் கெல்லாம் நாதனுன எந்த பரமாத்மாவினிடம் அஜ்ஞானம் முதவிய க்லேசமும் மற்றவையுமில்லையோ, அவன் உயர்ந்த வற்றிற்கெல்லாம் உயர்ந்தவன்' என்றெல்லாம் ச்ருதிகளும் ஸம்ருதிகளும், அவன் ஒரு தோஷமுமில்லாதவன், எல்லாக் கல்யாண குணங்களும் நிறைந்தவன் என்கிறனவே. எல்லா வற்றிலு முட்புகுந்து எல்லாவற்றையும் நியமித்து லீலாரஸம் அனுபவிக்கிருனென்ற பெருமையே அவனுக்குள்ளது. (11)

பேதாத் இதி சேத் ந ப்ரத்யேகம் அதத்வசநாத். 3-2-12.

ஜீவனுக்கும் பாபமின்மை முதலிய குணங்கள் இயற்கையிலுள்ளவே; ஆயினும் அவனுக்கு அவஸ்தையின் பேதம் மாறுபாடு ஏற்பட்டதால் பரமாத்மாவுக்கும் ஏற்படலா மென்னவேண்டா. மாறுபாடு ஏற்படவேண்டுமிடத்திலும் ஒவ்வொரு வஸ்துவில் அவன் இருப்பதைச் சொல்லும் போதே அம்ருதனெனறும் அபஹதபாப்மா என்றும் அவன் நிர்தோஷனுயிருப்பதைச் சொல்லுகின்றதே. (12)

அபி ச ஏவம் ஏகே. 3-2-13.

வேதமோதுகின்றவரில் மற்றும் சிலரும், 'ஒரு மரத்தில் இரண்டு பக்ஷிகள் இருப்பன, ஒன்று உண்பது, உண்ணுமல் உயர்ந்து விளங்குவது மற்ருென்று' என்று அவன் பெருமையைப் பகர்கின்றனர். (13)

ஜீவன் யாதொருபடி உடலுக்கு ஆத்மாவாகிறான், பரமாத்மாவும் அப்படியே ஆத்மாவாகிறான். ஆக நல்வினை தீவினைகளைச் செய்தவர் இருவருமே. இப்படி ஜீவனைப் போல் அவனும் கர்மவச்யனானபிறகு கர்மபலனை யுண்ணுமவனாயிருக்கலாகுமோ எனில்—

**அநுபவத் ஏவ ஹி தத்ப்ரதாநத்வாத். 3–2–14.**

மனிதவுடல் முதலானவற்றிற்கு ஆத்மாவானாலும் அவ்வுடல்களை யுடைத்தாகாததுபோலவே யாம் அந்த பரப்ரம்மம்; ஏனெனில் ப்ரதானமாய் நிர்வஹிக்கிறவனாயிருப்பதாலே. ஜீவனுக்குக் கர்மபலனின் அனுபவத்தை நடத்தி வைக்கவே அவன் இவ்வுடல்களில் புகுந்திருப்பது (விதி நிஷேதங்கள் தன்னைக் குறித்தே தான் செய்வதாகுமோ? ஜீவனுக்கு அவன் செய்த விதிநிஷேதங்களில் ஜீவனே பலனுக்காகக் கர்த்தாவாவான். பரமாத்மா அவன் ப்ரயத்னத்தைப் பூர்த்திசெய்கின்றவனே.) (14)

ப்ரகாசமாத்ரமாக ப்ரம்மத்தை வேதம் சொல்லாநிற்க அவனுக்குக் கல்யாணகுணங்கள் இருப்பனவாகச் சொல்வது சேராதென்னவேண்டா—

**ப்ரகாசவத் ச அவையர்த்யாத் 3–2–15.**

ப்ரகாசஸ்வரூபனென்று ஒரு வேதவாக்யம் வீணாகாமைக்காக இசைவது போல், ஸர்வஜ்ஞன் ஸர்வசக்தியுடையவன் என்றாற்போன்ற வாக்கியங்கள் வீணாகாமைக்காகக் கல்யாணகுணங்களையும் இசைக. (15)

**ஆஹ ச தந்மாத்ரம் 3–12–16.**

'ஸத்யம் ஜ்ஞானம்' என்ற வேதம் ஞானஸ்வரூபமென்பதைக் கூறுமே யல்லது வேறொன்றுமில்லையென்று கூறாது. (16)

**தர்சயதி ச அதோ அபி ஸ்மர்யதே. 3–2–17.**

நிர்தோஷன் அவன் என்றும், ஈச்வரர்களுக்கெல்லாம் மேலான ஈச்வரன் தேவதைகளுக்கெல்லாம் மேலான தைவதம் என்றும் வேதவாக்கியங்கள் ஓதும். ஸ்ம்ருதிகளும், எல்லாவற்றிற்கும் காரணமாய் எல்லாவற்றிற்கும் மேம்பட்ட ஈச்வரனாக அவனை அறிவிக்கும். (17)

**அத ஏவ ச உபமா ஸூர்யகாதிவத் 3–2–18.**

ஆகாய மொன்றே குடம் மடம் முதலிய இடங்கள்தோறும் வேறாவது போலும், சூரியனொருவனே நீர்த்தேக்கங்களிலே பலவாகின்றது போலுமாம் பரமாத்மா என்ற உவ

மைகளும் அவனை தோஷமற்றவனாக இசைந்தபோது பொருந்தும். (18)

அம்புவத் அக்ரஹணாத் து ந ததாத்வம். 3-2-19.

நீரிலே சூரியன் இல்லாமலே காணப்படுவதுபோல் ப்ரம்மத்திற்கும் பூமி முதலிய ப்ரபஞ்சவஸ்துக்களிலே இல்லாமலே தோற்றம் மட்டு மாகில், நீரிலுள்ள நீளம் அசைவு முதலியன சூரியனிடம் சேராமலிருக்குமா போலே ப்ரம்மத்தினிடம் ப்ரபஞ்சதோஷங்கள் சேரா என்னலாம். அவ்வாறில்லையே. ப்ரம்மமே நேரில் ப்ரபஞ்சத்திற் சேர்ந் திருக்கிறதே. சூர்யனைப்போல் தோற்றம் மட்டு மென்ப தில்லையே யென்று மீண்டும் கேள்வி. (19)

வ்ருத்திஹ்ராஸபாக்த்வம் அந்தர்ப்பாவாத் உபயஸாமஞ்ஜ-
ஸ்யாத் ஏவம் தர்சநாத் ச 3-2-20.

ஆகாயத்தையும் சூரியனையும் த்ருஷ்டாந்தமாக்கிச் சொல்லும் ச்லோகத்திலே ப்ரம்மத்தினின்று விலக்கப்படுவ தென்னவெனில், அந்தந்த இடத்தில் இருப்பதால் நேரக் கூடும் ஏற்றத்தாழ்வேயாம். வஸ்துக்களோடு சேர்ந்தேயி ருக்கும் ஆகாயத்தையும் த்ருஷ்டாந்தமாகச் சொல்லிற்று; நீரிற்சேராத சூரியனையும். இரண்டு த்ருஷ்டாந்தங்களும் இணங்க இங்கே கருத்துரைக்கவேண்டும். சேர்ந்திருப்பது சேராதது இரண்டையும் த்ருஷ்டாந்தங்களாக்கினதால் இரண்டுக்கும் இதற்குமுள்ள ஒப்புமை என்ன வென்று பார்க்கும்போது நீண்டும் குறுகியுமில்லாமையே யென்று கொள்ளவேண்டும். த்ருஷ்டாந்தமாக ஒன்றைக் காட்டும் போது எந்த விஷயத்திற்கு அதை த்ருஷ்டாந்தமாகக் கொண்டோமா, அந்த விஷயத்தில் ஒப்புமையை மட்டும் பார்க்கவேண்டுமே யல்லது மற்ற விஷயங்களை யெடுக்கல ாகாது. உலகில் காண்பதைக் கொண்டும் இப்படிதான் இசையவேண்டும். சிங்கம் இந்த மாணவன் என்றால், நான்கு கால்கள், பிடரிமயிர், யானையைக் கொல்வதெல்லா மில்லையே யென்பரோ ? (20)

மீண்டும் கேள்வி—உலகம் இருந்தால்தானே அவ் விஷயத்திலே அறிவு, சக்தி எல்லாம் கொண்டு ஈச்வரன் ஸர்வஜ்ஞன் ஸர்வசக்தனென்றெல்லாம் சொல்வதாம். மூர்த்தம், அமூர்த்தம் என இருவகை உருக்களை முதலில் சொல்லி, இதுவு மில்லை இதுவு மில்லை யென்று எல்லாவற் றையும் தள்ளிவிட்டதே வேதம். ஆகையால் நிர்குணப்ரம் மம் ஒன்றே யுள்ளது. ஆக அதை, உபயலிங்கம் அதாவது தோஷமின்மை, குணக்கடலாகை என்ற இரு தர்மங்களு

டையதாகக் கூறலாகுமோ என்றவாறு, இதற்கு மறுமொழி—

**ப்ரக்ருததாவத்த்வம் ஹி ப்ரதிஷேததி தத: ப்ரவீதி ச பூய:** 3-2-21.

மூர்த்தம் அமூர்த்தமென்று கீழ்ச் சொன்ன இரு உருக்களை மட்டும் கொண்டு இவ்வளவே ப்ரம்மமென்று அளவிடுவதை விலக்குகிறது 'இல்லை' 'இல்லை' யென்கிற வாக்கியம். கீழ்ச்சொன்னவற்றிற்கு மேலும் மீண்டும் சொல்லுகின்றதே மேல்வாக்யம். அதாவது—உலகில் உருவுள்ளதாகக் காணப்படும் வஸ்துக்களை மூர்த்தம் என்றும், காணப்படாதவற்றை (வாயு ஆகாசம்) அமூர்த்தமென்றும் எடுத்து இவற்றை ப்ரம்மத்திற்கு உருவமாகச் சொல்லுகிறது. வஸ்துக்களே நமக்கெல்லாம் தெரியாமலிருக்க, ப்ரம்மமும் தெரியாமலிருக்க இவை ப்ரம்மத்தின் உருக்கள் என்று நமக்கு வேதம் ஓதாமல் தெரிய வழியில்லை. இப்படித் தானே உபதேசித்துத் தானே வேதம் இல்லை யென்கிறதென்னலாகுமோ? ஆகையால் நேதி நேதி என்ற வாக்யத்தில் இல்லை, இல்லை யென்பதற்குப் பொருள் என்ன வென்னில்—இப்போது சொன்ன உருக்களைக் கொண்டு எல்லாம் அறிந்துவிட்டதாக நினைக்கவேண்டா; இவற்றால் அளவிடப்படுகிறதன்று ப்ரம்ம மென்கிறது. ஆகையாலேயே மேலே, இப்படிச் சொல்லப்பட்ட வஸ்துவுக்கும் மேலே உயர்ந்ததொன்று இல்லை யென்கிறது, ஆக இதன் மேன்மை யளவற்றதென்றதாம். இதை யறிவிக்க அதை மேலே, ஸத்யத்திற்கும் ஸத்யமென்கிறது. அதை மேலே விரித்துமுரைத்தது, ப்ராணன்களென்னப்படும் ப்ராணிகளான சேதநங்கள் கீழ்ச் சொன்ன மூர்த்தாமூர்த்தங்களான அசேதனங்கள் போலே பல மாறுதல்களை யடைகின்றனவல்ல; அணுக்களாய் ஒரே தன்மையிலிருப்பவை. ஆகையாலே சேதனங்கள் ஸத்யங்களாம். அவற்றிக்கும் மேலான ஸத்யத்வம் பிரம்மத்திற்கு. ஏனென்னில், அவற்றின் குணமான தர்மபூத ஞானத்தில் சுருக்கம் விரிவென்ற ஈனமான மாறுதல்கள் உள. அந்த ஸ்வபாவவிவகாரங்களும் ஸ்வரூப விகாரங்கள்போலவே ப்ரம்மத்திற்கு இல்லை யென்றபடி. இப்படி அசேதனங்களுக்கும் சேதனங்களுக்கும் மேலாய் சேதநாசேதநஸர்வப்ரபஞ்சகாரணமிதென்றெல்லாம் சொல்லப்பட்டிருக்க அதை நிர்குண மென்னலாகாது. (21)

வேதமென்பதென்? ப்ரத்யக்ஷமே நிர்குண ப்ரம்மத்தையே காட்டுகிறது. மற்ற வஸ்துக்களெல்லாம் ப்ராந்தி

யினாலே தோற்றுகின்றன. அதனால்தான் அவற்றை வேதம் இல்லை யென்கிறது—என்னவேண்டா—

**தத் அவ்யக்தம் ஆஹ ஹி 3-2-22.**

ப்ரம்மம் காணக்கூடாததென்று வேதமோதுகின்றதே. ஆகையால் வேறு வஸ்துக்களே காணப்படுகின்றனவாம். அவை ஸத்யங்களே. ப்ரம்மத்திற்கு ப்ரத்யக்ஷம் கூடாது. (22)

**அபி ஸம்ராதநே ப்ரத்யக்ஷாநுமாநாப்யாம்: 3-2-23.**

மேலும் நன்றாக ஆராதிப்பதாகிற உபாஸனையினால் தான் அதைக் காணக் கூடு மென்று வேதமும் ஸ்ம்ருதியும் கூறுகின்றன. ஆகையால் அவனைக் காண்பதற்கு பக்திமய மான ஆராதனம் வேண்டுவதாய் வெறும் படிப்பு அனுஷ்டானங்களே போதாமலிருக்க எல்லோருக்கும் பரம்மம் ப்ரத்யக்ஷத்திலுள்ளதென்னலாமோ? (23)

**ப்ரகாசாதிவத் ச அவைசேஷ்யம் ப்ரகாச ச: கர்மணி அப்யாஸாத் 3-2-24.**

ஜ்ஞானமாய் ஆனந்தமாயிருக்கிறதென்பதோடு, ப்ரபஞ்சத்திற்கெல்லாம் ஈச்வரனாயிருக்கிறதென்பதோடு வாசியில்லை. வைராக்யமும் அப்யாஸமு மிருந்து பரமாத்மாவைப் பார்க்கின்றவர்களுக்கு எல்லாமே நன்கு விளங்குகின்றன. வாமதேவமஹர்ஷி, நானே மனுவும், ஸூர்யனுமானேன் என்கிறார். நானே கக்ஷீவானென்கிற ரிஷி யென்றும் அனுபவம் வருகிறதாம். தன்னையும், ப்ரபஞ்சத்திலுள்ள மற்றவரையும் சேர்த்து ப்ரம்மத்தைக் காண்பது உபாஸிப்பவனுக்கு உண்டு— (24)

**அத: அநந்தேந ததா ஹி லிங்கம் 3-2-25.**

ஆகையால் அளவற்ற கல்யாணகுணங்களோடு சேர்ந்திருக்கும் ப்ரம்மம். இப்படி நிர்தோஷத்வம் கல்யாணகுணாகரத்வம் இரண்டும் ப்ரம்மத்திற்கு லிங்கமாகிறது, ப்ரம்மத்திற்கே இம்மேன்மை யுள்ளதென்றபடி. (25)

*(6) உபயவ்யபதேசாதிகரணம்*

**உபயவ்யபதேசாத் து அஹிகுண்டலவத். 3-2-26.**

மூர்த்தாமூர்த்தப்ரபஞ்சம் ப்ரம்மத்தினுடைய ரூபங்கள் என்று ப்ரஸ்தாவம் கீழே வந்தது. ரூபமென்றதால் என்ன கருதப்பெற்றதென இங்கே விசாரமாம். அசேதநப்ரபஞ்சம் ப்ரம்மத்தினுடைய ரூபமென்றால் ப்ரம்மமே ப்ரபஞ்சமாக, மண் குடமாகுமா போலே, மாறுகின்றதென்றதா, அல்லது

ப்ரபஞ்சத்ரவ்யம் வேருனாலும் ப்ரம்மஜாதி யென்ற வகுப்பிற் சேர்ந்ததென்பதா, அல்லது ப்ரம்மத்திற்கு 'ஜீவாத்மா அம்சம் அதாவது விசேஷணமாய் சரீரம் என்றவண்ணம் அசேதனமும் அம்சமென்பதா என ஆராய்வதாம். பாம்பு தன்னை வட்டமாக வளைத்துக்கொள்ளுமா போலே ப்ரம்மம் தன்னை ப்ரபஞ்சமாக்கிக்கொள்கிறதென்றது முதற்பக்ஷம். பல வட்டமாகத்தன்னை அது சுற்றிக்கொள்ளும்போது ஒவ்வொரு வட்டத்தையும் வெவ்வேறென்கிரோம், மொத்தமாக எடுத்து ஒன்று என்பது முண்டு. அதுபோல் ப்ரம்மம் என்று பொதுவிலே ஒன்று என்பது, மண் நீர் முதலிய பரிணமங்களைக் கொண்டு பல என்பது, ஆக ஒன்று, பல என்ற இரண்டு வியவஹாரங்களும் பொருந்து மென்று கருத்தாம். (26)

இரண்டாம் பக்ஷம் —

**ப்ரகாசாச்ரயவத் வா தேஜஸ்த்வாத். 3–2–27.**

மணி, தினமணி முதலானவற்றில் வெளியிற் பரவுகின்ற ஒளி என்ற வஸ்து வேறு இருக்கிறது. ஒளியும் அதற்கு ஆதாரமான மணிமுதலானவையும் வேருயினும் தேஜஸ் என்ற ஜாதியிலே எல்லாம் சேர்ந்திருக்குமா போலே ப்ரப்ஞ்சமும் பரமாத்மாவும் ப்ரம்ம மென்கிற ஒரு ஜாதியைச் சேர்ந்ததென்னலாம். ப்ரம்மமே ப்ரபஞ்சம் என்கிற முதற்பக்ஷத்தில் ப்ரபஞ்சத்திலுள்ள தோஷங்களெல்லாம் ப்ரம்மத்திற்கே இசையப்படுவதால் நிர்த்தோஷம் நிர்விகாரமென்ற வசனங்களெல்லாம் விடப்பட்டனவாம். ஆகையால் அது பொருந்தாது. (27)

**பூர்வவத் வா 3–2–28.**

முன் அத்யாயத்திலே (2.3.) ஜீவனை ப்ரம்மத்திற்கு ரூபம், அம்சம் என்று சொன்னவண்ணமே ப்ரபஞ்சத்தையும் அதன் அம்சமாய் உடலாய்ச் சொல்லவேண்டும். அவ்வாறின்றி, பரமாத்மாவும் ப்ரபஞ்சமும் ஒரு ஜாதியைச் சேர்ந்தாலும் வெவ்வேருனபடியாலே, 'எல்லா ப்ரபஞ்சமும் பரமாத்மாவே', 'நாராயணனே எல்லாம்', என்றவாருன வசனங்கள் பொருளற்றன வாம். அவ் வசனங்கள் போல், ப்ரம்மமே எல்லாம் என்கிற வசனமும் சரீராத்மபாவஸம்பந்தத்தைக் கொண்டு வந்ததென்பதே நியாயமாகையால் எங்கும் ப்ரம்மஜாதி யிருப்பதாகக் கொள்ளலாகாது. உண்மையில் உடல் வேறு ஆத்மா வேருனபடியாலே அந்த வேற்றுமையை யறிவிக்கப் பிரித்தும் கூறும். உடலைச் சொல்லும் சொல் உயிரையும் சேர்த்துச் சொல்வதென்கிற உலக வழக்கை யொட்டி, 'எல்லாம் ப்ரம்மமே' என்று ஒன்ருகவும்

கூறும். இப்போது ப்ரம்மம் நிர்தோஷமாய் நிர்விகாரமுமாய் தேறும். (28)

ப்ரதிஷேதாத் ச 3-2-29.

'பெருமானிவன் மூப்பு மரண மொன்று மில்லாதவன், உடலின் மூப்புடமையைக்கொண்டு அவனுக்கும் மூப்பைக் கொள்ளலாகாது' என்றெல்லாம் அசேதநத்திலுள்ள தன்மைகளை ப்ரம்மத்திற்கில்லை யென்றதாலும் இரண்டும் ஒன்ருகா. (29)

(7) பராதிகரணம்

பரம் அத: ஸேது-உந்மாந-ஸம்ப்ந்த-பேத வ்யபதேசேப்ய: 3-2-30.

சேதநாசேதநங்களுக்கு ஆத்மாவாய் ப்ரபஞ்சகாரணமான ப்ரம்மமொன்று ஸ்தாபிக்கப்பட்டது. இதற்கும் மேம்பட்டதொன்று உண்டா இல்லையா என்ற விசாரம் இங்குச் செய்யப்படுகிறது. மேல் ஒரு தத்துவம் உளதென்கிருன் பூர்வபக்ஷி. ஏனெனில்—இந்த பரமாத்மாவை ஸேது என்கிறது வேதம். இந்த ஸேதுவைக் கடந்து குருடன் கண்ணுள்ளவனுகிருன் என்றுமுளது. ஸேதுவாவது ஒரு பக்கத்தினின்று மற்ருேர் இடத்தை அடைவதற்கு இடையிலுள்ள அணையாம். அணை வேறு; அடையப்படும் வஸ்து வேறு. மேலும் ப்ரம்மம், நான்கு பாதமுடையது, பதினுறு அம்சங்கள் உள்ளதென்றெல்லாம் அளவிடப்பட்டதாகும். ஆகையால் அளவற்ற வஸ்து வேறு வேண்டும். அன்றி, அம்ருதத்திற்கு இது ஸேதுவாகும் என்று அடையப்பட வேண்டும் அம்ருதத்தை யடைவிக்கிறதாகவே இது ஓதப்பட்டது. இனி நான்காவது காரணம்,–'இந்த ப்ரம்மமென்ற புருஷனுல் இவ் உலகெல்லாம் சூழப்பட்டது. இதற்கும் மேலான வஸ்து யாதொன்ருே, அது உருவற்றது, ரோகமற்றது. அதை யறிந்தவர் மோக்ஷமடைவர்' என்று இதற்கு மேம்பட்டதாக ஒன்றைச் சொல்லுகின்றது. (30)

நான்கு அம்சங்களும் முறையே ஸூத்ரங்களால் தள்ளப்படுகின்றன—

ஸாமாந்யாத் து 3-2-31.

ஸேது என்ற சொல்லைக் கொண்டு வேறு வஸ்துவை இசைதலாகாது. ஸேதுவைப் போன்றதென அதன் ஸாம்யத்தை—ஒப்புமையை மட்டும் சொல்வதால். அணையானது இருபக்கங்களிலிருக்கும் நீர் முதலியவற்றை ஒன்ருேடொன்று சேராதபடி யிருக்கச் செய்வது போல் ப்ரம்மமா

னது ப்ரபஞ்ச வஸ்துக்களில் எதெதற்கு என்னென்ன ஸ்வ பாவம் பிறவியிலுள்ளதோ அந்தந்த தன்மை மாருதபடி, கலக்காதபடி செய்யவியன்றதென்றிவ்வளவே இதன் கருத் தாம். அணையானது அடையப்படும் வஸ்துவை விட வேருயிருப்பது போல் இதுவும் வேருகவேண்டு மென்ப தில்லை. (32)

புத்த்யர்த்த: பாதவத் **3-2-32.**

'ப்ரம்மம் நான்கு பாதங்கள் உடையது', 'இந்த ப்ராணி கள் எல்லாம் இதற்கு ஒரு பாதம்' என்று அளவிட்டதும் ஒரு வகையில் அதை மனதிற்கொண்டு த்யானம் செய்ய வாம். 'மனதிற்கு வாக் ஒரு பாதம் கண் ஒரு பாதம்' என்கி றதே. மனதுக்கு உண்மையில் பாதங்கள் உளவோ? இல் லையே. அதுபோலாகுக. (32)

அளவற்ற வஸ்துவை த்யானத்திற்காக மட்டும் அள விடலாமோ? கண்ணை மனத்திற்குப் பாதமென்றதற்குக் காரணம்தான் வேண்டுமே என்னில்.

ஸ்தாநவிசேஷாத் ப்ரகாசாதிவத் **3-2-33.**

கண் வாக்கு முதலானவை மனதின் வியாபாரமின்றி ஒன்றும் செய்யா. ஆக அந்தந்த இந்திரியத்தோடு ஒரு வகை ஸம்பந்தமுள்ளது. அந்தந்த ஸ்தான ஸம்பந்தத் தைக்கொண்டு மனத்தை வரையிட்டுச் சொல்வதில் குற்ற மில்லை. வெளிச்சம் எங்குமிருந்தாலும் சன்னலைக் கொண்டு சன்னல்வெளிச்சமெனப் பிரிக்கிறேம். ஆகாயம் எங்குமி ருந்தாலும் குடத்தை யிட்டு குடவான மென்று பிரித்துக் கூறுகிறேம். அது போலாம். (33)

உபபத்தே: ச **3-2-34.**

அம்ருதத்திற்கு ஸேது என்ற வாக்கியத்திற்கு அம்ரு தத்தை யடைவிக்கிறதென்ற பொருளாம். அதனுல் அம்ரு தம் வேருக வேண்டா. தன்னைத் தானே அடைவிக்கிறது; அடையப்பட்ட தான் அம்ருதமாயிருக்கிறதென்றே கருதின தாம். 'பரமாத்மா ஏதேனும் சாதாரண உபாயத்தால் அடை யப்படுகிறவனல்லன். அவனை யடைய விதிக்கப்பட்ட உபாயங்கள் கூட அவன் இந்த ஜீவாத்மா தன்னை யடைய வேண்டுமென்று ஸங்கல்ப்பிக்காதபோது உபாயங்களாகா. அவ்வாறு அவன் ஸங்கல்பிக்க அவனுக்கு நம்மிடம் ப்ரீதி யுண்டாகும்படி அவனிடம் நாம் சிறந்த ப்ரீதியை வைக்க வேண்டும். அவன்தானே தன்னை நமக்கு காணவைக்கி ருன்' என்கிற வாக்கியம் தனக்குத்தானே அவன் ஸேது வாகின்றமையை யறிவிக்கின்றதே. (34)

ததா அந்யப்ரதிஷேதாத் 3-2-35.

எங்கும் நிறைந்த புருஷனுக்கும் மேலான வஸ்து ஒன்றிருப்பதாக நேரிலே சொல்லியுளதென்ற நான்காவது காரணமும் சரியன்று. 'இவனை ஆள்கிறவனொருவன் இல்லை', 'சேதநாசேதநங்களைப் போலல்லாத இந்தப் ப்ரம்மத்திற்கு மேம்பட்டதொன்று :இல்லை'. 'இவனை விட வேறான உயர்ந்த வஸ்து இல்லை. இவனை விட ஸூக்ஷ்மமானது மில்லை. இவனுக்கு மேல் வியாபியான வஸ்துவு மில்லை' என்றவாறு ப்ரம்மத்திற்கு மேற்பட்டதில்லாமை விளக்கப் பட்டுள்ளதே. பூர்வபக்ஷி யெடுத்த வாக்யமானது, 'ததோ யத் உத்தரதரம் தத் அரூபம் அநாமயம்' என்றதே. இங்கே தத: — அதைக்காட்டிலும் யத்—யாதொன்று—உத்தரதரம் —மேம்பட்டதோ என்று பொருள் கொள்ளலாகாது. பின் எவ்வாறெனில்—தத:—ஆகையாலே அதாவது ஜகத்காரணத்வாதிகளான எல்லாப் பெருமைகளுமுடையதாய் இந்த ப்ரம்மமென்ற புருஷனே எங்கும் நிறைந்துள்ளனாகையாலே, உத்தரதரம்—எல்லாவற்றிற்கும் மேம்பட்டதாகச் சொல்லப்பட்ட யத்—யாதொன்று கீழ் உரைக்கப்பெற்றது —தத்—அது அரூபம் அநாமயம்—ப்ராக்ருதரூபம் முதலிய ஸகல தோஷங்களுமற்றது; அதனையே யறிந்து மோக்ஷம் பெறுவர் என்றதாம். இந்தத் தத்துவத்தை 'அத்ப்ய: ஸம்பூத:' என்கிற உத்ரநாராயணம், ஹிரண்யகர்ப்பஸூக்தமான எட்டு ருக்குக்களெல்லாம் ஓதின ப்ரம்மமிதென்றும் தைத்திரீயம் கூறும். கடலிற் பள்ளிகொண்ட பிரானைத் தொடங்கி இவனுக்கு மேற்பட ஒன்றுமில்லையென்றது தைத்திரீயம். (இப்படியிருக்க பரமசிவன் இதற்கு மேலென்றும், வ்யோமதாதீ மொன்றென்றும் பேச்சுக்கு வழி ஏது)

(35)

அநேந ஸர்வகதத்வம் ஆயாமசப்தாதிப்ய: 3-2-36.

'அந்த புருஷனால் எல்லாம் சூழப்பட்டது', 'உள்ளும் புறமும் வியாபித்திருப்பவன் நாராயணன்', எங்கும் எப்பொழுதும் வியாபித்த வெகு ஸூக்ஷ்மமான ஜகத்காரணவஸ்துவை அறிஞர் காண்கின்றனர்'. என்றவாறு ஆயாமத்தை-பரவுதலைச் சொல்லும் சொல் முதலியன கொண்டு இந்த ப்ரம்மமே எங்கும் பரந்துளதென்க. ஆக உலகுக்கு நிமித்த காரணமும் உபாதானகாரணமுமாய் உபாஸிக்கப்படுகின்றதும் அடையப்படுகின்றதுமானது இந்த ப்ரம்மமே யாகையால் இதற்கு மேலானது ஒன்றுமேயில்லை. (36)

(8) பலாதிகரணம்

உபாயங்களாக வேதத்தில் ஓதப்பட்டவைகளெல்லாம் இவனுடைய அனுக்ரஹமில்லை யாகில் உபாயங்களாக மாட்டா என்று உபபத்தேச்ச என்ற ஸூத்ரத்திலே குறிப்பிட்டார். 'எங்கும் ஒருவருடைய அனுக்ரஹம் வேண்டுவதில்லை. விதிக்கப்பட்ட செயல்களான யாகம் ஹோமம் முதலியனவே அனுஷ்டிக்கப்பட்டுப் பலனை யளிக்கும்' என்கிற ஜைமினி மதம் சரியன்று என்று அதன்மேல் விசாரிக்கப்படுகிறது.

ப்பலம் அத: உபபத்தே: **3-2-37.**

உபபத்தி தன்மதத்திற்கே யுள்ளதென்று ஜைமினி நினைக்கிறார். அதை நிராகரிக்க பாதராயணர் தமது சித்தாந்தத்தை முதலில் அறிவிக்கிறார்—

பலன் இந்த ப்ரம்மத்தினிடமிருந்தே பெறப்படுகிறது. செய்த செயலே பலனைக் கொடுக்குமென்னவொண்ணாதே. செயல் என்பது சில க்ஷணங்களில் அழிவது. பலன் நாம் பெறுவது வெகு காலம் கழித்து. அது தானில்லாத காலத்தில் வரும் பலனைத் தானே பெறுவிக்கிறதாகுமோ? ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாய் பரமதயாளுவாய் சிறந்த கொடையாளியாய் அனாதியாய் அழிவற்றவனுமான ஸர்வேச்வரன் கர்மாவைக் கண்டு உவந்து பலனளிக்கிறானென்றால் ஒரு குறையும் கூறவியலாது; மிகப் பொருத்தம் உண்டு. (37)

ச்ருதத்வாத் ச **3-2-38.**

'பிறக்காத இப் பெருமான் அன்ன மளிப்பவன், பண மளிப்பவன்', 'இவனே ஆனந்தப்படுத்துகிறான்' என்றவாறு போக மோக்ஷங்களை அவன் அளிப்பது ஓதப்பட்டுமுளதே. (38)

தர்மம் ஜைமிநி: அத: ஏவ **3-2-39.**

இப்படியிருக்க, பூர்வமீமாம்ஸை எழுதிய ஜைமினியானவர் தர்மங்கள் தாமே பலன்களை யளிப்பன. யுக்தியும் வேதமும் இப்பக்ஷத்திற்கு உள. உலகில் பயிரிடுவதால் பலன் பெறுகிறான். அங்குச் சில மாதங்கள் சென்ற பிறகு பலன் வருகிறது. எண்ணெய் தேய்த்துக்கொள்வதால் ஸுக மடைகிறான். அது உடனே வரும் பலன், இப்படி நேராகவும் சிலவற்றின் வாயிலாகப் பரம்பரையாகவும் செயல்கள் பயனளிக்கின்றன வாகையால் வேதத்திலும் அவ்வாறும். வேதவாக்யங்களும், 'சுவர்க்கம் பெற விரும்பினவன் யாகம் செய்யக்கடவன்,' 'ப்ரம்மத்தை யுபாஸிப்பவன்

அதை யடைவன்' என்றவாறு செயல்கள் பலன்களை யளிப்பதையே ஓதுகின்றன. செயல்கள் சில க்ஷணங்களிலே அழிகின்றனவாலும் அச் செயல்கள் அபூர்வமென்ற தொன்றை இடையில் உண்டுபண்ணிவிட்டு அழிகின்றன வென்றும், அந்தந்த அபூர்வம் பலன் பெறவேண்டும் காலம் வரை யிருந்து பலனைப் பெறுவிக்கிறதென்றும் அதன்வாயிலாகச் செயல்களே பலனை யளிப்பன என்றும் கொள்ள வேண்டு மென்றும் அவர் கருதுகிறார். (39)

பூர்வம் து பாதராயண: ஹேதுவ்யபதேசாத் 3-2-40.

பாதராயணரென்ற ஸித்தாந்தி (ஸூத்ரகாரர்) சொல்வது இங்கு முன் சொன்னதேயாம். அதாவது ஸர்வகாரணமான ப்ரம்மமே பலனை யளிப்பதென்றதே. அவனையே காரணமாக வேதம் சொல்லியிருப்பதால். அதாவது,'செயல் அழிந்துவிடுகின்றனவே; பின்னால் வரும் பலனை எவை யிருந்து செய்யும்' என்ற வினாவிற்கு விடையளிக்க ஜைமினியானவர் தான்தோன்றியாகி அபூர்வமென்றொரு வஸ்து இடையில் உண்டாகிறதென்கிறார். இது எங்காவது சொல்லப்பட்டுள்ளதா, காணப்படுகிறதா—எதற்கு இத்தனை ஆயாஸம் இவருக்கு. பலன் செயலினின்று எப்படி வருமென்றதை வேதமே விளக்கி யுரைத்துளதே. 'வாயுதேவதையைக் குறித்து யாகத்தை ஐச்வர்யம் வேண்டுமவன் செய்வதாம். வாயுவினிடம் தானே தன் வஸ்துவைக் கொண்டு இவன் விரைகிறான். அந்த வாயுதேவதையும் மிக்க விரைவுடைய தாகையாலே இவனை ஐச்வர்யத்தை யடைவிக்கிறான்' என்றது வேதம். இப்படி எங்கும் தேவதையே பலனளிப்பது கூறப்பட்டிருக்க ஏன் அபூர்வமாய் அபூர்வமென்றதொன்றைக் கல்பிக்கவேண்டும்? தேவதைகள் பலனளிக்கிறார்களென்றால் எல்லா தேவதைகளுக்கும் அந்தர்யாமியான பரமாத்மா அவர்கள் மூலம் உவந்து எல்லாவற்றிற்கும் பலனளிக்கிறானென்றே வேதாந்த வாக்கியங்களை நன்கு ஆராய்ந்தபோது தெளியலாகும். விதிவாக்யத்திற் சொன்ன விஷயத்தின்மேல் நமக்கு சில அம்சங்கள் தெளிய வேண்டியிருந்தால் அவ் விதிவாக்யத்துடன் சேர்ந்துள்ள வாக்யங்களைக் கண்டு அவற்றைத் தெரிந்துகொள்வதுண்டென்று மீமாம்ஸகரே யிசைந்ததாம். ராத்ரிஸத்ர மென்கிற யாகத்திற்கு ப்ரதிஷ்டை பலன் என்பதை யவ்வாறே சொன்னார்களே. ஆக ஸர்வேச்வரனே ஸர்வபலப்ரதனாவான். (40)

3-ம் அத்தியாயம் இரண்டாம்பாதம் முற்றிற்று.

உபாயமாகின்ற பரமாத்மா நம் செயலைக் கொண்டே உபாயமாகிறுனகையாலே மோக்ஷத்திற்காக நாம் செய்ய வேண்டும் உபாயங்களான வித்யைகள் இங்கே விசாரிக்கப் படுகின்றன.

(1) ஸர்வவேதாந்தப்ரத்யயாதிகரணம்

**ஸர்வவேதாந்தப்ரத்யயம் சோதநாத்யவிசேஷாத் 3-3-1.**

வேதாந்தத்தில் விதிக்கப்பட்ட முறைப்படி அனுஷ்டிக் கப்பெற்ற உபாஸனை யென்கிற பக்தியோகத்தினுல் மோக்ஷமென்றும், அந்த உபாஸனைகள் பலவகைகளென் றும் மேலே யறிவிக்கப்படும். ஒன்றென நினைக்கப்பட்ட உபாஸனையிலும் பன்மையுள்ளது என்கிருன் இங்குப் பூர்வ பக்ஷி. உபாஸனைகள் வேறு என்பதற்கு ப்ரமாணம் யாதென்னில்-பூர்வமீமாம்ஸையில் வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மங்கள் எல்லாம் ஒன்ரு, வெவ்வேரு என்று விசாரித்து, சப்தாந்தரம், அப்யாஸம், ஸங்க்யை, ஸம்ஜ்ஞை, குணம், ப்ரகரணுந்தரம் என்ற ஆறிலொரு ப்ரம்மாணமிருந்தால் வேரும் என்று முடிவு செய்யப்பட்டுளது. அதாவது—யாகம், தானம், ஹோமம் என்ற சொற்களைக் கேட்டபோது அதது வேறென்று நன்ருகத் தெரியும். இது சப்தாந்தரம். விதி இரண்டிருந்தால் ஒரு தரம் விதித்ததையே மீண்டும் விதிக்க முடியாதாகையாலே க்ரியை வெவ்வேரும். இங்கு அப்யா ஸம். இரண்டு, மூன்று என்றவாறு எண்ணிக்கையும் அநேக மில்லாதபோது சேரா வாகையாலே ஸங்க்யையும் ப்ரமா ணம். க்ரியைக்குப் பெயர் வெவ்வேருயிருந்தால் க்ரியை வேறு என்பது முண்டு, ஒரு த்ரவ்யத்தோடு ஒரு யாகத்தை விதித்துவிட்டு மற்ருெரு த்ரவ்யத்தோடு மீண்டும் யாகத் தைச் சொன்னுல் அங்கு க்ரியை வேறு. முன் யாகத்திற்கு ஏற்கவே த்ரவ்யம் கிடைத்துவிட்டதால் வேறு த்ரவ்யத்தை அது கொள்ளமாட்டாதாகையால். ஆருவது ப்ரகரணுந்தரம். முன் க்ரியையினுடைய ஸந்தர்ப்பத்திலே யில்லாமல் வேறி டத்தில் முன்க்ரியையைப்போன்றதொன்றைச் சொன்னு லும் அங்கே முன்க்ரியையே நினைத்தெடுக்கக் காரணமில்லை யென்று அந்தக் கிரியை வேறென்கிறது. இவற்றிலேதே னும் ப்ரமாணமுண்டா இங்கு என்று விசாரிக்கப்படுகிறது.

ஒவ்வொரு வேதத்திற்கும் பல கிளைகள் (சாகைகள்). ஒவ்வொரு சாகையின் முடிவும் வேதாந்தமாம். சாகைகள் வேருயினும் கிரியை, கூடுமிடத்தில் ஒன்றேயாம் என்று

மீமாம்ஸையிலே மொழியப்பெற்றுள்ளது. ஸம்யோகம், ரூபம், சோதனே, பெயர் இவை ஸமானங்களானுல் கிரியை ஒன்றெனப்பட்டது. ஸம்யோகமாவது ஸம்பந்தம். அதாவது-பலனே, ரூபமாவது க்ரியைக்கு வேண்டும் வஸ்து, சோதனேயாவது விதி—இதனுல்தான் எத்தனே சாகையில் அக்னிஹோத்ரம் சொல்லப்பட்டாலும் அது ஒன்றே, இப்படி தர்சமுமொன்று, பூர்ணமாஸமுமொனறு, ஸோமயோகமுமொன்றென்றவாறு.

இதன்படி இங்கு பார்க்கும்போது—வைச்வாநரவித்யையென்ற வித்யை பல சாகைகளிலுளது, இப்படியே அக்ஷர வித்யை, சாண்டில்யவித்யை முதலானவையும். எல்லா வைச்வாநரவித்யையும் ஒன்றுதானு, எல்லா அக்ஷரவித்யையும் ஒன்றுதானு என்றிங்கே விசாரமெழுகிறது. அதில் ஒருதரம் விதித்ததை மீண்டும் விதிக்க முடியாதாகையால் அப்யாஸமென்ற ப்ரமாணமுள்ளது, அதுபோல் ப்ரகரணுந்தரமென்ற ப்ரமாணமும் கொள்ளலாம். வெவ்வேறு சாகையானபடியாலே ஒரு ப்ரகரணத்திலென்ன வியலாது. ஆகையால் வைச்வாநரவித்யை, அக்ஷரவித்யை என்ற அந்தந்தப் பெயர் கொண்ட வித்யை யெல்லாம் ஒன்றே என்ன ஒண்ணுதென்று கேள்வி பிறக்கும். இக் கேள்விக்கு ஸமாதானமாகத் தான் பூர்வமீமாம்ஸையில் கர்மவிசாரம் செய்யும்போது கீழ்ச் சொன்னபடி ஸம்யோகம், ரூபம், சோதனே, பெயர் இவை வேறுபடாதபோது ஒன்றென்றே கொள்ள வேண்டுமென்றது. அதன்மேல் கர்மங்கள் விஷயத்தில் அந்த ந்யாயமிருந்தாலும் வேதாந்தத்திற் சொன்ன வித்யைகள்விஷயத்தில் அந்த நியாயம் இடம் பெருதென்று பூர்வபக்ஷி நினேக்கிருன். அதை மேலே நிராகரிக்கப் போகின்ருராய் இங்கும் அந்த நியாயம் இடம் பெறுமென்று முதல் இரண்டு ஸூத்ரங்களாலே காண்பிக்கிருர். ஸூத்ரார்த்தமாவது—எல்லா வேதாந்தங்களில் அறிவிக்கப்பட்ட அக்ஷர வித்யையும், அதுபோல் வைச்வாநரவித்யைமுதலானவையும் ஒவ்வொன்றே. சோதனே முதலான நான்கிலும் வேறுபாடின்மையால். (1)

பேதாத் ந இதி சேத் ஏகஸ்யாம் அபி **3-3-2.**

விதி அனேகமாயிருப்பதால் வித்யை ஒன்ருகா என்ன வேண்டா. ஒரே வித்யைவிஷயத்திலும் பல விதிகள் கூடும். அந்தந்த சாகையை ஓதும் புருஷர்கள் வேருனபடியாலே அவரவர்களுக்கு அந்த ஒரே வித்யையை அறிவிப்பதற்காக அங்கங்கே தனி விதிகள் இடம் பெறும். (2)

இப்படி பூர்வமீமாம்ஸா நியாயத்தை எடுத்துக் காண்பித்துவிட்டு பூர்வபக்ஷி அந்த நியாய மிங்கு வாராதென்று நினைத்ததற்குக் காரணத்தை எடுத்துக் கழிக்கிறர்—

ஸ்வாத்யாயஸ்ய ததாத்வே ஹி ஸமாசாரே
அதிகாராத் ச ஸவவத் ச தந்நியம: 3–3–3.

அதர்வசாகையான முண்டகோபநிஷத்திலே, சிரோவ்ரத முள்ளவருக்கே இந்த வித்யையை உபதேசிக்கவேண்டு மென்றுள்ளது. சிரோவ்ரதமாவது தணலுடன் பாத்ரத்தைத் தலையில் வைத்துக்கொள்வது. இது அதர்வவேதம் அத்யயனம் செய்பவருக்கே யுள்ளது. ஆக இந்த அக்ஷர வித்யை முண்டகத்திலிருப்பதும் ப்ருஹதாரண்யகத்திலிருப்பதும் ஒன்றுனல் அதர்வசாகிகளுக்கே இது வென்றதாகு மாகையால் ப்ருஹதாரண்யகத்திலே அதை விதித்தது வீணும், அதனல் சிரோவ்ரதத்துடன் கூடின அக்ஷரவித்யை வேறு, வேறிடத்திற் சொன்ன அக்ஷரவித்யை வேறெனத் தெரிகிறது. இதனல் ஸர்வசாகாந்யாயம் பூர்வமீமாம்ஸையிற் சொன்னது வித்யாவிஷயத்திலே இல்லையென விளங்கு மென்று பூர்வபக்ஷி நினைத்திருக்கிறன். அதற்கு மறுமொழி யாம் இது—வேதாத்யயனத்திற்கு சிரோவ்ரதம் வேண்டியதாகையாலே வந்தது அந்த வாக்யம். அதாவது முண்டக சாகையென்றே அங்கு ப்ரம்மவித்யை யென்ற சொல்லுக்குப் பொருளாம. சிரோவ்ரதிகளுக்கே இந்த பரம்மவித்யை யென்றுல் இந்த வேதத்தை ஓதுகின்றவர்கள் ஓதும்போது சிரோவ்ரதிகளாயிருக்கவேண்டு மென்றதே. இங்கு ப்ரம்ம வித்யை யென்ற சொல்லுக்கு அக்ஷரோபாஸனை யென்ற பொருளில்லை. அவர்களே உபாஸிக்கவேண்டு மென்றிங்கில்லை. ப்ரம்மமாவது வேதம், அவர்களுக்கே சொல்லிவைக்க வேண்டுமென்றன்ருே யிருப்பது. அது வேதாத்யாபனம். அந்த வ்ரத மின்றி அத்யயனம் செய்யக்கூடாதென்ற வாக்யத்தைக் கொண்டும் இதற்கு இதே பொருள் எனத் தெளியலாம். ஆகையால் தான் ஸமாசாரம் என்கிற க்ரந்தத்திலே இந்த சிரோவ்ரதத்தை வேதவ்ரதமென்றது. உபாஸநா வ்ரத மென்னவில்லை. ஆக சிரோவ்ரதம் அதர்வசாகை ஓதுவதற்கே உரியதாம். ஸப்தஸூர்யமென்ற பெயர் கொண்ட ஹோமம் முதலாய் சதௌதனம் என்றது வரையிலான ஸ்வஹோமங்களென்ற பேர்பெற்றவை அதர்வவேதிகளுக்கு ஏற்பட்ட ஒற்றை அக்னிக்கே ஸம்பந்தப்பட்டிருப்பது போலாம் இது. ஆகையால் வித்யை வெவ்வேறென்பதற்கு இது ஸாதகமாகாது. (3)

வித்யை யொன்று என்பதற்கு ஸாதகமு முளதென் கிறார்—

தர்சயதி ச. 3-3-4.

சாந்தோக்யத்திலே தஹரவித்யையிலே ஆகாசமென் னப்பட்ட பரமாத்மாவினுள் இருப்பவற்றை உபாஸிக்க வேண்டு மென்று விதித்து, அவையாவன அபஹதபாப்மத் வம் (பாபங்களற்றிருக்கை) முதலான கல்யாண குணங் களென்று மேலே விரித்துரைத்தது. தைத்திரீயத்திலே விரிந்துரைக்காமல், உள் இருப்பதை உபாஸிக்கவேண்டு மென இவ்வளவே சொல்லிநின்றது. இது வித்யை யொன் ருனபடியாலே வேறு வேதத்தினின்று இதைத் தெளியலா மென்றே கருத்தினு லென்னவேண்டும். ஆகையால் தஹர வித்யை யெங்குமொன்றே. (4)

உபஸம்ஹார: அர்த்தாபேதாத் விதிசேஷவத் ஸமாநே ச 3-3-5.

ஆகையால் வித்யை யொன்ருனபோது அவரவருக்கு அந்த வித்யை விதிக்குமிடத்திலே ஓதப்பட்ட குணங்களைப் போலவே வேறு வேதத்தில் அந்த வித்யையின் ஸந்தர்ப் பத்திலே சொல்லப்படும் குணங்களையும் சேர்த்துக்கொள் ளல் வேண்டும். இவைகளுக்குப் போல் அவைகளுக்கும் உபாஸனையின் உருவை யமைப்பதென்கிற பலன் ஒன்ரு கையால். (5)

(2) *அந்யதாத்வாதிகரணம்*

அந்யதாத்வம் சப்தாத் இதி சேந் ந அவிசேஷாத். 3-3-6.

பெயர் ஒன்ருயினும் வித்யை சில விடங்களில் வேறு படுகிறதென்கிறது இங்கு. மோக்ஷவித்யைகளான பரவித் யைகள் போல வேறு வித்யைகளும் வேறு பலன்களுக்காக உபநிஷத்தில் உபதேசிக்கப்படுகின்றன. அவற்றில் உத் கீதவித்யையு மொன்று. அது ப்ருஹதாரண்யகம் சாந்தோக் யம் இரண்டிலுமுளது. தேவதைகள் தங்கள் பகைவரான அஸுரரைப் பரிபவப்படுத்த உக்கீதத்தை எடுத்துக்கொண் டார்களென்று இரண்டிடத்திலுமுள்ளதாகையால் பெயரும் பலனுமொன்று. ஆனலும் உபாஸனையின் உருவம் வேறு படுகிறதென்று ஸித்தாந்தியின் கொள்கை. ஏனெனில்— சாந்தோக்கியம் உத்கீதத்தை ப்ராணவாயுவாக உபாஸிக்க வேண்டு மென்கிறது. ப்ருஹதாரண்யகமானது உத்கானம் பண்ணும் ரித்விக்கை ப்ராணனுக உபாஸிக்கவேண்டு மென்கிறது, ப்ராணனைப் பார்த்து தேவதைகள், நீ உத்கா னம் செய்யவேண்டும், உத்காதாவாயிருக்கவேண்டு மென்

இப்படி பூர்வமீமாம்ஸாநியாயத்தை எடுத்துக் காண்பித்துவிட்டு பூர்வபக்ஷி அந்த நியாய மிங்கு வாராதென்று நினைத்ததற்குக் காரணத்தை எடுத்துக் கழிக்கிறார்—

ஸ்வாத்யாயஸ்ய ததாத்வே ஹி ஸமாசாரே
அதிகாராச்ச ஸவவச்ச தந்நியம: 3-3-3.

அதர்வசாகையான முண்டகோபநிஷத்திலே, சிரோவ்ரத முள்ளவருக்கே இந்த வித்யையை உபதேசிக்கவேண்டு மென்றுள்ளது. சிரோவ்ரதமாவது தணலுடன் பாத்ரத்தைத் தலையில் வைத்துக்கொள்வது. இது அதர்வவேதம் அத்யயனம் செய்பவருக்கே யுள்ளது. ஆக இந்த அக்ஷர வித்யை முண்டகத்திலிருப்பதும் ப்ருஹதாரண்யகத்திலிருப்பதும் ஒன்ருனல் அதர்வசாகிகளுக்கே இது வென்றதாகுமாகையால் ப்ருஹதாரண்யகத்திலே அதை விதித்தது வீணும், அதனுல் சிரோவ்ரதத்துடன் கூடின அக்ஷரவித்யை வேறு, வேறிடத்திற் சொன்ன அக்ஷரவித்யை வேறெனத் தெரிகிறது. இதனுல் ஸர்வசாகாந்யாயம் பூர்வமீமாம்ஸையிற் சொன்னது வித்யாவிஷயத்திலே இல்லையென விளங்குமென்று பூர்வபக்ஷி நினைத்திருக்கிறன். அதற்கு மறுமொழியாம் இது—வேதாத்யயனத்திற்கு சிரோவ்ரதம் வேண்டியதாகையாலே வந்தது அந்த வாக்யம். அதாவது முண்டக சாகையென்றே அங்கு ப்ரம்மவித்யை யென்ற சொல்லுக்குப் பொருளாம. சிரோவ்ரதிகளுக்கே இந்த பரம்மவித்யை யென்ருல் இந்த வேதத்தை ஓதுகின்றவர்கள் ஓதும்போது சிரோவ்ரதிகளாயிருக்கவேண்டு மென்றதே. இங்கு ப்ரம்ம வித்யை யென்ற சொல்லுக்கு அக்ஷரோபாஸனை யென்ற பொருளில்லை. அவர்களே உபாஸிக்கவேண்டு மென்றிங்கில்லை. ப்ரம்மமாவது வேதம், அவர்களுக்கே சொல்லிவைக்க வேண்டுமென்றன்ருே யிருப்பது. அது வேதாத்யாபனம். அந்த வ்ரத மின்றி அத்யயனம் செய்யக்கூடாதென்ற வாக்யத்தைக் கொண்டும் இதற்கு இதே பொருள் எனத் தெளியலாம். ஆகையால் தான் ஸமாசாரம் என்கிற க்ரந்தத்திலே இந்த சிரோவ்ரதத்தை வேதவ்ரதமென்றது. உபாஸநா வ்ரத மென்னவில்லை. ஆக சிரோவ்ரதம் அதர்வசாகை ஓதுவதற்கே உரியதாம். ஸப்தஸூர்யமென்ற பெயர் கொண்ட ஹோமம் முதலாய் சதௌதனம் என்றது வரையிலான ஸவஹோமங்களென்ற பேர்பெற்றவை அதர்வவேதிகளுக்கு ஏற்பட்ட ஒற்றை அக்னிக்கே ஸம்பந்தப்பட்டிருப்பது போலாம் இது. ஆகையால் வித்யை வெவ்வேறென்பதற்கு இது ஸாதகமாகாது. (3)

வித்யை யொன்று என்பதற்கு ஸாதகமு முளதென் கிருர்—

**தர்சயதீ ச. 3-3-4.**

சாந்தோக்யத்திலே தஹரவித்யையிலே ஆகாசமென் னப்பட்ட பரமாத்மாவினுள் இருப்பவற்றை உபாஸிக்க வேண்டு மென்று விதித்து, அவையாவன அபஹதபாப்மத் வம் (பாபங்களற்றிருக்கை) முதலான கல்யாண குணங் களென்று மேலே விரித்துரைத்தது. தைத்திரீயத்திலே விரிந்துரைக்காமல், உள் இருப்பதை உபாஸிக்கவேண்டு மென இவ்வளவே சொல்லிநின்றது. இது வித்யை யொன் ருனபடியாலே வேறு வேதத்தினின்று இதைத் தெளியலா மென்றே கருத்தினு லென்னவேண்டும். ஆகையால் தஹர வித்யை யெங்குமொன்றே. (4)

**உபஸம்ஹார: அர்த்தாபேதாத் விதிசேஷவந் ஸமாநே ச 3-3-5.**

ஆகையால் வித்யை யொன்ருனபோது அவரவருக்கு அந்த வித்யை விதிக்குமிடத்திலே ஓதப்பட்ட குணங்களைப் போலவே வேறு வேதத்தில் அந்த வித்யையின் ஸந்தர்ப் பத்திலே சொல்லப்படும் குணங்களையும் சேர்த்துக்கொள் ளல் வேண்டும். இவைகளுக்குப் போல் அவைகளுக்கும் உபாஸனையின் உருவை யமைப்பதென்கிற பலன் ஒன்ரு கையால். (5)

(2) *அந்யதாத்வாதிகரணம்*

**அந்யதாத்வம் சப்தாத் இதி சேந் ந அவிசேஷாத். 3-3-6.**

பெயர் ஒன்ருயினும் வித்யை சில விடங்களில் வேறு படுகிறதென்கிறது இங்கு. மோக்ஷவித்யைகளான பரவித் யைகள் போல வேறு வித்யைகளும் வேறு பலன்களுக்காக உபநிஷத்தில் உபதேசிக்கப்படுகின்றன. அவற்றில் உத் கீதவித்யையு மொன்று. அது ப்ருஹ்தாரண்யகம் சாந்தோக் யம் இரணடிலுமுளது. தேவதைகள் தங்கள் பகைவரான அஸுரரைப் பரிபவப்படுத்த உக்கீதத்தை எடுத்துக்கொண் டார்களென்று இரண்டிடத்திலுமுள்ளதாகையால் பெயரும் பலனுமொன்று. ஆனுலும் உபாஸனையின் உருவம் வேறு படுகிறதென்று ஸித்தாந்தியின் கொள்கை. ஏனெனில்— சாந்தோக்கியம் உத்கீதத்தை ப்ராணவாயுவாக உபாஸிக்க வேண்டு மென்கிறது. ப்ருஹதாரண்யகமானது உத்கானம் பண்ணும் ரித்விக்கை ப்ராணனுக உபாஸிக்கவேண்டு மென்கிறது, ப்ராணனைப் பார்த்து தேவதைகள், நீ உத்கா னம் செய்யவேண்டும், உத்காதாவாயிருக்கவேண்டு மென்

ரூர்களானதால். 'இப்படிச் சொல்லமைப்பால் வெவ்வேரு மென்னவேண்டா. தொடக்கத்தில் உக்கீதத்திஞல் பகை வரை வெல்ல நினைத்தது இரண்டிடங்களிலும் ஒரே விதமாகச் சொல்லப்பட்டிருப்பதால்' என்கிருன் பூர்வபக்ஷி. ப்ருஹதாரண்யகத்திலும் கானம் பண்ணப்படும் உத்கீதத்தையே உத்காதாவாகச் சொல்லிற்றென்றது அவன் கருத்து. (6)

ஸித்தாந்தம்—

ந வா ப்ரகரணபேதாந் பரோவரீயஸ்த்வாதிவத். 3–3–7.

உத்கீதமாவது ஒவ்வொரு ருக்கிலும் ஸாமகானம் செய்யும்போது அந்த ஸாமத்தின் நடுபாகம். அந்த பாகத்தின் தொடக்கத்தில் ப்ரணவ முள்ளது. அந்த ப்ரணவத்தை மட்டும் உத்கீதமென்று தொடங்கி அதிலே ப்ராணத்ருஷ்டியென்ற உபாஸனத்தைச் சொல்லுகிறது சாந்தோக்யம். ப்ருஹதாரண்யகத்திலே அவ்வாறு உத்கீதசப்தத்தின் பொருளைக் குறுக்குவதற்குக் காரணமொன்று மில்லையாகையாலே ஸாமத்தின் நடுபாகம் மொத்தமுமே உத்கீதமாக வேண்டும். ஆக எப்படியும் உபாஸனை வேறுபடுகிறபடியால் வாக்யம் அமைந்திருப்பதற்கேற்ப ப்ருஹதாரண்யகத்திலே உத்காதாவையே ப்ராணஞக உபாஸிப்பதே நியாயம். தொடக்கத்தில் உத்கீதத்தைச் சொன்னதில் விரோதமில்லை. உத்கீத கானம் பண்ணுகிறவன் என்றபோது உத்கீதமும் அதில் அடங்கியுளதே. ஆகையால் வித்யை வேறு. சாந்தோக்யத்திலேயே உத்கீதத்தை பரமாத்மாவாகக் கொள்வதென்ற உத்கீத வித்யையு முளது. அதிலும் பரோவரீயஸ்த்வம், உயர்ந்ததற்கும் உயர்ந்திருக்கை என்கிற குணத்தோடு கூடின பரமாத்மாவின் த்ருஷ்டியாகிற வித்யை வேறு, செந்தாமரைக்கண்ணனை பொன்மய உருவமுடைய பரமாத்மத்ருஷ்டியாகிற வித்யை வேறு. அதுபோல் ப்ரணவமாகிற உத்கீதத்தில் ப்ராணத்ருஷ்டி (ப்ராணவாயுவாக நினைத்துக் கொள்வது) வேறு, முழு உத்கீத்த்தையும் கானம்செய்யுமவனிடத்தில் ப்ராணத்ருஷ்டியாகிற உத்கீத வித்யை வேறு என்க. (7)

ஸம்ஜ்ஞாதச் சேத் தத் உக்தம், அஸ்தி து தத் அபி: 3–3–8.

பெயர் ஒன்ருனதால் வித்யை ஒன்றெனப்பட்டதென்னில், வெவ்வேருயினும் பெயர் ஒன்ருகலாம். பூர்வமீமாம்ஸையிலேயே அக்னிஹோத்ரமென்ற பெயர் நித்யாக்னிஹோத்ரத்திற்கும், ஒரு ஸத்ரத்திலுள்ள மற்ருேர் அக்னிஹோர்த்ரத்திற்கும் இசையப்பட்டது. முன் ஸூத்ரத்திற் சொன்ன உத்கீதவித்யையிலேயும் காண்க. (8)

வ்யாப்தே: ச ஸமஞ்ஜஸம். **3–3–9.**

சாந்தோக்யத்திலே இதற்கு முன் உத்கீதப்ரணவத்தை மட்டும் கொண்டாலும் இங்கு ப்ருஹதாரண்யகத்திற்போலே முழு உத்கீதத்தைக் கொள்ளலாகாது. முன்பாகத்திற் போலே மேலேயும் ப்ரணவத்தை மட்டுமே கொண்டு உத்கீதவித்யைகளிருப்பதால் இடையிலும் அவ்வளவு மட்டும் கொள்வது அழகாம். (9)

(3) ஸர்வாபேதாதிகரணம்

ஸர்வாபேதாத் அந்யத்ர இமே **3–3–10.**

ப்ராணவித்யை சாந்தோக்கியத்திலும் ப்ருஹதாரண்யகத்திலும் கௌஷீதகியிலும் ஓதப்பட்டது. எல்லா இந்திரியங்களைக்காட்டிலும் ப்ராணன் உடலில் முன்னே கார்யங்களைச் செய்வதால் ஜ்யேஷ்ட்டமென்றும், அவையெல்லாம் இதற்கு அதீனங்களாகையாலே இது ச்ரேஷ்ட்டமென்றும் தெரிந்து அவ்வாறு ப்ராணனை உபாஸிப்பது ப்ராணவித்யையாம். ப்ராணனுக்கு அடங்கின வாக்கு முதலான இந்திரியங்களுக்கு வஸிஷ்ட்டத்வம் முதலான குணங்களும் கூறப்பெற்றன. வஸிஷ்ட்டத்வமாவது பணத்தையடைவிக்கும் பெருமையுடையதாகை. இது வாக்கைச் சேர்ந்தது. இப்படியே கண்முதலானவற்றிற்கும் ஒவ்வொரு குணம் கூறப்பட்டது. ப்ராணனோடு விவாதம் செய்த வாக்கு முதலான இந்திரியங்கள் ப்ராணனின் பெருமையை யறிந்து, தன் தன்குணத்தை ப்ராணனுக்கே சேர்த்தன. இதை,'நான் வஸிஷ்டையாயிருக்கிறேனென்பது நீ வஸிஷ்டனாயிருப்பதே' என்று வாக்கு பேசினது போன்ற வாக்கியங்களிலே காண்க. இப்படித் தம் குணங்களைப் ப்ராணனைச் சேர்ந்தனவாகச் சொல்வதென்பது கௌஷீதகியிலில்லை. ஆகையால் கௌஷீதகியிலுள்ள ப்ராணவித்யை வேறென்றான் பூர்வபக்ஷி. ஸித்தாந்தமாவது—ப்ராணன் ஜ்யேஷ்டம் ச்ரேஷ்டம் என்பதை, இந்திரியங்களுக்குள்ள குணங்களெல்லாம் ப்ராணனுக்குஅதீனங்கள் என்று சொல்லித்தான் ஸ்தாபிக்க வேண்டும். இந்திரியங்கள் ப்ராணனுக்கு அடங்கிநின்றது எல்லா இடத்திலும் கூறப்பட்டதே. ஆகையால் அவற்றின் குணங்களை ப்ராணனைச் சார்ந்ததாகக் கௌஷீதகியில் சொல்லாமற்போனாலும் சொன்னவண்ணமே யாகுமாகையால் சாந்தோக்யாதிகளிற்போல் கௌஷீதகியிலும் அவ்வம்சங்கள் கொள்ளத் தக்கவையே. ஆகையால் வித்யையொன்றே என்பதாம். (10)

(4) ஆனந்தாத்யதிகரணம்

**ஆநந்தாதய: ப்ரதாநஸ்ய** 3-3-11.

ஒரு வித்யையில் ப்ரம்மத்திற்குச் சொன்ன குணங்கள் மற்ற வித்யைகளிற் சொல்லாதபோது கொள்ளக்கூடா. இல்லையேல் எல்லா குணங்களும் கொள்ளப்படவேண்டும். அவையோ எண்ணற்றவை. ஆகையால் ப்ரம்மத்தினுடைய ஸத்யத்வம் ஜ்ஞாநத்வம் அநந்தத்வம் ஆநந்தத்வம் என்ற குணங்களும் சொன்னவிடத்தில் மட்டுமே நிற்குமென்றது பூர்வபக்ஷம். ஸிந்தாந்தமாவது—ஆனந்தம் முதலிய குணங்கள் எங்கும் ஆதரிக்கப்படும். அவற்றிற்கு விசேஷ்யமான ப்ரம்மம் எல்லா வித்யையிலு மிருப்பதால், அதாவது—எந்த குணங்களின்றியும் ப்ரம்மஸ்வரூபத்தை அறியமுடியுமோ, அந்த குணங்கள் சொன்ன விடத்தில்மட்டும் இருக்கும். எந்த குணங்களை விட்டு ப்ரம்மம் அறியவியலாதோ, அவை ப்ரம்மத்திற்கு ஸ்வரூபநிருபகதர்மங்களாகையால் எங்கும் கொள்ளப்படவேண்டியவை. இவை ஸ்வரூபநிரூபகதர்மங்கள்-வஸ்துவை யறிவிக்க அதனுடன் தோன்றும் தர்மங்கள்; மற்றவை நிருபிதஸ்வரூபவிசேஷணங்கள், அவையின்றியும் அறியப்பெற்ற வஸ்துவில் தோன்றுகின்றவைகள். ஆகையால் தைத்திரீயத்தில் ஆனந்தமயவித்யையிற் சொன்ன ஸத்யத்வ ஞானத்வ அநந்தத்வ ஆநந்தத்வங்கள் எங்கும் கொள்ளப்படும். (11)

ஆனந்தமய வித்யையில், ஆனந்தமயனை பரமாத்மாவுக்கு, ப்ரியமே தலை, மோதமே வலப்பக்கம், ப்ரமோதம் இடப்பக்கம் என்றெல்லாம் சில குணங்கள் கூறப்பெற்றன. ப்ரியமோதாதிகள் ஆனந்தத்தின் உட்பிரிவுகளே அத்தகைய தலைமுதலிய அவயவங்கள். இவையும் எங்குமுபாஸிக்கப்படுகின்றனவோ என்னில்—

**ப்ரியசிரஸ்த்வாத்யப்ராப்தி: உபசயாபசயௌ ஹி பேதே** 3-3-12.

ப்ரியம் தலையாகை முதலியன கொள்ளப்படா. அவை ப்ரம்மத்தின் குணங்களேயல்ல. அப்போது ப்ரம்மம் தலை கை முதலியன பல அவயவங்களின் சேர்க்கையாய் அது சிலவிடம் குறுகியும் சிலவிடம் பருத்தும் பலபடியாம். ஆக எங்கும் பரவியிருக்கை யென்பதுபோன்ற குணங்கள் குலையும். (12)

**இதரே து அர்த்தஸாமாந்யாத்** 3-3-13.

ஆனந்தாதிகுணங்கள் இவ்வாறல்ல. ப்ரம்மத்துடன் எப்போது மிருந்து கூடவே தோன்ற வேண்டியவையாய் ப்ரம்மத்திற்கு ஸமானங்களாகையால். (13)

ஆகில் பிரியம் தலையாயிருக்கை முதலானவற்றைச் சொன்னதென் எனில்—

**ஆத்⁴யாநாய ப்ரயோஜநாபா⁴வாத். 3–3–14.**

அவை யுபாஸனம் செய்தடையப்படவேண்டியவை யல்லவாகையாலே அவற்றிற்கு வேறு பலன் இல்லை யானது பற்றி, அவற்றைச் சொன்னது, ப்ரம்மம் ஒரே ஆனந்தமயம், ஆனந்தமல்லாத அம்சமே கிடையாதென்று நாம் மனதில் ஒருவாறு திடமாய்க் கொள்வதற்காக மட்டுமாம். (14)

**ஆத்மசப்³தா³த் ச. 3–3–15**

ஆனந்தமயனே ஆத்மா என்று சொன்னதால் ஆத்மஸ்வரூம் தலை, கை, கால் முதலிய அவயவங்களுடையதாகாதாகையாலும் ப்ரியசிரஸ்த்வாதிகள் குணங்களல்ல. (15)

**ஆத்மக்³ருஹீதி: இதரவத் உத்தராத். 3–3–16.**

ஐதரேயத்தில் 'ஆத்மா வொன்றே ப்ரளயத்தில் இருந்தது' என்ற வாக்கியத்திற்போலே இங்கும் ஆத்மசப்தத்தால் பரமாத்மஸ்வரூபத்தையே கொள்வதாம். மேலே, "நான் பலவாகக் கடவேன்; அதற்காகப் பிறப்பேனாக' என்று ஸங்கல்ப்பம் செய்தது அது'' என இருப்பதால். (16)

**அந்வயாத் இதி சேத் ஸ்யாத் அவதா⁴ரணாத். 3–3–17.**

ப்ராணமய—மநோமயாதிகளைச் சொல்லும்போதும் ஆத்மா என்ற சொல் இருக்கின்றதே. அவற்றைப் போல் இதுவும் ஆத்மாவன்றென்னலாமே என்னில், முதலில், 'ஆத்மாவினின்று ஆகாயம் உண்டாயிற்று' என்று ஓர் (முக்கியமான) ஆத்மாவைச் சொல்லி அது எது என்று விசாரிக்கும்போது ப்ராணமயாதிகளை இது ஆத்மா, இது ஆத்மா என்று காண்பித்துக்கொண்டே சென்று முடிவாக ஆனந்தமயனே ஆத்மா வென்று சொல்லிமுடித்ததால் அருந்ததியைக் காண்பிக்குமா போலே ப்ரம்மத்தைக் காண்பிக்க முன்னே ஆத்மாவல்லாதவற்றையும் ஆத்மாவாக ஏறிட்டுச் சொன்னதாம். ஆகையால் இங்கு எங்கும் ஆத்மசப்தம் ஆத்மஸ்வரூபத்தையே சொல்லி நிற்கும். (17)

(5) *கார்யாக்யாநாதிகரணம்*

**கார்யாக்²யாநாத் அபூர்வம்: 3–3–18.**

ப்ராணவித்யையில் மற்றொரு விஷயம் விசாரிக்கப்படுகிறது—'ஜ்யேஷ்ட்டமாய் ச்ரேஷ்ட்டமாய் உபாஸிக்கப்படும் ப்ராணன், 'எனக்கெது வஸ்த்ரம்' என்று தனக்கு அதீனங்க

ளான இந்திரியங்களைக் கேட்டது. தண்ணீரே வஸ்த்ரம் என்று அவை கூறின' என்று தண்ணீரை அதற்கு வஸ்த்ர மாகச் சொல்லி மேலே, 'ஆகையால்தான் புசிப்பதற்கு முன்னும் பின்னும் தண்ணீரை உடையாக்குகின்றனர். உடையைப்பெற்று அது அம்மணமாகாமலிருக்கிறது' என்றும், மற்றோரிடத்தில் 'ஆகையால் இங்ஙனமுணர்ந்தவன் புசிப்பதற்கு முன்னும் பின்னும் ஆசமனம் செய்யவேண்டும். அதனால் ப்ராணனை உடையுடையதாக்குகிறான்' என்றும் சொல்லிற்று. புசிப்பதற்கு முன்னும் பின்னும் இரண்டு ஆசமனங்களைச் செய்யவேண்டுமென்று ஸ்ம்ருதியில் ஆசமனம் விதிக்கப்பட்டதே. அதை விட வேறு ஆசமனம் வேதத்திலும் ப்ராணோபாஸகனுக்கு விதிக்கிறதென்றான் பூர்வபக்ஷி. ஸித்தாந்தமாவது ஆசமனம், தண்ணீரை உடையாக நினைப்பது என்ற இரண்டு விஷயங்கள் இங்கே சொல்லப்படுகின்றன. வேறுவகையில் அறியப்படாததாய் செய்யப்படவேண்டியதாயிருப்பதையே சொல்வது சாஸ்திரத்தின் ஸ்வபாவமாகையால் எல்லோருக்கும் பொதுவாக ஆசமனம் ஸ்ம்ருதியில் விதித்திருப்பதால் 'தண்ணீர் உடை' என்று நினைக்க வேண்டுவதே முன் அறியப்படாதது இங்கு விதிக்கப்படும். வேதவாக்கியத்தில், 'உடையுடையதாகச்செய்ததாக நினைக்கிறார்கள்' என்றே யுள்ளது; 'நினைக்கவேண்டும்' என்று விதியில்லை; ஆனாலும் விதி இருப்பதாகக் கொள்ளவேண்டும். அபூர்வமாய் அறியப்படாத விஷயமிருக்கிற இடத்தில் விதி இல்லாமற்போனாலும் விதியைக் கல்ப்பித்துக் கொள்ள வேண்டும். விதிக்கப்படுவதையே சொல்வதால், இது பூர்வ மீமாம்ஸையில், "வசநாநி து அபூர்வத்வாத்", "விதிர்வா ஸ்யாத் அபூர்வத்வாத்" என்ற ஸூத்ரங்களில் அறிவிக்கப்பட்டுள்ளது. (18)

(6) ஸமாநாதிகரணம்

ஸமாந: ஏவம் ச அபேதாத். **3–3–19.**

சுக்லயஜுர்வேதசாகை யொன்றிலேயே அக்னிரஹஸ்யமென்கிற பாகத்திலும் ப்ருஹதாரண்யகமென்ற பாகத்திலும் இரண்டு இடங்களில் சாண்டில்யவித்யை ஓதப்பட்டுளது. முதலில், மநோமயனும் ப்ராணசரீரனும், பாரூபனும், ஸத்யஸங்கல்ப்பனும், ஆகாசாத்மாவுமாயுள்ள ஆத்மாவை உபாஸிக்கவேண்டு மென்றது. பின்பாகத்தில், 'இந்த புருஷன் மநோமயன், பாரூபன், ஸத்யம், ஹ்ருதயத்தினுள் நெல் யவம் போன்றவன், ஸர்வத்தையும் தன் வசத்திலுள்ளவன், ஸர்வத்தையும் நியமிக்கிறவன், ஸர்வத்திற்

கும் ஸ்வாமி, ஸர்வத்தையும் பயமுறும்படி ஆஜ்ஞாபிக்கி றன்' எனவுள்ளது. ஓரிடத்தில் ஸத்யஸங்கல்பத்வமும், மற்றோரிடத்தில் வசியாயிருக்கை முதலியனவுமாக வெவ்வேறு குணங்களிருப்பதால் வெவ்வேறு வித்யை என்றது பூர்வபக்ஷம். மநோமயத்வாதிகுணங்கள் எங்கும் ஸமான மாயிருக்கும்போது ஸத்யஸங்கல்பத்வாதி ப்ரகாரத்திலும் ஐக்யமே யிருப்பதால் வித்யை வேறில்லை. ஸத்யஸங்கல்பத்வமென்ற குணமே வசியாயிருக்கை, ஈச்வரனா யிருக்கை யென்றவாறு விரித்துரைக்கப்பட்டதென்க என்பது ஸித்தாந்தம். (19)

(7) *ஸம்பந்தாதிகரணம்*

**ஸம்பந்தாத் ஏவம் அந்யத்ர அபி. 3-3-20.**

வ்யாஹ்ருதிசரீரகப்ரம்மவித்யை ப்ருஹதாரண்யகோபநிஷத்தில் விதிக்கப்பட்டுள்ளது. ஸூர்யமண்டலத்திலிருக்கும் புருஷன் யவன், வலக்கண்ணிலிருக்கும் புருஷனும் யவன், அவன் ஸத்யமெனப்பட்டவன், பூ: புவ: ஸுவ: என்ற வ்யாஹ்ருதிகளை சரீரமாக உடையவன். அவனுக்கு அஹஸ் என்றது இரஹஸ்யமான பெயர். இவ்வாறு தைவதத்தி (சூர்யவிஷயத்தி)லாம். அவனுக்கு அஹமென்பதும் இரஹஸ்யப் பெயர். இவ்வாறு உடலிலாம்' என இரு நாமங்கள் உபதேசிக்கப்பெற்றன. இங்கே ஸ்த்தானம் வெவ்வேறானாலும் உபாஸிக்கவேண்டிய உருவம் இரண்டிடங்களிலுமொன்றானபடியாலே எந்த இடத்தில் வேண்டுமானாலும் எந்தப் பெயரையும் கொள்ளலாம். ஆகையால் முன் சாண்டில்யவித்யையிற் போலே ஒரே உருவம் இரண்டிடங்களிலும் ஸம்பந்தப்படுவதால் ஓரிடத்திற் சொன்ன பெயர் மற்றோரிடத்திற்குமாமென்றது பூர்வபக்ஷம். (20)

ஸித்தாந்தம்—

**ந வா விசேஷாத். 3-3-21.**

இவ்வாறு இல்லை. அந்தந்தப் பெயர் அங்கங்குமட்டுமே கொள்ளப்படும், உபாஸனையில் உருவம்போலே இடமும் சேர்ந்ததாகையால் உபாஸிக்கப்படுமதில் வேறுபாடிருப்பதால் உபாஸ்யரூபம் வேறாகையால் உபாஸனைகள் இவை இரண்டேயாம். ஆகையால் வித்யைகள் இரண்டான படியாலே ஒரு பெயர் மற்றொன்றிற்கு ஆகாது. (21)

**தர்சயதி ச. 3-3-22.**

உபாஸிக்கப்படும் வஸ்துவின் இடம் வேறானபோதும் ரூபம் வேறாய் உபாஸனை வேறாகு மென்பதற்கு ஸாக்ஷியு

முண்டு. சாந்தோக்யத்திலே உத்கீதத்தை ஹிரண்மயபுருஷனாக உபாஸிக்க விதிக்கும்போது சூரியமண்டலத்தில் புருஷன் இருப்பதை முன்னம் சொல்லி அவனுடைய உருவத்தையும் விரித்துரைத்து கண்ணில் புருஷனைச் சொல்லும்போது, 'இந்த கண்ணிலிருக்கும் புருஷனுக்கும் சூரியமண்டலத்திலிருக்கும் புருஷனுடைய உருவமே உருவமாம் அவனைத் துதிசெய்யவேண்டுமவை இவனைத் துதிசெய்ய வேண்டுமவை யாம்' என்று அதிதேசம் செய்கிறது——— ஒரு வித்யையிற் சொன்னதை மற்றொன்றுக்குக் கொள்ளச் சொல்லுகிறது. சூர்யமண்டலம் கண் என்கிற ஸ்தானங்களுக்காக வித்யை வேறாகாதாகில் ஓரிடத்திற் சொன்னதே போதுமாகையால் அதிதேசம் செய்தல் வீணாம். ஆகையால் இத்தகைய வித்யை வெவ்வேறேயாகும். (22)

(8) ஸம்ப்ருத்யதிகரணம்

ஏதேனுமோர் உபாஸனபரகரணத்திலுள்ள குணம் அவ்வுபாஸனத்திலே சேரும். உபாஸனப்ரகரணத்திவில்லாத குணமாகில் எங்குச் சேருமென்பது விசாரிக்கப்படுகிறது.

ஸம்ப்ருதித்யுவ்யாப்தி அபி ச அத: **3–3–23.**

தைத்திரீயத்திலும் ராணாயணீயசாகைக்கிலபாகத்திலும் ஒரு மந்த்ரம் உளது. 'ப்ரம்மத்தினால் பண்டைய வீர்யங்கள் சேகரிக்கப்பட்டுள்ளன. மூத்ததான ப்ரம்மம் முன்னமே ஸுவர்க்கத்தில் பரவிற்று. ப்ரம்மமே ப்ராணிகளுக்குமுன் தோன்றிற்று. அந்த ப்ரம்மத்தோடு போட்டியிட எவன் வல்லன்' என்றது அதன் பொருள். இங்கே வீர்யங்களைச் சேகரிக்கை,மேலுலகிற் பரவல் என்றவாறு குணங்கள்கூறப்பட்டுள. எல்லா உபாஸனங்களிலும் இவற்றைக் கொள்ளலாம் என்பது பூர்வபக்ஷம். ஸித்தாந்தமாவது—மேலுலகைச் சூழ்ந்திருப்பதைச் சொன்னதாலே, ஹ்ருதயத்தினுள்ளே போலே சிறிய இடங்களால் அளவிடப்பட்டு விதிக்கப்பட்ட ப்ரம்மத்தின் உபாஸனங்களில் அது சேராது. ஆகையால் மேலுலகமென்ற ஸ்தானத்தின் ஸம்பந்தத்தை, முன் அதிகரணத்திற் சொன்ன வித்யையிலே போலே, சொல்லியிருப்பதால் பெரிய ஸ்தானத்தில் ஸம்பந்தப்பட்டதாக ப்ரம்மத்தை யுபாஸிக்கும் வித்யைகளில் தான் த்யுவ்யாப்தி (மேலுலகிற் பரவல்) என்ற குணம் சேரும். அத்துடன் சேர்த்தே வீர்யச்சேகரிப்பு என்ற குணமும் ஓதப்பட்டதால் அது சேருமிடத்திலேயே இதுவும் சேரும். ஆகையால் முன் சொன்ன பெயர் போல் இவை சில இடத்திற்கேயாம். (23)

(9) புருஷவித்யாதிகரணம்

**புருஷவித்யாயாம் அபி ச இதரேஷாம் அநாம்நாநாத். 3-3-24.**

புருஷவித்யை இரண்டிடங்களிற் சொல்லப்பட்டது ஒன்ரு வெவ்வேரு என்று விசாரிக்கப்படுகிறது—"கீழ்ச் சொன்ன படிகளை அறிந்த புருஷனுகிற யஜ்ஞத்திற்கு அவன்தானே யஜமானன், அவனது ச்ரத்தையே பத்னி, உடலே ஸமித்து" என்றவாறு புருஷனை யஜ்ஞமாக நினைப் பதாம் உபாஸனை யாகிற புருஷவித்யை தைத்திரீயத்தில் உளது. சாந்தோக்யத்திலும், "புருஷனே யஜ்ஞம், அவ னது ஆயுளில் முதல் இருபத்து நான்கு வருஷங்கள் யாக தினத்திய ப்ராதஸ்ஸவனம் என்ற காலைப்பாகம்" என்ற வாறு புருஷவித்யை யுளது. பேர் ஒன்ருனதாலும், சாந் தோக்யத்தில் இந்த வித்யையை யனுஷ்டிப்பதன் பலன் நூற்றுப்பதினறு வருஷகாலம் ஜீவித்திருப்பதென்றதைத் தைத்திரீயத்திலும் கொள்ளலாமாகையாலும் வித்யை யொன் றெனப் பூர்வபக்ஷமாம். பெயர் ஒன்றேயானுலும் ஓரிடத்தில் கல்பித்தவண்ணம் மற்ரேரிடத்திலே கலப்பனையில்லையா கையால், 'தானே யஜமானன், ச்ரத்தையே பத்னி' என்ற வாறு கல்ப்பனையுடைய தைத்திரீய புருஷவித்யைக்கு, 'ஆயுளின் பாகங்கள் மூன்றும் மூன்று ஸவனங்கள், பசியே தீக்ஷை' என்றவாறு கல்ப்பனையுடைய சாந்தோக்யபுருஷ வித்யையைக் காட்டிலும் வேருகுகையே தகும். தைத்திரீ யத்தில் கீழ்ச்சொன்னவகையை யறிந்தவன் என்று தொடங்கி அக்கல்ப்பனை செய்திருப்பதாலே இந்த புருஷ வித்யை முன் வித்யையோடு சேர்ந்ததென்றும், அங்கே சொல்லப்பட்ட ப்ரம்மப்ராப்தி என்ற பலனைத் தவிர வேறு பலனை அந்த புருஷவித்யை அபேக்ஷிக்காதென்றும் தெரி கிறது. சாந்தோக்யத்திலே 116 வருஷம் வாழ்வது பலன் என்றது. ஆகையாலும் வித்யை வெவ்வேரும். (24)

(10) வேதாத்யதிகரணம்

**வேதாத்யர்த்தபேதாத். 3-3-25.**

தைத்திரீயத்திற் கடையிற் சொன்னது அதற்கு முன் அங்கே விதிக்கப்பெற்ற வித்யையைச் சேர்ந்ததென்று கீழே சொல்லிற்று. அத் தைத்திரீயோபநிஷத்திலே முதலிலுள்ள மந்த்ரம் முதலானவையும் ப்ரம்மவித்யைக்கு அங்கமா, இல்லையா என்று விசாரிப்பதாம் இங்கு. அதற்காகப் பொது வாகவே ஒவ்வோர் உபநிஷத்திலும் முதலிற் சொன்னவை ப்ரம்மவித்யைக்கே சேர்ந்தனவா என்றும் விசாரமாம், ப்ரம்ம

வித்யையின் அருகிற் சொன்னவை ப்ரம்மவித்யைக்கே சேரு மென்றது பூர்வபக்ஷம். ஸித்தாந்தமாவது—அதர்வவேதோபநிஷத்தின் தொடக்கத்தில், 'உடலிலுள்ள சுக்ரதாதுவைப் பிரித்தெடு, ஹ்ருதயத்தைப் பிளந்தெடு' என்று சொல்லப்படுவதால் அது சத்ருவைக் கொள்வதாகிற அபிசாரகர்மத்திற்கே அங்கமாகும். ஐதரேயத்தில் தொடங்கப்பெற்ற மஹாவ்ரதமென்றது த்வாதசாஹயாகத்திற்கு அங்கமாகவே விதிக்கப்பட்டுள்ளது. இப்படி வித்யைக்குச் சேராத விஷயங்களானதால் வித்யைக்கு அங்கமாகாவே. அதுபோல் தைத்திரீயோபநிஷத்தின் முதலிலுள்ளதும், 'வேதத்தை ஓதப்போகிறேன்; ஓதினது வலிவுள்ளதாகுக' என்ற பொருளுடையதாகையால் அத்யயனத்திற்கே சேர்வதாம்; வித்யாங்கமன்று. (25)

### (11) ஹாந்யதிகரணம்

**ஹாநௌ து உபாயநசப்தசேஷத்வாத் குசா-ச்சந்தஸ்-ஸ்து-த்யுபகாநவத் தநுக்தம். 3-3-26.**

வித்யையை யனுஷ்டித்தவனுக்குக் கடைசரீரத்தைவிடும் போது புண்யபாபங்களை விடுவதும், விடப்பட்டவற்றிற்கு வேறிடத்தில் புகுதலும் இரண்டும் ஒருபநிஷத்தில் சொல்லப்பட்டன. ஒன்றில் விடுவது மாத்திரம்; ஒன்றில் புகுதல் மட்டும். உபாஸனம் செய்கின்றவர் எல்லோருக்கும் இவை கடைசியாக நடக்கின்றவையே. ஆகிலும் ஒவ்வொன்றை மட்டும் ஒவ்வோரிடத்திற் சொன்னதால், எங்கு எது சொல்லப்பட்டதோ அதை மட்டும் அங்குச் சிந்தித்தால் போதுமென்கிறது பூர்வபக்ஷம். ஸித்தாந்தமாவது—புண்யபாபங்களை விடுவது முக்கியமானது. விடப்பட்டவை எங்குச் சென்றன என்பதை விவரிக்கப் புகுமிடமும் சொல்லப்பெற்றதாகையால் புகுதலைச் சொல்வதென்பது விடுதலைச் சொல்லும் பாகத்திற்கு அங்கமானது. ஆகையால் விடுதலென்பது எல்லோரும் சிந்திக்கவேண்டுவதாம். ஓரிடத்தில், "புண்யபாபங்களைத் தள்ளிவிடுகிறான்; அவனது பிள்ளைகள் அவன் சொத்தைக் கொள்ளுகிறார்கள்; சினேகிதர்கள் அவனது நல்வினைகளை; த்வேஷிகள் தீவினைகளை" என ஓதப்பெற்றதால் விடுதலும் சேர்தலும் த்யானிக்கப்படுகிறவண்ணம் எல்லாவிடத்திலும் ஆகுக. இதற்குக் கர்மகாண்ட விஷயங்கள் பல உதாரணமாக்கப் பெறும்.

அவையாவன—குசை, வேதம், ஸ்தோத்ரம், பின்பாட்டு என்றவையாம். இவற்றின் விரிவாவது—குசையாவது ஒருவித முளை. அது யாகத்திலே ஸ்தோத்திரத்தில் உபயோ

கப்படும்போது மந்த்ரங்களை எண்ணுவதற்காகவாம். அது மரத்தினால் செய்யப்பட்டதென்று பொதுவாக ஓரிடத்தில் சொல்லிற்று; அத்திமரத்தினாலானவை என்று வேறிடத்தில். இவ்விரண்டு வாக்யமும் ஒன்றாக்கப்படும். ஓரிடத்தில் தேவாஸுரர்களைச் சார்ந்த வேதங்களைச் சொல்ல வேண்டுமென்றது;இன்னுமோரிடத்தில்,'தேவர்களைச்சார்ந்தன முன்னமாகுக' என்று, சொல்லுவதில் ஒருமுறையைச் சொல்லிற்று. அவ்விரண்டும் சேரும். ஓரிடத்தில், ஸோம ரஸத்தை வைக்க இருக்கும் பாத்திரங்களான க்ரஹங்களி லொன்றான ஷோடசியென்பதைச் சார்ந்த ஸ்தோத்ரத்தை, ஹிரண்யத்துடன் தொடங்குவன் என்றது, வேறிடத்தில், 'பாதிசூரியன் தெரியும்போது' என்று அதற்குக் காலத்தைச் சொல்லிற்று. அவ் விரண்டு வாக்யங்களும் சேரும். ஓரிடத்தில் ரித்விக்குகள் பாடவேண்டு மென்றது, அத்வர்யு பாடக் கூடாதென்றது மற்றோரிடத்தில். அங்கும் அவை சேரும். அவ்வாறு விடுதலைப் பற்றிய வாக்யமும் புகுதலைப் பற்றியதும் சேருமென்றதாம். (26)

(12) ஸாம்பராயாதிகரணம்

ஸாம்பராயே தர்த்தவ்யாபாவாத் ததா ஹ்யந்யே. 3–3–27.

புண்ய பாபங்களை விடுவது சிந்திக்கப்படு மெங்குமென்றார் கீழ். எப்போது அவற்றை விடுகிறானென்பதை இங்கே தெளிவிக்கிறார். பராயமாவது மரணம். ஸம்பராயமாவது கடைசியாக உடலை விடுவது. அதுவே ஸாம்பராயமுமாம். புண்யபாபங்களால் அடையப்படவேண்டியது மேலே இல்லையாகையால் உபாஸகன் தான் கடைசியாக தேஹத்தை விடுங்காலத்திலேயே புண்யபாபங்களை விடுகிறான். 'அவனுக்கு அவ்வளவே தாமதம், எவ்வளவுவரையில் உடலை விடாமலிருக்கிறானோ' என்று வேதம் சொல்வதாலென்க.

பூர்வபக்ஷி சொல்வதாவது, 'பாபத்தை யுதறிவிட்டு சரீரத்தையும் விட்டு' என்ற வாக்யம் உடலை விடும்போது விடுவதைச் சொல்லும். 'விரஜை யென்ற நதிக்கு வந்து சேருகிறான், புண்யபாபங்களை விடுகிறான்' என்ற வாக்யம் வழியில் பாபங்களை விடுவதைச் சொல்லும். ஆகையால் ஒரு பாகம் முதலிலும், மற்றது பிறகும் விடப்படும். முழுமையும் முதலிலேயே விடப்பட்டால் பிறகு அர்ச்சிராதிமார்க்கத்தில் செல்வதுதானெங்ஙனமாமென்றதாம். ஸித்தாந்தி சொல்வது—ப்ரம்மத்தை யடைவது வித்யையின் பலன். அது தவிர புண்யபாபபலன் ஒன்றும் இவன் அனுபவிக்கப்போ

கிறதில்லை யாகையாலே அதற்கான கர்மங்களெல்லாம் கழிந்தேவிடும். 'அர்ச்சிராதிமார்க்கத்திலே போக ஸூக்ஷ்மசரீரம் வேண்டுமே அதனை யுண்டாக்கிவைக்கக் கர்மம் வேண்டாவோ' என்னில், வேண்டா. வித்யையானது ஸூக்ஷ்மசரீரத்தை உண்டுபண்ணுவதன்றுஹலும் ஸ்தூல சரீரம் கர்மங்கள் கழிந்தபோதே தொலைந்துவிட்டாலும் அர்ச்சிமார்க்கத்தினல் போவதற்காக வித்யையே ஸ்த்தூல சரீரத்தின் சிறிது அம்சத்தை நிறுத்திக்கொள்கிறதென்ற தாம். ஆகையால் தேகம் போகும்போதே எல்லாம் கழிகின்றன வென்றே உபாஸகன் சிந்தனை செய்யவேண்டும். (27)

ச்சந்தத: உபயாவிரோதாத். 3–3–28.

விரஜா நதி சென்ற பிறகு புண்யபாபங்களை விடுவதாகச் சொன்ன வாக்யத்திற்கு என்ன கதி என்னில்—

இஷ்டப்படி பொருள் கொள்ளலாம்; இரு வாக்யங்களோடு விரோதம் கூடாதாகையால். "குதிரை உரோமங்களை யுதறுமா போலே பாபத்தை யுதறி உடலையும் விட்டு" என்றதும், "உடலினின்று விடுமளவே தாமதம்" என்றதுமான இரண்டு வாக்யங்களோடு முரண்படாமைக்காக, "தேவயானமார்க்கத்திற்கு வந்து...விரஜைக்கு வருகிறுன், புண்யபாபங்களை உதறுகிறுன்" என்றவிடத்திலே புண்ய பாபங்களை விடுவதைச் சொல்லும் வாக்கியத்தை 'தேவ யானமார்க்கத்திற்கு' என்ற வாக்கியத்திற்கு முன்னே வைத்துப் பொருள் கொள்ளவேண்டும். (அர்த்தக்ரமத்தை யாதரித்துப் பாடக்ரமத்தை விடுவதென்பது ப்ரசித்தமாயிற்றே). (28)

கதே: அர்த்தவத்த்வம் உபயதா அந்யதா ஹி விரோத: 3–3–29.

கேள்வி—சில கர்மங்களை முன்னும் சிலவற்றைப் பின்னுமாக இருவகையாக விடுவதென்றால்தான், அர்ச்சிராதிமார்க்கத்தினல் செல்லுகிறுனென்ற வாக்யம் பொருள் உள்ளதாகும். ஸூக்ஷ்மசரீரத்திற்கு வேண்டும் கர்மமும் முன்னமே கழிந்தால் அதுவு மில்லையாகையாலே இவன் செல்லமுடியாதாகையால் தேவயானகதியைச் சொல்லும் வாக்கியத்தோடு முரண்படுமே. (29)

ஸித்தாந்தியின் கருத்து வெளியிடப்படுகிறது.

உபபந்ந: தல்லக்ஷணார்த்தோபலப்தே: லோகவத். 3–3–30.

தேவயாநமார்க்கம் கூடும். கர்மங்கள் கழிந்தாலும் கர்

மத்தினல் பெறப்படும் சரீரம் போன்று கார்யத்தை ஸாதிக்க வல்லதாய் கர்மமில்லாமலே பெறப்படும் சரீரமும் ப்ரமாணங்களால் அறியப்படுவதால். மோக்ஷம் அடைந்தவனைப் பற்றி, 'கர்மவச்யனுகாமல் ஸ்வராட்டாகிருன். ஸர்வலோகங்களிலும் இஷ்டப்படி ஸஞ்சரிக்கிருன்' என்கிறதே. உலகிலும் அரசனை யாச்ரயித்தவனுக்கு ஆச்ரயிப்பதற்கு முன்னே இருந்த வஸ்துக்களுக்கு மேலான வாழ்க்கைக்கு வேண்டும் வஸ்துக்கள் கிடைக்கின்றனவே. அது போலாம். ஸர்வஜ்ஞனுய் ஸத்யஸங்கல்பனுன பிரானை உபாஸிப்பவருக்கு எல்லாம் கூடும். (30)

**யாவததிகாரம் அவஸ்த்திதி: ஆதிகாரிகாணும். 3–3–31.**

ப்ரம்மத்தை உபாஸிப்பவருக்கு உடலை விடும்போதே எல்லா வினைகளும் போய்விடுமோ? ஜ்ஞானிகளான வஸிஷ்டாதிகள் கர்மபலனுக வேறு தேஹம் பெற்றதும், புத்ராதிகளின் பிறப்பு இறப்பு முதலானவற்ருல் ஸுகதுக்கங்களை யனுபவித்ததும் ப்ரமாணஸித்தமல்லவோ எனில்—

ப்ராரப்தகர்மபலனை யனுபவிக்க இழிந்தவர்களுக்கு அதுவரையில் இங்கு இருப்பாம். அதற்குட்பட்டுப் பல பிறவிகளும் மற்று மெல்லாம் இருக்கும். புண்யபாபங்கள் எல்லாம் விடப்படு மென்று கீழே சொன்னது ப்ராரப்தத்தின் முடிவான சரீரத்தை விடும்போதே யல்லது அதற்கு முன்சரீரத்திலன்றென்க. (31)

(13) *அநியமாதிகரணம்*

**அநியம: ஸர்வேஷாம் அவிரோத: சப்தாநுமாநாப்யாம். 3-3-32.**

*கீழ்ச்சொன்ன கதி—அதாவது – அர்ச்சிராதி மார்க்கம்,* எந்த வித்யையில் அந்த மார்க்கத்தைப் பற்றினது சொல்லப்படுகிறதோ அந்த வித்யையிலே இழிந்தவர்களுக்கு மட்டுமா அல்லது ஞானிகள் எல்லோருக்குமா என்பது விசாரிக்கப்படுகிறது—மற்றவர்க்கும் அதே மார்க்க மென்பதற்குப் ப்ரமாணமில்லையாகையாலே சிலர்க்குமட்டுமே யென்கிருன் பூர்வபக்ஷி. பஞ்சாக்னிவித்யையில், 'இதனை யவர் அறிந்துளரோ, மற்றும் அரண்யத்தில் ச்ரத்தையுடன் ப்ரம்மத்தை யுபாஸிப்பவர் யவரோ, எல்லோரும் அர்ச்சிராதிமார்க்கம் புகுகின்றனர்' எனவுளதே யென்னில்—அதுவும் அர்ச்சிராதி மார்க்கத்தைக் குறித்திருக்கும் உபகோஸலவித்யை முதலான வற்றைமட்டுமே கருதும். இங்ஙனமில்லையாகில்—பஞ்சாக்னிவித்யையிற் சொன்னதே போதுமாயிருக்க உபகோஸலாதிவித்யைகளில் அதை யேன் ப்ரஸ்தாவிக்கவேண்டு

மென்றது பூர்வபக்ஷியின் கருத்து. ஸித்தாந்தமாவது—பஞ்சாக்னிவித்யையிலுள்ள வாக்யத்தின் ஸ்வாரஸ்யத்தை பாதிக்கலாகாது. ஆகையால் எல்லோருக்கும் அதுவே மார்க்கம். ப்ரம்மவித்யையைப் புகழ்ந்து வரும்போது சொல்ல வேண்டியிருந்ததால் உபகோஸலவித்யையிற் சொன்னது. அதனுல் வேறு வித்யைக்கு இது இல்லையெனலாகாது. ஆகையால் இன்னுருக்குதான் என்று ஸங்கோசப்படுத்துவதில்லாததாய் இது எல்லாருக்குமேயாம்; ச்ருதியும், கீதை போன்ற வாக்யமும் பொதுவாகவே யிருப்பதா லப்போதே அவற்ருேடு முரண்படாததாம். (32)

(14) அக்ஷரத்யதிகரணம்

அக்ஷரதியாம் து அவரோத: ஸாமாந்ய-தத்பாவாப்யாம் ஔபஸதவத் தத் உக்தம். **3-3-33.**

அர்ச்சிராதிமார்க்கம் பொதுவானது போல், அக்ஷரவித்யையிற் சொல்லப்பட்ட அம்சமும் பொதுவாகுமென்கிறது. ப்ருஹதாரண்யகத்திலே அக்ஷரவித்யையில், 'இந்த அக்ஷரத்தை அந்தணர்கள், பெரிதன்று, சிறியதன்று, குட்டையன்று, நீண்டதன்று என்றவாறு சொல்லுகின்றனர்' எனவுளது. முண்டகோபநிஷத்திலும், 'பரவித்யையினுலே யடையப்படுகிறது இந்த அக்ஷரம். இந்திரியங்களால் அறிய முடியாதது, காமேந்திரயத்திற்குப் பிடிபடாதது, கோத்ரம் நிறம் என்றவை யெல்லாம் இல்லாதது' என்னப்பட்டது. இந்த பெரிதாகாமை முதலான குணங்கள் இந்த வித்யையில் மட்டுமா, எல்லா ப்ரம்மவித்யைகளுக்கும் பொதுவா என்று விசாரிக்கப்படுகிறது. ஒரு வித்யையிற் சொன்னது மற்ருெரு வித்யைக்கு எவ்வாறு கூடுமென்கிருன் பூர்வபக்ஷி. ஸித்தாந்தமாவது—ப்ரம்மம் எல்லா வித்யைக்கும் ஸமானமானதால் இந்த தர்மங்கள் பிரம்மத்தின் தன்மையானதால்அக்ஷரத்திற்குச் சொல்லப்பட்ட இந்த தர்மசிந்தனைகளை எல்லாவித்யைகளும் க்ரஹிப்பதாம். கீழ் ஆனந்தாத்யதிகரணத்திலே ஸ்வரூபநிரூபக தர்மங்களானபடியாலே ஆனந்தமயவித்யையிற் சொன்ன ஆனந்தத்வாதிகள் எல்லாவித்யைகளுக்கும் பொது என்ருேம். ஸ்ரூபநிரூபகதர்மங்கள் வேறு வஸ்துக்களைக்காட்டிலும் தம் தர்மியை வேருக்கிக் காண்பிக்கும். ஆனந்தத்வாதி தர்மங்களைக்கொண்டு ப்ரம்மத்தையறியும்போது அசேதனங்களைக்காட்டிலும் வேருக அதை யறியமுடிந்தாலும் சேதனங்களைக்காட்டிலும் வேருகஅறியமுடியவில்லை. சேதனங்களுக்கும் ஆனந்தத்வாதிகள் உளவாதலின். ஆகையால் அவற்றினும் வேருகப் ப்ரம்மத்தை யறிவதற்கு இங்குச் சொன்ன

தர்மங்களைக்கொண்டும் ப்ரம்மத்தை யறியவேண்டும். இந்த அஸ்தூலத்வாதி தர்மங்களையெல்லாம் சொன்னது அமலத்வம் என்றதைச் சொல்வதற்காக எனக் கொள்க. ஜீவர்கள் துக்கானுபவம் செய்யும்படி ப்ரம்மத்திற்குப் பராதீனர்களானதால் அமலர்ாகமாட்டார். ஆக இந்த அஸ்த்தூலத்வாதிகளும் அமலத்வமாகி ஸ்வரூபநிருபக தர்மங்களிற் சேர்ந்தபடியால் எல்லா வித்யைகளும அஸ்தூலத்வாதி தர்மங்களின் சிந்தனைகளை உட்கொள்ளும்.

இதற்கு த்ருஷ்டாந்தம் ஔபஸதம்—உபஸத்து என்ற தர்மத்திற்கு அங்கமான மந்த்ரம். இந்த உபஸத்தென்பது யஜுர்வேதத்திலே விதிக்கப்பட்டது. இதற்குள்ள இந்த மந்த்ரம் ஸாமவேதத்தில் படிக்கப்பட்டது. யஜுர்வேதத்தில் விதித்த கர்மாவுக்கு அங்கமான மந்திரத்திற்கு ஸ்வரமானது வல்லிசையன்றி மெல்லிசையாம். ஆக மந்த்ரம் ஸாமவேதத்தைச் சேர்ந்ததானலும் உபஸத்து யஜுர்வேதக்ரியையானதால் இந்த மந்த்ரம் அதற்கு அங்கமானதால் மெல்லிசையைக் கொள்வதுபோல் இங்கும் அஸ்தூலத்வாதிஜ்ஞானங்களுக்கு அங்கியான ப்ரம்மக்ரஹணம் ஸர்வவித்யா ஸாதாரணமானதாலும் இவை அதற்கின்றியமையாதவை யானதாலும் இந்த அறிவுகளுக்கு ஸர்வவித்யாஸம்பந்தமுண்டென்றவாறு. ஸாமவேதத்திலிருந்தாலும் அதற்கு அதன் ஸ்வரமாகத் தோன்றின வல்லிசை வாராதென்பது பூர்வமீமாம்ஸையிலே சொல்லப்பட்டது. (33)

**இயத் ஆமநநாத். 3–3–34.**

முன்சொன்ன ஆனந்தத்வாதிகளும் இப்போது சொன்ன அஸ்த்தூலத்வாதிகளான அமலத்வமும் ஸ்வரூப நிரூபக தர்மங்கள். இவ்வளவால் ப்ரம்மவிஷயத்திலே நன்கு பாகுபாட்டுடன் அறிவு நமக்கேற்பட்டுவிடுவதால் இவ்வளவேயாம்; 'ஸர்வ கர்மா ஸர்வகந்த:' என்றவாறு சொன்ன மற்ற தர்மங்களெல்லாம் ஸ்வரூபநிரூபகங்களல்ல. (34)

(*15*) *அந்தராபூதக்ராமாதிகரணம்*

**அந்தரா பூதக்ராமவத்-ஸ்வாத்மந: அந்யதா பேதாநுபபத்தே: இதி சேத் ந உபதேசவத். 3–3–35.**

உஷஸ்தர் யாஜ்ஞவல்க்யரை ஒரு கேள்வி கேட்டார். அதற்கு அவர், 'ப்ராணாதிகளைக்கொண்டு ப்ராணநாதிவ்யாபாரத்தைச் செய்கின்றவன் உனக்கு ஆத்மா எங்கும் உள் இருப்பவன்' என்று விடையளித்தார். அதே கேள்வியை மீண்டும் கஹோளர் கேட்டார். அதற்கு அவர் முன்சொன்னதையே சொல்லாமல், 'பசி தாகம் சோகம் மோஹம் மூப்பு

இறப்பு இவற்றைக் கடந்தவன் உனக்கு ஆத்மா எங்கும் உள் இருப்பவன்' என்றார். இங்கு உஷஸ்த வித்யையும் கஹோளவித்யையும் வேறு, ஒன்று என்று விசாரிக்கப்படு கிறது. விடை வெவ்வேறு விதமா யிருப்பதாலும் முதலிற் சொன்ன ப்ராணநாதி வியாபாரங்கள் ஜீவனுடையவை யான தாலும் முதல் வித்யை ஜீவவித்யை, இரண்டாவது ப்ரம்ம வித்யை என்றது பூர்வபக்ஷம். ஸித்தாந்தமாவது—அந்தரா= இடையில் உஷஸ்தருடைய கேள்விக்கும் கஹோளருடைய கேள்விக்கும் இடையிலுள்ள யாஜ்ஞவல்க்யவாக்யமானது பூதக்ராமவானை — பஞ்சபூத வர்க்கத்தையுடையவனை ஜீவாத்மாவைப் பற்றியது. இல்லாவிடில் மறுமொழி வெவ் வேறாகமாட்டா என்னவேண்டா. ஸத்வித்யோபதேசத் திலே போலே ஒரே விஷயத்தில் மறுமொழி வேறாகலாமே யென்றதாம். 'எங்குமுள்ள ஸாக்ஷாத்ப்ரம்மம் எதுவோ, எல்லாவற்றிற்கும் ஸூக்ஷ்மம் எதுவோ, அதைச் சொல்' என்ற கேள்வியே இருவரும் கேட்டிருக்க மறுமொழி ஒன்று ஜீவனைப் பற்றினதாகாது. அவன் ஸர்வாந்தரனல்லனே— என்று ஸித்தாந்தியின் கருத்தாம். இதன்மேலும் பூர்வபக்ஷி நினைக்கிறான் அந்தரா=ஸர்வாந்தரவிஷயமான உஷஸ்தரு டைய கேள்வி ஜீவாத்மாவைப் பற்றியே; ஜீவாத்மாவும் பஞ்ச பூதமயமான சரீரம், பதினொரு இந்திரியங்கள், ஐந்து ப்ரா ணன்கள் என்றவாறான பூதக்ராமமுடையனாதால் ஸர்வ என்றதால் இவற்றைக் கொண்டு ஸர்வாந்தரனாக அவனை வைத்துக்கூறலாமே என்றவாறு. அதற்கும் ஸித்தாந்தி சொல்வதாவது—ஸத்வித்யோபதேசத்திலேபோலே எல் லாக் கேள்விகளும் ப்ரம்மவிஷயமாகக்கூடியன வாயிருக்க வெவ்வேறு வித்யையாக்குவது யுக்தமன்றென்றதாம். ஜீவன் செய்யும் ப்ராணநாதி வியாபாரங்களுக்கும் அவனே மூலகாரணமாகையால் முதலிலும் பரமாத்மாவையே சொன் னதாம். ஜீவனைப் போலல்லன் அவன் என்று அவன்மேன் மையை நன்கு உணர்த்துவதற்காகவே, மீண்டும் கேட்கும் போது, மறுமொழி வேறு மொழிந்ததாம். (35)

வ்யதிஹார: விசிம்ஷந்தி ஹி இதரவத். **3-3-36.**

உஷஸ்தருக்குச் சொன்ன தர்மத்தைக் கஹோளரும், அவருக்குச் சொன்னதை இவரும் சேர்த்துக்கொள்ளவேண் டும்; ஒரு ஸர்வாந்தரப்ரம்மத்திற்கே யாஜ்ஞவால்க்யங்கள் இந்த விசேஷணங்களை யிடுகின்றனவே. ஸத்வித்யையில் ஒவ்வொரு மறுமொழியிற் சொன்ன விசேஷத்தையும் ஸத் என்ற ப்ரம்மத்திற்கே ச்வேதகேது கொள்வதுபோலாம் இது. (36)

ஸத்வித்யையிலும் வெவ்வேறு உபாஸ்யமாய் வித்யா பேத மிருக்கட்டுமே யென்னவேண்டா—

**ஸா ஏவ ஹி ஸத்யாதய: 3–3-37.**

முன்னே ஸ்ருஷ்டிக்கு ஸங்கல்ப்பம் செய்ததாகச் சொல்லப்பட்ட ஸத் என்ற தேவதையே எங்கும் கொள்ளப் படும். ஸத்யத்வாதிகுணங்களே, "ஐததாத்ம்யம் இதம் ஸர்வம், தத் ஸத்யம், ஸ ஆத்மா, தத் த்வம் அஸி" என்ற வாக்யத்தை ஒவ்வொரு மறுமொழியிலும் படித்துக் கூறப்பட்டுளவே. (37)

(*16*) *காமாத்யதிகரணம்*

**காமாதீ இதரத்ர தத்ர ச ஆயதநாதிப்ய: 3–3–38.**

இரண்டிடங்களிலுள்ள தஹரவித்யை வெவ்வேறு, ஒன்று என விசாரிக்கப்படுகிறது. சாந்தோக்யத்தில், "ப்ரம்மத்திற்குப் பட்டணமான இந்த சரீரத்திலே தாமரைப் பூப்போன்ற சிறிய இடமுண்டு. அதனுள் ஆகாசமென்ற பரமாத்மா உளன், அங்கிருக்கும் அபஹதபாப்மத்வம், ஸத்ய காமத்வம் முதலான குணங்களையும் அவனையும் உபாஸிக்க வேண்டும் என்றோதப்பெற்றது. ப்ருஹதாரண்யகத்தில், 'ஹ்ருதயத்திலே உள்ள ஆகாசத்திலே சயனித்திருக்கு மவன் ஸர்வத்தையும் வசமாக்கி நியமிக்கிறவன்' என்று உபாஸிக்கப்படவேண்டியவனைச் சொல்லிற்று, முதலில் ஆகாசசப்தத்தினல் சொல்லப்பட்ட வஸ்துவுக்கு உபாஸனம். அது ஸத்யகாமத்வாதிகுணங்களையுடையது, மற்ருென்றில் ஆகாசசப்தத்தால் சொல்லப்பெற்ற அந்த வஸ்துவினுள் இருக்கும் வேருெருவனுக்கு உபாஸனம். அவனுக்கு வசித்வம் ஈசானத்வம் முதலியன குணங்கள். ஆக வித்யைகள் வேறு என்றது பூர்வபக்ஷம். ஸித்தாந்தமாவது—ஸத்யகாமத்வாதி குணங்கள் ப்ருஹதாரண்யகத்திலும் சாந்தோக்யத்திலுமுள்ளன. ஹ்ருதயத்தை இடமாகவுடைத்தாயிருக்கை இரண்டுக்கு முண்டாகையாலும், ஸத்ய ஸங்கல்ப்பத்வம் என்ற குணத்தின் விரிவேயாம் வசித்வாதிகளென்று முன்னமே சாண்டில்யவித்யாவிசாரத்திலே சொல்லியிருப்பதால் இரண்டிடங்களிலும் ஸத்யஸங்கல்ப்பத்வமுமுண்டாகையாலும் ஒன்றே ஈரிடங்களிலும் சொல்லப் படுவதால். 'ஆகாயம்' 'ஆகாசத்திலிருப்பவன்' என்றதைக் கொண்டு வேறென்ன முடியாது. முதலில் ஆகாசம் நன்கு ப்ரகாசிக்கும் பரமாத்மா. பின்வாக்யத்தில் ஆகாசமாவது

ஹ்ருதயாகாசமான வானமென்னலாமே. ப்ரம்மப்ப்ராப்தியாம் பலனையும் இரண்டிடங்களிற் சொல்லியிருக்கின்றது. (38)

**ஆதராத் அலோப:** **3-3-39.**

சாந்தோக்யத்திலே ஸகுணப்ரம்மம் உபாஸ்யமாகத் தெரிகிறது, குணங்களைப் பிரித்தெடுத்து உரைத்ததால். ப்ருஹதாரண்யகத்திற்கு குணங்களைச் சொல்வதில் நோக்கில்லை; 'இங்குப் பல வஸ்துக்களில்லை. ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை' என்று ஒன்று மின்றியிருக்கும் ஆத்மாவையே உபாஸிக்கவேண்டுமென்று நிர்குணத்தைச் சொல்வதால். ஆகையால் வித்யைகள் வேறென்னில்—

வேதம் தவிர வேறு ப்ரமாணத்தினுல் அறியமுடியாத வசித்வாதிகளை மிக்க ஆதரத்துடன் பலகால் ப்ருஹதாரண்யகம் பகர்வதால் அவற்றைக் கண்ணழிக்கலாகாது. 'நேஹ நாநாஸ்தி' என்பதற்கு ப்ரம்மத்தைவிட்டு ஒரு வஸ்துவும் இல்லையென்பது பொருளாம். 'நேதிநேதி' என்பதற்கு இதர வஸ்துக்களைப்போல் அவன் ஆகான் என்றதே பொருளல்லது நிர்குணம் நிஷ்ப்ரபஞ்சமென்றது பொருளாகாது. (39)

ஸகுணத்தின் உபாஸனத்திற்குப் பலன் மோக்ஷமாகாது; தந்தை, தாய் முதலான பேறுகளைப் பெறுவது அவனுக்குப் பகரப்பெற்றதே. ப்ருஹதாரண்யகத்திற்சொன்ன வித்யைக்கு அபயம் பெறுவதாம் மோக்ஷம் பலன் என்று வேறுபாடு உளதே என்னவேண்டா—

**உபஸ்த்தீதே அத: தத்வசநாத்.** **3-3-40.**

ஜீவன் பரஞ்சோதியை யணுகினபோது அது காரணமாக இவனுக்கு ஸத்யஸங்கல்ப்பத்வாதிகள் தோன்ற அதனுல் இஷ்டப்படி துன்பம், பயம் எல்லாம் சிறிதுமின்றி எங்கும் ஸஞ்சரிப்பதும், தந்தை தாய் முதலான வேண்டுமவற்றையெல்லாம் பெறமுடிவதும் சொல்லப்படுகிறதாகையால் ஈச்வரனுக்குப்போலே முக்தனுக்கும் அவை வருவனவாகையால் ஒன்றும் ஸாம்ஸாரிகபலனுகாது. ஆகையால் இரண்டும் ஒரே ஸகுணதஹரவித்யையாம். (40)

*(17) தந்நிர்த்தாரணுதிகரணம்*

**தந்நிர்த்தாரணுநியம: தத்த்ருஷ்டே: ப்ரதக் ஹி அப்ரதிபந்த:ப்பலம்.** **3-3-41.**

தஹரவித்யையில் பலன் வேறில்லையென்றோம். உத்கீதோபாஸனத்திற்கு உத்கீதபலனைக்காட்டிலும் வேறு பலன் உண்டெனப்படுகிறது—

சாந்தோக்யத்திலே உத்கீதத்தின் பாகமான ப்ரணவத்தை யுபாஸிக்கவேண்டும் என்று உத்கீதவித்யை ஓதப்பட்டது. உத்கீதமென்பது யாகம் செய்யும்போது சில மந்த்ரங்களிற் செய்யும் ஸாமகானத்திலொரு பாகம். அது யாகத்தைச் சார்ந்ததானபடியாலே யாகத்தின் பலனுக்காகவே அதன் அங்கங்களெல்லாமென்கிற கணக்கிலே யாகபலனே அதற்குப் பலன்; வேறில்லை. உத்கீதத்தின் உபாஸனமும் யாகத்திற்கு அங்கமான உத்கீதத்தைச் சார்ந்ததானபடியாலே அவ்வுபாஸனைக்கும்அப்பலன்தானு, அல்லது வேறு பலனுண்டா என்பது விசாரம். இல்லை யென்பது பூர்வபக்ஷம். 'எதை வித்யையைக் கொண்டு ச்ரத்தையுடன் இரஹஸ்யஜ்ஞானத்துடன் செய்கிருனே, அது மிக்க வீர்யமுள்ளதாகிறது' என்ற வாக்யம் வித்யைக்குப் பலன் வெகு வீர்யமுடையதாகை என்று சொல்வது போலிருக்கிறது. இபபடிப் பலன் தோன்றுமிடத்தில் சில விடங்களிலே பலனைக் கொள்வதில்லை. உதாரணம் பர்ணதை; அதாவது பலாசமரத்தால் செய்யப்பட்டிருக்கை. ஹோமத்திற்கு ஜுஹூ என்றதொரு பாத்ரத்தைச் சொல்லி அது பர்ணமாயிருக்கவேண்டு மென்றும் சொல்லி, 'அத்தகையதைப் பெற்றிருக்கின்றவன் அபகீர்த்தியைப் பெறுகிருனல்லன்'என்று பலனைச்சொல்லியிருந்தாலும் அது வெறும்துதி, பலனன்று என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. சிலவிடத்தில் கொள்வதுமுண்டு. உதாரணம்: கோதோஹனம்–அதாவது பசுவைக் கறக்கக் கொள்ளும் பாத்திரம். ப்ரோக்ஷணத்திற்காகத் தண்ணீரைச் சமஸபாத்திரத்திலே கொள்ளவேண்டுமென்று முன்னே சொல்லி, பசு வேண்டுமென்றுசைப்படுகிறவன் கோதோஹன பாத்திரத்திலே கொள்ளவேண்டும் என்றவிடத்தில் பாத்ரம் யாகாங்கமான ப்ரோக்ஷணத்திற்குத் தண்ணீர் கொள்வதற்காகவாலும் கோதோஹனத்திற்குத் தனிப்பலன் பசுவைப் பெறுதல் என நிர்ணயிக்கப்பட்டுளது. ஆக உத்கீதோபாஸனம் பர்ணதை போலவா, கோதோஹனம் போலவா என்ற விசாரத்தில் பர்ணதையைப் போலவே என்ருன் பூர்வபக்ஷீ. ஏனெனில், பர்ணதா வாக்கியத்திற்போலவே இதற்கு வீர்யச்சிறப்பைச் சொல்லும் வாக்யமுமிருக்கிறது. அதாவது — விதிவாக்யமாக இல்லை. ஸ்துதிவாக்யம் போலிருக்கிறதாகையால்.

ஸித்தாந்தமாவது—'வித்யையுடையவனும் கர்மாவைச் செய்கிருன், வித்யை யில்லாதவனும் செய்கிருன்' என்ருெரு வாக்யமிருப்பதால் உத்கீதோபஸனமில்லாமலும் கர்மாவைச் செய்யலாமென்று தெரிவதால் இதற்கு கர்மாவுக்கு

ஸ்வபாவமாயுள்ள பலனைக் காட்டிலும் வேறு பலன் என ஏற்படுவதால் அப்பலன் என்னவென ஆராயும்போது அங்கே சொல்லப்பெற்ற வீர்யச் சிறப்பையே அதன் பலனு கக் கொள்வோம். ஆகையால் உத்கீதோபாஸனம் எப்போது மிருப்பதென்பதில்லை. வீர்யச்சிறப்பன்றோ இதற்குத் தனிப்பலன். வீர்யச் சிறப்பாவது அப்ரதிபந் தம்—கர்மாவின் பலன் வேறொன்றால் தடைப்படாமலிருக் கை. வித்யையின்றி கர்மானுஷ்டானம் செய்தால் பலன், வேறுப்ரபலகர்மத்தினல் தடைப்பட்டுத் தாமதிக்கும்படியு மாம். வித்யை யுண்டானல் தடையில்லை யென்றபடி. (41)

*(18) ப்ரதாநாதிகரணம்*

**ப்ரதாநவத் ஏவ தத் உக்தம்.** **3-3-42.**

முன் தஹரவித்யையில் குணியான பரமாத்மாவுக்கும் குணங்களுக்கும் உபாஸனம் உண்டென்று சொன்னதின் மேல் மற்றொரு விசாரம். பரமாத்மாவையும் இந்த குணங்க ளையுமுபாஸிப்பவனுக்கு எங்கும் இஷ்டப்படி ஸஞ்சாரம் பல னகச் சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு குணங்களை யுபாஸிக் கும்போது பரமாத்மாவையும் சேர்த்து உபாஸிக்கவேண்டு மா என்ற விசாரமாம் அது. பரமாத்மாவைத் தனியே த்யா னித்ததே போதுமாகையால் குணங்களை த்யானிக்கும்போது பரமாத்மாவின் த்யானம் வேண்டுவதில்லை யென்பது பூர்வ பக்ஷம். ஸித்தாந்தமாவது—'ஆத்மா அபஹதபாப்மன், விசோகன், விம்ருத்யு....ஸத்யஸங்கல்ப்பன்' என்ற வாக்யத் தின்படியாம் உபாஸனம். பரமாத்மா ஒருவனே யாகிலும் அந்தந்தகுணத்தோடு சேர்க்கையால் உபாஸநாகாரத்தில் பேதம் உண்டு. இதற்கு உதாரணம் ப்ரதானம், அதாவது— இந்திரனைப் பற்றிய யாகங்கள் மூன்று சேர்த்து அனுஷ்டிக் கப்படுகிறன. ஒரு யாகத்தில் ராஜாவான இந்திரன்தேவதை, மற்றொன்றில் அதிராஜனன இந்திரன், வேறொன்றில் ஸ்வ ராஜாவான இந்திரன். அங்கு இந்திரன் ஒருவனனாலும் குணம் வெவ்வேருனபடியாலே உத்தேசிக்கப்படும் தேவதா காரம் வேருவதால் எல்லா ஹவிஸ்ஸையும் ஒன்ருகக் கூட்டாமல் தனித்தனியே கொடுக்கவேண்டும். இப்படி ஸங்கர்ஷகாண்டத்தில் முடிவு செய்யப்பட்டிருக்கிறது. (பூர்வ மீமாம்ஸையில் 12க்கு மேல் 13, 14, 15, 16 அத்யாயங்கள் ஸங்கர்ஷமெனப்படும்.) அது போலாமிங்கும். (42)

*(19) லிங்கபூயஸ்த்வாதிகரணம்*

**லிங்கபூயஸ்த்வாத் தத் ஹி பலீய: தத் அபி.** **3-3-43.**

தைத்திரீயத்திலும் தஹரவித்யை ஓதப்பட்டுளது. அதன்மேல் நாராயணாநுவாகம். அங்கே 'ஸஹஸ்ர சீர்ஷம்' ஆயிரம் தலையுடையவனென்றவாறு குணங்கள் கூறப்பட்டன. இந்த அநுவாகம் தஹரவித்யைக்கு வேண்டும் ஆகாரங்களையே சொல்வதா, பொதுவா என்று விசாரிக்கப்படுகிறது, தஹரவித்யைக்குச் சேர்ந்தாற்போலிருப்பதாலும் நாராயணாநுவாகத்தின் கடைசியிலும் ஹ்ருதயபுண்டரீகத்தில் பரமாத்மா இருப்பதைச் சொல்வதாலும் அதனைச் சேர்ந்ததே முழுதுமென்றது பூர்வபக்ஷம். ஸித்தாந்தமாவது— தஹரவித்யையை மட்டும் சார்ந்ததன்று, எல்லா வித்யைகளுக்கும் பொதுவானதென்பதற்கு ஸாதகமாக அமைந்துள்ள வாக்யங்கள் பலவானதால் இது பொதுவாம். இது ஸஹஸ்ரசீர்ஷன் நாராயணன், பரப்ரம்மம் நாராயணன், பரதத்துவம் நாராயணன், பரமாத்மா நாராயணன், பிரமன் நாராயணன், சிவன் நாராயணன், அக்ஷரமான முக்த தத்துவம் நாராயணன் என்று எங்கும் நாராயணத்வத்தை விதிக்கிறது. அதனால் அந்தந்த சொற்களை யெடுத்து மோக்ஷ வித்யையைச் சொன்னவிடங்களிலெங்கும் நாராயணனையே உபாஸிக்கவேண்டுமென்று சொன்னதாயிற்று. மேலே தஹரஹ்ருதய ப்ரஸ்தாவம் இருக்கிறதே யென்னில், அதுவும் கூடும். தஹரவித்யையிலும் இவனே உபாஸிக்கப்படுவதால். இந்த அநுவாகத்திற் சொன்னது வாக்யப்ரமாணத்தாலே எல்லா வித்யைக்கும் ஸம்பந்தப்பட்டதேயாகுமல்லது ப்ரகரணப்ரமாணத்தினாலே தஹரவித்யைக்கு மாத்திரமாகாது. ச்ருதி, லிங்கம், வாக்யம், ப்ரகரணம், ஸ்தானம், ஸமாக்யை என்ற ப்ரமாணங்களில் முன்ப்ரமாணம் பின் ப்ரமாணத்தைக் காட்டிலும் ப்ரபலமாயிற்றே. அதுவும் பூர்வ மீமாம்ஸையிலே சொல்லப்பட்டதே. ஸூத்ரத்தில் லிங்கங்கள் பல என்றது வாக்கியங்கள் பலவாகையால். (43)

## (20) பூர்வவிகல்பாதிகரணம்

**பூர்வவிகல்ப: ப்ரகரணாத் ஸ்யாத் க்ரியா மாநஸவத். 3-3-44.**

முன் சொன்னவிடத்தில் ப்ரகரணம் உபேக்ஷிக்கப்பட்டாலும் இங்கு ப்ரகரணம் உபயோகப்படுமென்று ஓரிடத்தில் பூர்வபக்ஷம் செய்யப்படுகிறது—

ப்ருஹதாரண்யகத்திலே அக்நிரஹஸ்யமென்கிற பாகத்திலே பல அக்னிகள் சொல்லப்பட்டன. இங்கு அக்னியாவது வைதிகமான ஆஹவநீயமென்ற அக்னிக்கு ஆதரமாய்ச் செய்யப்படும் ஓரிடம். இது கருடாகாரமாய் அதற்காக ஏற்பட்ட அளவுகள்படி செய்யப்பெற்ற செங்கற்களால்

செய்யக்கூடியதாம். அது இஷ்டகசிதமான அக்னி எனப் படும். இதுபோல் மனச்சித், வாக்சித், ப்ராணசித் என்ற வாறு பல அக்னிகளும் இங்கே சொல்லப்பட்டன. அந்தந்த இந்திரியத்தால் செய்யப்படும் வியாபாரங்கள் பலவற்றை ஒன்ருக்கி அக்னியாக பாவிக்கப்பட்ட அத்திரள்களே அவை களாம். இங்கு விசாரிப்பதென்னவெனில்—இந்த மனச் சித் முதலான அக்னிகளுக்கு இஷ்டகசிதமான அக்னியோடு விகல்பமாக்கி இவைகளும் அதுபோலே காயவ்யாபாரமான க்ருதுவுக்கு அங்கமா, அல்லது இஷ்டகசிதமான அக்னியே அதற்கு அங்கமாக, இவைகளெல்லாம் பாவிக்கப்படுகின்ற படியால் வித்யாமயங்களானபடியாலே வித்யாமயமான க்ருதுவுக்கே அங்கமாம் என்பதாம். வித்யாமயமான க்ரது இங்கே சொல்லப்படாமையால் ப்ரஸித்தமான க்ருதுவுக்கே அங்கமிவை யென்கிருன் பூர்வபக்ஷி. மானஸமான அக்னி வெளிக்ரதுவுக்கு அங்கமாகுமோவென்னவேண்டா. த்வாத சாஹமென்கிற யாகத்திலே ஸோமரஸத்திற்கு ஆதாரங்க ளாக க்ரஹமெனப்படும் வெளிப்பாத்திரம்போலே மானஸ க்ரஹமும் அங்கமாக இசையப்பெற்றுளதே. அது போலா மென்கிருன். இப்படி ப்ரகரணப்ரமாணத்திஞல் வித்யாமய மல்லாது க்ரியாமயமான க்ரதுவிற் சேர்ந்தவையானபடி யாலே மனச்சித் முதலியவற்றிற்கு முன் சொல்லப்பட்ட இஷ்டகசிதமான அக்னி என்ற ஸ்தானத்துடன் விகல்ப்ப மாகுக. (44)

**அதிதேசாத் ச.** **3-3-45.**

"இந்த அக்னிகளில் ஒவ்வொன்றும் இஷ்டகசிதமான அக்னி எத்தகையதோ அத்தகையதாகும்" என்று அதனு டைய கார்யத்தை இவற்றிற்குச் சொன்னதாலும் அத்தோடு இவற்றிற்கு விகல்ப்பமாம். (45)

ஸித்தாந்தம்—

**வித்யா ஏவ து நிர்த்தாரணுத் தர்சநாத் ச.** **3-3-46.**

இவை வித்யாமயமான க்ரதுவுக்கே அங்கமாம். "இவை கள் வித்யாசித்துக்களே" எனவொரு வாக்யமிருக்கின்றது. இவையெல்லாம் புத்தியின் கல்பனைகளானதாலே வித்யா மயங்களென்று தெரிந்தே யிருக்க, 'வித்யாசித்துக்களே' என்று தேற்றமாகச் சொன்னதால், தாங்கள் வித்யா மயங்களென்பது மட்டுமில்லை, வித்யாமயத்திற்கே அங்கங்க ளாய் வெளிக்ரதுவுடன் ஸம்பந்தப்படுகின்றதுமில்லை யென்று அறிவிப்பதிலே இவ்வாக்கியத்திற்கு நோக்கென விளங்குகிறது. மேலும், 'மனத்திஞலே க்ரஹங்கள் க்ரஹிக்

கப்பட்டன, மனத்தினுலேயே ஸ்தோத்ரங்கள் சஸ்த்ரங்களெல்லாம் செய்யப்பெற்றன' என்று எல்லாம் மானஸங்களாகச் சொல்லப்படுவதாலும் மானஸக்ரது இருப்பது காண்கிறது. (46)

ச்ருத்யாதி பலீயஸ்த்வாத் ச ந பாத: 3-3-47.

ச்ருதிலிங்க வாக்யங்கள் ப்ரகரணத்திற்காட்டிலும் ப்ரபலங்களானபடியால் ப்ரகரணப்ரமாணத்தினுலே வெளிக்ரதுவுக்கு அங்கமென்னவொண்ணுது. (47)

அநுபந்தாதிப்ய: ப்ரஜ்ஞாந்தரப்ருதக்த்வவத்
த்ருஷ்ட: ச தத் உக்தம். 3-3-48.

யாகத்திற்குச் சேர்ந்த க்ரஹங்கள், ஸ்தோத்ரங்கள், போன்றவையெல்லாம் வித்யாமயங்களாகவே சொல்லப்பட்டிருப்பதால் அதனுலும், முன்ன சொன்ன காரணங்களாலும் க்ரதுவும் வித்யாமயமென்றே தெரிகிறது. ஆகையால் இதர வித்யைகள் போலவே க்ரியாமயமான க்ரதுவைக்காட்டிலும் வித்யாமயக்ரதுவும் வேரும். நேராக விதிவாக்யம் இல்லாமற்போனுலும் விதியைக் கல்பித்துக்கொள்வதுண்டென்ற விஷயம் உத்கீத வித்யையின் பலன் விஷயத்திலே காணப்பட்டிருக்கிறது. இதுவும் பூர்வமீமாம்ஸையில் பணிக்கப்பட்டதேயாம். (48)

இஷ்டகசிதமான அக்னி எத்தகையதோ, அத்தகையனவே மனச்சித் முதலான அக்னிகளுமென்று அதன் உபயோகத்தை இவற்றிற்கும் கொண்டதாலே அதைப்போல க்ரியாமயமான க்ரதுவுக்கே இவைகளும் உபயோகப்படுமென்று பூர்வபக்ஷி சொன்னதற்கு மறுமொழியாக மேல்ஸூத்ரம்—

ந ஸாமாந்யாத் அபி உபலப்த்தே: ம்ருத்யுவத் ந ஹி
லோகாபத்தி: 3-3-49.

அதைப் போல் இது என்று சொல்லுமிடத்தில் எந்த அம்சத்திற்காக உவமை கருதப்பட்டதோ, அது தவிர மிகுந்த விஷயத்தில் வேற்றுமை யிருக்கத்தான் செய்யும். அது எந்த க்ரதுவுக்கு அங்கமோ, அதற்கு இவைகளும் அங்கமாகவேண்டுமென்பதில்லை. அது தன்னைப் போல் க்ரியாரூபமான க்ரதுவுக்கு அங்கமாகுமாபோலே இவையும் தம்மைப்போல் வித்யாரூபமான க்ரதுவுக்கு அங்கமாகின்றன என்கிற பொதுவான தர்மத்தைக்கொண்டு உவமையாம். விசேஷதர்மமின்றி ஸாமான்யதர்மமிருப்பதைக் கொண்டு இவ்வண்ணம் சொல்வது எங்கும் காண்கிறது. இந்த சூரிய மண்டலத்திலேயிருக்கும் புருஷன் ம்ருத்யு (போன்றவன்)

என்கிறதொரு வாக்யமுண்டு. அங்கே ம்ருத்யு யமலோகத்தி லிருக்கிறவண்ணம் இவனும் அங்கேயே இருக்கிறான் என்ற ஸாம்யத்தைக்கொள்ளக்கூடுமோ ? ம்ருத்யுவைப்போல் இவனும் ஸம்ஹாரம் செய்கின்றவனென்றதே கருதப்பட்டதாம். (49)

**பரேண ச சப்தஸ்ய தாத்வித்யம் பூயஸ்த்வாத் து அநுபந்த:**
**3-3-50.**

இதற்குமேலுள்ள ப்ராம்மணத்தில் அக்னி என்கிற ஸ்தானத்தை பூலோகமாகவும் அதற்குச் சுற்றியுள்ள பரிஷேசன ஜலத்தைக் கடலாகவும் இவ்வாறு சிந்திக்கவேண்டுமென்று வித்யையே சொல்லப்படுவதால் இங்கும் எல்லாம் வித்யையேயாம். க்ரியாமயமான இஷ்டகசிதமான அக்னியோடு சேர்த்துச்சொல்வானென் என்னில், இந்த அக்னிகளுக்கு வேண்டும் அங்கங்கள் அதினின்று கொள்ளவேண்டியன பல இருப்பதால் அறிவிக்க ஸௌகர்யமாயிருக்குமென்று கருதி யென்க. ஆகையால் வித்யாமய க்ரதுவுக்கு இவை அங்கங்கள். (50)

*(21) சரீரேபாவாதிகரணம்*

**ஏகே ஆத்மந: சரீரே பாவாத். 3-3-51.**

வித்யாமயங்களான அக்னிகளுக்கு வித்யாமயக்ரதுதான் தகுந்ததென்று கீழே சொல்லிற்று. மோக்ஷார்த்தமான ப்ரம்மவித்யைக்கு எத்தகைய ஜீவவித்யை தகுந்ததாகுமென்றிங்கே விசாரிக்கப்படுகிறது. தஹரவித்யையின் அருகில் ப்ரஜாபதிவாக்யத்திற்சொன்ன ஜீவோபாஸனம் தஹரவித்யைக்கு மட்டும் சேர்ந்ததென்கிற எண்ணம் நீக்கப்படுகிறது. ஜீவனுக்கு அந்தர்யாமியாகப் பரமாத்மாவை உபாஸிக்கவேண்டும் அங்கே ஜீவனை எவ்வண்ணம் சிந்திப்பதென ஆராயவேண்டும். ஜீவன் உடலிலிருப்பதால் இங்கு இவன் கர்த்தா, போக்தா என்ற குணமுள்ளவனை அனுபவத்திலிருப்பதால் ஜீவனுடைய கர்த்ருத்வம் போக்த்ருத்வம் என்கிற ஆகாரங்களை, 'இங்கு யாகம் செய்கின்றவன்; ஸ்வர்க்கம் சென்று வேறு உடல்பெற்றுப் பலனை யனுபவிக்கிறான்' என்றவாறு உணர்ந்து யாகம் செய்யுமாபோலே, கர்த்ருத்வபோகத்ருத்வங்களையுடையன் ஜீவாத்மா என்றறிந்து அவ்வாறு ஜீவனையுபாஸிப்பதாமென்று சிலர் (ரிஷிகள்—பூர்வபக்ஷிகள்) அபிப்ராயப்படுகின்றனர். (51)

ஸித்தாந்தம்—

**வ்யதிரேக: தத்பாவபாவித்வாத் ந து உபலப்திவத். 3-3-52.**

ஸம்ஸாரதசையிலே இவன் கர்மாதீனமாகி கர்த்தாவும் போக்தாவுமாயிருக்கை உடலிலுள்ள போதிருக்கும் தர்மம். இது உபாஸிக்கக்கூடியதன்று. இந்த தர்மமில்லாமையே ப்ரஜாபதிவாக்யம் என்கிற சாந்தோக்ய பாகத்திலே சொல்லப்பட்ட ஜீவாத்மாகாரம். ஆகப் பாபபுண்யமில்லாமை, மூப்பு சோகம் முதலியன இல்லாமை, ஸத்யகாமனாய் ஸத்யஸங்கல்ப்பனாயிருக்கை என்ற இயற்கையான தன்மையே ஜீவவித்யையிற் சிந்திக்கப்படவேண்டும். மேலே அடையப்போகிற நிலையை முன்னே அநுஸந்திக்கவேண்டுமென்று தத்க்ரதுச்ருதி சொல்லுகிறது "எவ்வாறு உபாஸிக்கின்றானோ அவ்வாறு ஆகிறான்" என்றதே. எத்தகைய குணங்களையுடைய எம்பெருமானைத் தான் அடைவதாக வைத்து உபாஸிக்கிறானோ, அத்தகைய குணங்களோடு அவனை அடைந்தவனாகிறான் ஜீவன். இப்படி ப்ரமாத்மாவைமட்டும் இது சொல்வதென்று பூர்வபக்ஷி நினைக்கிறான். அங்ஙனமன்று. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் மோக்ஷதசையிலே அனுபவிக்கப்படுவதால் அங்கு எந்த ஸ்வரூபம் பெறப்படப்போகிறதோ அதையே சிந்திக்கவேண்டும். இதை விட்டுக் கர்மியாகத் தன்னைச் சிந்தித்தானாகில் கர்மியாகவேண்டியதாகும். ஆகையால் சுத்தஸ்வரூபமே உபாஸிக்கப்படவேண்டும். ஏனெனில், உபலப்திவத். ப்ரம்மத்தின் அனுபவம் போலேயாம் ஜீவனுடைய அனுபவமும். இரண்டும் மேலே பெறப்படவேண்டியவை. (52)

(22) அங்காவபத்தாதிகரணம்

அங்காவபத்தா: து ந சாகாஸு ஹி ப்ரதிவேதம். 3-3-53.

ப்ரஜாபதிவாக்யத்திற் சொன்ன ஜீவத்யானம் எல்லா ப்ரம்மவித்யைக்கும் பொதுவென்னப்பட்டது. அவ்வாறே ஓரிடத்திற் சொன்ன உத்கீதோபாஸனம் எல்லா வேதத்திற்கும் சேருமென்னப்படுகிறது. ஒவ்வொரு சாகையிலும் ஸ்வரம் வேறுபடுகிறபடியால் ஒரு சாகையில் எவ்வகையில் உபாஸனம் விதிக்கப்பட்டிருக்கிறதோ, அவ்வகையான உபாஸனம் அங்குள்ள ஸ்வரத்தோடு சேர்ந்த அந்த உத்கீதத்திற்கேயாகும். ஆகையால் வேறு சாகையை ஓதுகின்றவர் இதர சாகையில் விதித்த உபாஸனத்தைச் செய்தலாகாதென்றது பூர்வபக்ஷம். உத்கீதத்தை உபாஸிக்கவேண்டுமென்கிற விதிவாக்யத்திலே உத்கீத என்ற சொல்லானது அந்தந்த ஸ்வரத்துடன் சேர்த்த அந்தந்த உத்கீதத்தையெல்லாம் சொல்லக்கூடியதாகையாலே எத்தகைய உத்கீதத்திற்கும் ஒவ்வோர் உபாஸனமும் சேரும். ஆகையால் உத்கீ

தம் போன்ற அங்கத்தைச் சார்ந்த உபாஸனைகள் அந்தந்த சாகையிலே நிற்பனவல்ல. ப்ரதிவேதம்—எல்லா வேதத்திற்கும் எந்த வேதத்தை அத்யயனம் செய்பவருக்கும் அனுஷ்டிக்கத்தக்கவையேயாம். (53)

மந்த்ராதிவத் வா அவிரோத: 3-3-54.

ஒவ்வொரு மந்த்ரத்திலும் ஸ்வரம் சாகைதோறும் வேருகிறபடியால் மந்த்ரம் வெவ்வேருகும். ஆயினும் அந்த மந்த்ரங்கள் உபயோகப்படும் யாகமானது பொதுவாக எல்லா சாகிகளுக்கும் ஆங்காங்கு விதிக்கப்பட்டிருப்பதால் மந்த்ரம் பொதுவாகிறதுபோல் இங்குமாகக் குறையில்லை. ஆக அவரவர் ஓதினபடியிலேயுள்ள மந்த்ரத்தை அவரவர் செய்யும் கார்யத்தில் உபயோகப்படுத்துவதுபோல் அவரவர்க்கு ஏற்பட்ட உத்கீதத்திலே வேறு சாகையிலுள்ள உபாஸனத்தையும் அவரவர் செய்யலாமென்றதாயிற்று. (54)

(23) பூமஜ்யாயஸ்த்வாதிகரணம்

பூம்ந: க்ரதுவத் ஜ்யாயஸ்த்வம் ததா ஹி தர்சயதி. 3-3-55.

பல உத்கீதங்களில் ஏதேனுமோர் உத்கீதத்தையுபாஸிக்கலாமென்னப்பட்டது. வைச்வானரரூபத்தின் அங்கங்களில் ஏதேனுமோர் அங்கத்தை யுபாஸித்தாலும் போதுமா என்று விசாரிக்கப்படுகிறது. வைச்வாநரவித்யையில் வைச்வாநரபரமாத்மாவுக்கு ஸ்வர்க்கலோகம், ஸூர்யன், வாயு, ஆகாசம், ப்ருதிவி என்றவை, முறையே தலை, கண், ப்ராணன், இடை, பாதம் என்ற அவயவங்களாகச் சொல்லப்பட்டன. அங்கு ஒவ்வோர் அவயவத்தின் உபாஸனத்திற்கும் தனிப்பலன் சொல்லப்பட்டிருப்பதால் தனித்தனியேயாம் உபஸானைகள். ஐந்தையும் சேர்த்து உபாஸனத்தைச் சொன்ன வாக்யமுமிருக்கிறது. ஆனால் முன் சொன்ன உபாஸனைகளை மீண்டும் நினைவுறச் செய்வது மட்டும் அது. முழு உபாஸனமென்பதொன்றில்லை யென்றது முதல் பூர்வபக்ஷம், 'ஸர்வலோகங்களிலும் ஸர்வப்ராணிகளிலும் ஸர்வ ஆத்மாக்களிலுமுள்ள மிக்க போக்யமான பரமாத்மாவாகிற அன்னத்தைப் புசிக்கிருன்' என்று முழு உபாஸனத்திற்குத் தனிப்பலன் சொல்லப்பட்டிருப்பதால் அவ்வாறும் ஓர் உபாஸனமுண்டென்றது இரண்டாவது பூர்வபக்ஷம். ஸித்தாந்தமாவது—தனித்தனி உபாஸிக்கும் ரிஷிகள் தாங்கள்அறிந்ததில் த்ருப்திபெருமல் நன்குஅறியக் கேகயராஜனிடம் வந்ததும், பலனுள்ளதுபோல்தோன்றும் தனியுபாஸனத்தைச் செய்பவனுக்கு தலை முதலிய அந்தந்த

அங்கத்திற்கு அழிவு ஏற்படுமாகையால் தம்மிடம் வந்தது நலமென்று அரசன்சொன்னதும் பார்க்கப்படும்போது, தனியுபாஸனமே யில்லே, முழு உபாஸனமொன்றே கருதப்பட்டுள்ளதென்றது தெளிவாம். தனியுபாஸனத்தில் கேடு உண்டு. முழு உபாஸனத்திற்குப் பரமாத்மப்ராப்தியும், அதற்கு முன்னுக ஸகல பாபங்கள் அழிவதும் பலன். நெருப்பினுல் நாணற் பஞ்சுபோலே வித்யையால் எல்லாப் பாபங்களும் பஸ்மமாமென்கிறதே. வந்தவர்களை வைச்வாநரவித்யையே யறியாதவர்களைக்காட்டிலும் சிறப்புப் பெற்றவராகத் துதி செய்வதற்காகவே ஓரோரவயவமும் உயர்ந்ததென்று விளக்குவதற்குத் தனியுபாஸனத்தையும் அங்கங்கே பலனையும் சொன்னதாம்.

இந்த வைச்வாநரவித்யையிலுள்ள சொற்போக்குக்கு வைச்வாநரேஷ்டியை விதிக்கும் வேதச் சொற்போக்கே த்ருஷ்டாந்தமாம். 'மகன் பிறந்தால் பன்னிரண்டு அகல்களிற் பக்வமான (புரோடாசத்தால்) அடையினுல் வைச்வாநரேஷ்டி யொன்று செய்யவேண்டும், மகன் பல பலன்கள் பெறுவானென்று சொல்லி மேலே எட்டு அகல்கள், ஒன்பது அகல்கள், பத்து அகல்கள், பதினேர் அகல்கள் என்றவற்றிலுள்ள அடைக்குப் பலன்களையும் சொல்லிற்று. அங்குப் பூர்வமீமாம்ஸையில் செய்தமுடிவென்னவென்ருல், அவ்வாறு அடையினுலும் யாகமென்பதில்லை. பன்னிரண்டகல்களுக்குள் அடங்கிய எட்டு, ஒன்பது என்றவற்றிற்கே அவ்வளவு பலனென்ருல் பன்னிரண்டுமுள்ள போது பலனின் மேன்மை யெவ்வாரும் என்று ஸ்தோத்ரம் செய்வதிலே நோக்கு. ஆகையால் த்வாதசகபாலேஷ்டி யொன்றே யுண்டு என்றது. அதுபோல் இங்கும் முழு உபாஸனமொன்றே யென்க. தனியுபாஸனத்தில் குறைகூட இங்குக் கூறப்பட்டுள்ளதே. ஆகையால் பூம்ந:=முழுமைக்கே ஜ்யாயஸ்த்வம்=ப்ராமாணிகத்வமாம். (55)

### (24) சப்தாதிபேதாதிகரணம்

**நாநா சப்தாதிபேதாத். 3-3-56.**

வைச்வாநரவித்யையில் எல்லாம் சேர ஒரே உபாஸனமென்ருற்போலே ஸத்வித்யை, தஹரவித்யை முதலான எல்லா வித்யைகளுமொன்றேயாகலாம்—எல்லாம் ப்ரம்மோபாஸநமே, ப்ரம்மப்ராப்தியே எதற்கும் பலன் என்றது பூர்வபக்ஷம். பூர்வமீமாம்ஸையிற் சொன்ன ப்ரமாணங்களான, சப்தாந்தரம், அப்யாஸம், ஸங்க்யை, ஸம்ஜ்ஞை, குணம், ப்ரகரணுந்தரம் என்றவற்றிலேதேனுமொரு ப்ரமா

ணத்தினுலே அந்தந்த வித்யை வெவ்வேருமென்பது ஸித்தாந்தம். (56)

(25) விகல்ப்பாதிகரணம்

**விகல்ப்ப: அவிசிஷ்டபலத்வாத். 3-3-57.**

ஸ்வர்க்கம் என்கிற பலத்திற்காக அக்னிஹோத்ரம், தர்சபூர்ணமாஸங்கள் என்றுற்போன்றவை என்ருலும் மேன் மேல் ஸ்வர்க்கம் வேண்டுமென்பவர் எல்லாவற்றையும் அனுஷ்டிக்குமாபோலே அதிக பலன் வேண்டுமவர் பல பரவித்யைகளைச் சேர்த்துக்கொள்ளலாமென்பது பூர்வ பக்ஷம். ஸர்வதேசத்திலும் ஸர்வகாலத்திலும் ஸம்பூர்ண மானபரப்ரம்மானுபவமே எந்த பரவித்யைக்கும் பலனுனபடி யாலே ஒன்ருலடையப்படாத மோக்ஷாம்சமில்லையாகை யாலே வேறென்று அனுஷ்டிக்க இடமில்லையாகையாலே ஏதேனுமொன்றே வேண்டுவது. ஆக அவரவர் இஷ்டப் படி ஒன்றைக் கொள்வதால் விகல்ப்பமே என்றது ஸித் தாந்தம்: (57)

**காம்யா: து யதாகாமம் ஸமுச்சீயேரந் நவா பூர்வஹேத்வ பாவாத். 3-3-58.**

ப்ரம்மப்ராபதி நீங்கலாக வேறு பலனுக்குச் செய்யப் பெறும் உபாஸனைகள் வேண்டுமானல் சேர்க்கப்படும், வேண்டாதபக்ஷத்தில் சேராமலுமிருக்கும். அங்கு முன் சொன்ன காரணமில்லை. ஒன்றினுல் பெறப்பட்ட பலனுக்கு மேல் மற்றென்ருல் பெறவிருக்கும் பலனில்லை யென்ப தில்லையே. (58)

(26) யதாச்ரயபாவாதிகரணம்

**அங்கேஷு யதாச்ரயபாவ: 3-3-59.**

உத்கீதோபாஸனத்திற்குத் தனிப்பலன் உண்டென்று முன்சொன்னதே மீண்டும் சில ஆக்ஷேபங்கள் வர விலக்கி ஸ்தாபிக்கப்படுகிறது. இங்கு நான்கு பூர்வபக்ஷஸூத்ரங் கள்.

நெல்லை ப்ரோக்ஷிக்கவேண்டுமென்றவிடத்தில் நெல் லுக்கு ப்ரோக்ஷணம் அங்கமாவதுபோல், 'உத்கீதத்தை உபாஸிக்கவேண்டும்' என்றதால் உத்கீதத்திற்கு உபாஸ னம் அங்கமாய்விட்டதால் அங்காங்கங்களான உபாஸனங் கள் அவற்றிற்கு ஆச்ரயமாக நினைக்கப்பட்ட உத்கீதம் போலவே எப்போதும் யாகத்திற் சேர்ந்திருப்பதாகும். (59)

**சிஷ்டே: ச. 3-3-60.**

உத்கீதத்திற்காக உபாஸனத்தை விதிக்கிற விஷயத் திலேயே விதியிருக்கிறது. பலத்திற்காக உபாஸனத்தை

விதிக்குமிடத்தில் விதியில்லை. விதியுள்ள வாக்யத்தில் கிடைத்ததை விட்டு வேறு கொள்ளலாகாது. (60)

ஸமாஹாராத். 3-3-61.

'உத்காதா செய்யும் உத்கீதம் கெட்டால் ஹோதா தன் கார்யத்தினுல் அதை சரிப்படுத்துகிருன்' என்று ஸமாதானத்தைச் சொன்னதால் உபாஸனம் அவசியமெனத் தெரிகிறது. உத்கீதம் கெடுவதாவது உபாஸனமின்றி யிருக்கை. (61)

குணஸாதாரண்யச்ருதே: ச. 3-3-62.

'அதைக்கொண்டு மூன்று வேதவித்யையும் நடைபெறுகிறது' என்ற வாக்கியத்திலே 'அது' என்பது உபாஸனத்துடன் சேர்ந்த உத்கீதம். ஆகையால் உத்கீதம்போல் உபாஸனமும் எப்போதும் வேண்டும். இதுவரையில் பூர்வ பக்ஷம். (62)

ஸித்தாந்தம்—

ந வா தத்ஸஹபாவாச்ருதே: 3-3-63.

உத்கீதத்தை உபாஸிக்கவேண்டுமென்ற மாத்திரத்திலே உத்கீதத்திற்கு உபாஸனம் என்றதாகாது. அங்கியாகாமல் ஆச்ரயமாயிருந்தாலும் வாக்யம் இவ்வாறுதானே ப்ரயோகிக்கப்படவேண்டும். (63)

தர்சநாத் ச. 3-3-64.

வித்யையுள்ள ப்ரம்மா யஜமானனையும் ருத்விக்குக்களையும் காக்கிருனென்றதாலே உபாஸனமிராமலும் அனுஷ்டான முண்டென்பது விளங்குகிறது. மற்ற விஷயம் முன்னமே விசாரிக்கப்பெற்றதாம். (விரிவு சாந்தோக்ய பரிஷ்கார ரத்திலாம்). (64)

3-ஆம் அத்யாயம் 3-ஆம் பாதம் முற்றிற்று.

---

ஸ்ரீ

## 3-ஆம் அத்தியாயம் நான்காம் பாதம்

பக்தியோகம் கீழே விசாரிக்கப்பெற்றது. அதற்கு அங்கம் அவரவருடைய ஸ்வதர்மமென்று இங்கே நிரூபிக்கப்படுகிறது.

### (1) புருஷார்த்தாதிகரணம்

புருஷார்த்த: அத: சப்தாத் இதி பாதராயண: 3-4-1.

முதலில் வித்யை கர்மாவுக்கு அங்கமா, கர்மம் வித்யைக்கு அங்கமா என்றது விசாரிக்கப்படும். வித்யையென்

பதும் சாஸ்திரம் ஓதி விசாரித்து வந்த ஞானம் மட்டுமா, அதற்கு மேம்பட்ட பக்தியோகமா. அந்த ஞானமும் ஜீவாத்மவிஷயமாகத்தான் சாஸ்திரத்திலிருந்து பெறப்படுகிறதா, அல்லது அவனுக்கு மேம்பட்ட பரமாத்மா வொன்றுண்டா என்பதெல்லாமும் இவ்விசாரத்திற் புகுந்திருக்கும். முதலில் வித்யையினின்றே பேறு பெறப்படும், அதே ப்ரமாணஸித்தமென்று ஸித்தாந்தம் இங்கு காட்டப் பெற்றது. (1)

இனி பூர்வபக்ஷியின் ஸூத்ரங்கள் ஆறு—

**சேஷத்வாத் புருஷார்த்தவாத: யதா அந்யேஷு இதி ஜைமிநி:** 3–4–2.

'தத் த்வம் அஸி' என்றது போன்ற வாக்கியங்களைப் பார்க்கும்போது ஜீவனும் ப்ரம்மமும் ஒன்றென விளங்கும். ஜீவன் கர்மானுஷ்டானத்திற்குக் கர்த்தாவாயிருப்பவன். கர்மாவுக்கு வேண்டும் த்ரவ்யம்முதலானவற்றைச் சொல்லும்போது அவற்றை ஸ்தோத்ரம் செய்வதுபோல் கர்த்தாவையும் கொண்டாடச் சில வாக்கியங்கள் உபநிஷத்திலே பிறந்தன. அவற்றிற்கெல்லாம் கர்த்தாவை ப்ரசம்ஸிப்பதிலே நோக்கே யல்லது தனியாக ஒரு ஞானத்தினல் ஒரு பலனைப் பெறுவதாக அறிவிப்பதில் நோக்கில்லை. ஆகையால் வேறு த்ரவ்யாதிகள்விஷயத்திலேபோல் கர்த்தா விஷயத்திலும் எல்லாம் அர்த்தவாதமென்று கர்த்தா கர்மாவுக்கு அங்கமாயிருப்பதால் ஏற்படுகிறது. ஆக சாஸ்திரத்தினல் சொல்லப்பட்டபடி கர்த்தாவாக ஆத்மாவை யறிந்து கர்மானுஷ்டானம் செய்து அதனின்று பலனைப் பெறுகிருன் என்பதே பொருந்து மென்று ஜைமிநிமுனிவர் நினைத்தார். (2)

**ஆசாரதர்சநாத்.** 3–4–3.

ப்ரம்மஜ்ஞானமுள்ளவரில் ச்ரேஷ்டரான அச்வபதி யென்ற கேகயராஜர் 'நான் யாகம் பண்ணப் போகிறேன்' என்று ஜ்ஞானத்தை யாகாநுஷ்டானத்திற்கு அங்கமாக்குகிருர். ஜநகாதிகள் கர்மாநுஷ்டானத்தினலேயே பேறு பெற்ருர்களென்றது கீதை. ஆகையால் கர்மாவினின்றே பலன். (3)

**தத்ச்ருதே:** 3–4–4,

யாதொன்றை வித்யையைக் கொண்டு செய்கின்ருனே அது வீர்யச்சிறப்புடையதென்று வித்யையைக் கர்மாவுக்கு அங்கமாகச் சொல்லுகிறது. (4)

ஸமந்வாரம்பணாத். 3–4–5.

'லோகாந்தரம் போகின்றவனை வித்யையும் கர்மாவும் பின் தொடர்கின்றன' என்றதால் கர்மம் ப்ரதானமெனத் தெரியும். (5)

தத்வத: விதாநாத். 3–4–6.

வித்யை யடைந்தபிறகும் அவனுக்குக் கர்மாவை விதிக்கிறது. 'ஆசார்யருடைய க்ருஹத்திலே சாஸ்த்ரவிதிப்படி ஆசார்யனுக்குச் செய்யவேண்டிய பணிவிடைக்குப் போய் மிகுந்த காலத்திலே வேதத்தைக் கற்று ஸமாவர்த்தனமென்ற வ்ரதத்தைச் செய்துவிட்டுக் குடும்பியாய் சுத்தமான இடத்தில் வாஸம் செய்துகொண்டு தர்மங்களையெல்லாம் செய்துகொண்டு' என்கிற வாக்கியம் அர்த்தஜ்ஞானமுள்ளடக்கமாக அத்யயனத்தைச் செய்தபிறகு கர்மானுஷ்டானத்தைச் சொல்லுகிறது. (6)

நியமாத் ச. 3–4–7.

நூறு வருஷகாலமும் கர்மாவைச் செய்துகொண்டே ஜீவிக்கவேண்டுமென்று முழு ஆயுளையும் கர்மாநுஷ்டானத்திற்காக்கினதாலும் கர்மம் பிரதானமாகிறது. (7)

ஸித்தாந்தம்—

அதிகோபதேசாத் து பாதராயணஸ்ய ஏவம் தத்தர்சநாத். 3–4–8.

ஜீவாத்மாவுக்கு மேம்பட்ட பரமாத்மாவை உபதேசிப்பதால் அவன்விஷயமான ஞானமாகிய உபாஸனமே பலனுக்கு ஸாதனமென்று முன்சொன்னதே பாதராயணருடைய மதமாம். ஸங்கல்ப்பமாத்திரத்தாலே ஸர்வத்தையும் ஸ்ருஷ்டித்து அதனுள் ப்ரவேசித்து ஸர்வ ஜீவர்களையும் நியமிப்பவனாய் நிர்தோஷனுமான பரமாத்மாவின் உபாஸனம் பலனுக்கு ஸாதகமென அறிவிக்கப்படுகிறதே. (8)

துல்யம் து தர்சனம் 3–4–9.

ப்ரம்மஞானிகள் தர்மானுஷ்டானம் செய்வது காணப்படுவதுபோல் தர்மங்களை விடுவதும் காணப்படுகிறது. 'ஆத்மா ஒன்றே நமக்கு வேண்டுமாயிருக்க எதற்காக நாம் ஓதப் போகிறோம்? எதற்காக அனுஷ்டிக்கப்போகிறோம்?' என்று காவஷேயரிஷிகள் சொன்னார்களே. கர்மாநுஷ்டானத்தைச் சொல்லுமிடம் வித்யைக்கு அங்கமான கர்மாவைப் பற்றியது, விடுவதைச்சொல்லுமிடம் பலத்திற்கான கர்மாவைப் பற்றியதென்றது கருத்து. (9)

அஸார்வத்ரிகீ. 3–4–10.

'வித்யையைக்கொண்டு எதைச்செய்கிருனே அது வீர்யச் சிறப்படைவதாம்' என்கிற வாக்யம் எல்லா அனுஷ்டானத் திற்குமான ஜீவஞானத்தைக் குறிப்பதன்று, எல்லாவற்றை யும் வித்யையைப் பெற்றுச்செய்யவேண்டுமென்று அதற்குப் பொருளில்லையே, எது வித்யையோடு செய்யப்படுவதோ, அது வீர்யவத்தரம் என்ருல் வித்யையல்லாமலும் செய்யப் படுவதுண்டென்பதே தேறும். இந்த வித்யை ஸந்தர்ப்பத் திற்கிணங்க உத்கீதாதிவித்யைகளேயாம். (10)

விபாக: சநவத். 3–4–11.

நிலம், இரத்னம் இரண்டையும் விற்றவனுக்கு இரு நூறு ரூபாயென்ருல் நிலத்திற்கு நூறு, இரத்னத்திற்கு நூறென்று பிரிவு ஏற்படுமாபோலே வித்யையும் கர்மாவும் மரணமடைந்தவனைத் தொடர்கின்றனவென்ருல் அதன் பலனைக் கொடுக்க அதது வருகிறதென்றதாமேயல்லது ஒன்று அங்கம் ஒன்று அங்கியென்றதாகாது. (11)

அத்யயநமாத்ரவத: 3-4-12.

'அத்யயனம் செய்துவிட்டு ஸமாவர்த்தனம் செய்து கொண்டு தர்மாசரணம் பண்ணுவான்' என்ற விடத்தில் அத்யயனமென்று வேதாக்ஷரங்களை க்ரஹிப்பது மட்டும் சொல்லப்பட்டதேயன்றி அர்த்தஞானத்தைச் சொல்லவில் லையே. அத்யயன விதிக்கு அர்த்தஞானத்திற்காக அத்யய னத்தை விதிப்பதில் நோக்கில்லை. அக்ஷரங்களைச் செவ்வ னே க்ரஹிப்பதில் மட்டுமே. வ்யுத்பத்தி உள்ளவன் தானே விசாரம் செய்ய இழிவதால், அர்த்தஞானமின்றி அனுஷ்டா னம் செய்ய வியலாதென்றதுபோல் விசாரமின்றி அர்த்த ஞானம் பெறப்படமாட்டாதென்பதும் தெரிந்த விஷயமான தால் வாக்கியத்திற்குப் பொருளில் ஸம்சயமுள்ளவனுக்கு விசாரத்தை விதிக்கவேண்டுவதில்லை. இனி முன்வாக்யத் திலே,'அத்யயனம்செய்துவிட்டு' என்பதற்கு அர்த்தஞானம் பெற்றபிறகென்றவரையில் பொருளானுலும் சாதாரணமான ஞானம் அனுஷ்டானத்திற்கு அங்கமென்றதாகுமேயல்லது பரமாத்மாவின் உபாஸனமெனப்படும் வித்யை அங்கமாவ தற்கு இடமேயில்லை. (12)

ந அவிசேஷாத். 3–4–13.

'நூறு பிராயம் வரையிலும் கர்மானுஷ்டானம் செய்து கொண்டே யிருக்கவேண்டும்' என்கிற வாக்யம் வித்யை யுடையவனுக்கே சாதிக்கிறது, பரவித்யையில்லாதவனுக் கன்று' என எப்படி ஏற்படும்? முன்பின் ஸந்தர்ப்பத்தைக் கொண்டு அவ்வாறு கொண்டால் மேலே வித்யையையும்

அவித்யையென்று கர்மானுஷ்டானத்தையும் எடுத்து வித்யைக்குக் கர்மாவை அங்கமாகச்சொல்வதால் கர்மாவை அங்கமாகவே கொள்ளலாம். ஆயுள்வரையில் அனுஷ்டான மென்பதுமட்டுமே இங்குத் தெரிவதால் வித்யை அதற்கு அங்கமென்றது பெறப்படாது. (13)

ஸ்துதயே அநுமதி: வா. 3-4-14.

உண்மையில் அந்த வாக்யம் கர்மாவை விதிப்பதே யன்று. உயிருள்ளவரையில் காம்யங்களேயும் நிஷித்தகர்மாதி களேயும் செய்துகொண்டாகிலுமிருக்கட்டும். அஞ்சவேண் டாம். ஒரு கர்மாவும் இவனுக்கு லேபிக்காது. இது வித்யை யின் ப்ரபாவமென்கிறது. (14)

காமகாரேண ச ஏகே. 3-4-15.

வேதமோதுவர் சிலர், 'பிரஜையால் என்ன செய்யப் போகிறோம். நமக்கு இவ்வாத்மாவே இஷ்டமானது, அனு பவிக்கக்கூடியது' என்று இல்லறத்தை விட்டு யாகாதிகளேச் செய்யாமலுமிருப்பதால் யாகாதிகள் ப்ரதானமல்ல; வித்யை யே ப்ரதானமாம். (15)

உபமர்தம் ச. 3–4–16.

உயர்ந்தனவெல்லாம் தாழ்ந்தனவாம்படியான மிகப் பெரிய அவ்வாத்மாவைக் கண்டபோது கர்மங்களெல்லாம் களேயப்படுமென்று கர்மங்களின் அழிவே வேண்டியிருப்ப தால் கர்மம் ப்ரதானமன்று. (16)

ஊர்த்வரேதஸ்ஸு ச சப்தே ஹி. 3–4–17.

ஸந்நியாஸிகளிடத்திலும் வித்யை யிருப்பதால் வித்யை கர்மாங்கமாகாது. ஸந்நியாஸாச்ரமம் இல்லேயென்னவேண் டா. 'தர்ம வகுப்புக்கள் மூன்று. யாகாதிகள் ஒன்று (இது இல்லறம்) மற்றொன்று தவத்திலிழிவது, ப்ரம்மசாரியாகவே இருந்துவிடுவது மூன்றாவது', 'அரண்யத்திலே ச்ரத்தையு டன் தவம்புரிந்து பரமாத்மாவை உபாஸிக்கிறார்கள்', 'இந்த பரமாத்மாவையே ப்ராப்யமாகக்கொண்டு ஸந்யாஸம் செய்து கொள்ளுகிறார்கள்'என்றவாறு வேதங்களில் காண்கின்றதே. 'உயிருள்ளவரை அக்னிஹோத்ரம் செய்யவேண்டும்' என் பது போன்ற வாக்யம் வைராக்யமில்லாமல் இல்லறத்திலே இருப்பவரைப் பற்றியாம். (17)

பராமர்சம் ஜைமிநி: அசோதநாத் ச அபவததி ஹி. 3-4–18.

ஸந்நியாஸாச்ரமம் இல்லேயென்று ஜைமினி நினேக்கிறார். ஸந்நியாசம் பண்ணிக்கொள்ளவேண்டுமென்று நேராக விதி வேதத்திலில்லே. கீழ்ச்சொன்ன வாக்யங்களெல்லாம்

வித்யையை ஸ்தோத்ரம் செய்வது மட்டும். சிலர் இல்லறத்திலேயே யிருந்து வித்யையிலுள்ள ஊக்கத்தாலே பல அனுஷ்டானங்களை ஸமயங்களில் விட்டுமிருக்கிருர்கள். அந்த நிலையைச் சொல்லி வித்யை வெகுமுக்கியமென்கிறது மட்டுமாம் இது. ஏனிவ்வாறு கொள்வதெனில்—'அக்னியை விடுகிறவன் வீர்யத்தை—தேவானுக்ரஹத்தை இழக்கிருன்' என்று எப்போதும் அக்னியோடு (இல்லறத்தில்) இருக்க வேண்டுமென்கிறதேயென்கிருர் அவர். (18)

அநுஷ்டேயம் பாதராயண: ஸாம்யச்ருதே: **3–4–19.**

க்ரஹஸ்தாச்ரமமும் அவச்யம் வேண்டுமென்றுமட்டும் விதியுளதோ? 'மூன்று ஆச்ரமங்கள் உள' என்கிற வாக்கியம் இல்லறத்தைப் போல் ஸந்நியாஸத்தையும் அனுஷ்டிக்கத் தக்கதாகத்தான் அறிவிக்குமென்கிருர் பாதராயணர் (சித்தாந்தீ.) (19)

விதி: வா தாரணவத். **3–4–20.**

விதிவாக்யமாக அமையாமலிருந்தாலும் விதியைக் கல்பனை செய்வதென்று கொள்ளவேண்டும். ஜைமினியே தாரண விஷயத்திற் சொல்லி யிருக்கிருர். அதாவது—ம்ருதாக்னிஹோத்ரப்ரகரணத்திலொரு வாக்யமுண்டு, 'ஜுஹூ என்ற பாத்ரத்தின் கீழ்ப் பாகத்திலே ஸமித்தை வைத்துச் சேர்த்துப் பிடித்துக்கொண்டு ஹோமம் செய்யப் போகவேண்டும், தேவதைகளுக்கன்றே அதன் மேற்பாகத்திலே வைத்துச் சேர்த்துப் பிடிப்பது' என்றவாறு. தேவதைகளுக்குச் செய்யும்போது ஸமித்தை மேலே வைத்துக்கொள்ள வேண்டுமென்றது எங்குமே விதிக்கப்படவில்லை. ஆயினும் இந்த வாக்கியத்தைக் கொண்டே அதற்கும் விதியைக் கல்பித்துக்கொள்ளவேண்டும். அது போலிங்கும். (20)

*(2) ஸ்துதிமாத்ராதிகரணம்*

பரவித்யை விதிக்கப்பட்டு ப்ரதானமாயிருக்கட்டும், உத்கீதவித்யாதிகள் வேண்டாவென்கிற கேள்விக்கு ஸமாதானம்.

ஸ்துதிமாத்ரம் உபாதாநாத் இதி சேத் ந அபூர்வத்வாத். **3-4-21.**

'ப்ரணவாக்ஷரமான உத்கீதத்தை உபாஸிக்கவேண்டும். இது ரஸங்களுக்குள் (சிறந்த வஸ்துகள் எட்டில்) சிறந்தது; சிறந்த ஸ்தானம் பெற்றது' என்ருற்போன்ற வாக்கியங்களிலே ரஸதமத்வாதிகள் உபாஸிக்கப்படவேண்டியவையாக விதிக்கப்படுகின்றனவா, அல்லது வெறும்

ஸ்தோத்ரமா என்று விசாரிக்கவேண்டும். ஸ்தோத்ரம்மட்டுமே யாகும். ஒரு பலனுக்காக இவ்வாறு உபாஸனம் வேண்டுமென்னில், விதியிருந்தாலன்றோ அவ்வாறு கொள்வது. கர்மகாண்டத்திலே, 'ஜுஹூ' என்ற ஹோமபாத்திரமே பூலோகம், ஆஹவநீயமென்கிற அக்னியே ஸ்வர்கலோகம்' என்கிறது. அது போல் இதுவும் துதிமட்டுமென்பது பூர்வபக்ஷம். ஸித்தாந்தமாவது—கர்மகாண்டத்திலே ஜுஹூவை விதிக்குமிடத்தில் அதனைத் துதிக்க வாக்கியமேற்பட்டதுபோல் இங்கும் இந்த வாக்கியம் உத்கீதத்தை விதிக்கும் ப்ரகரணத்திலிருந்துவிட்டால் அர்த்தவாதம் என்று கொள்ளப்படும். உத்கீதத்தை இங்கு விதிக்கவில்லையே. ஆகையால் இங்கு இந்த வாக்கியங்களுக்கு வேறுவழியில்லாததால் ரஸதமமல்லாததை ரஸதமமாகச் சொல்வதால் இவ்வண்ணம் உத்கீதத்தைச் சிந்திக்கவேண்டுமென்று விதியிலே நோக்கென விளங்கும். (21)

பாவ சப்தாத் ச. 3-4-22.

உபாஸனம் என்ற சொல் இராமற்போனாலும் அவ்வாறு கொள்ளவேண்டும், உத்கீதத்தை உபாஸிக்கவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறதே. ஆயைால் இவ்வாறு த்ருஷ்டிவித்யையுமுண்டு. (22)

(3) *பாரிப்லவாதிகரணம்*

**பாரிப்லவார்த்தா: இதி சேத் ந விசேஷிதத்வாத். 3-4-23.**

ரஸதமத்வாதிகளைச் சொன்னது ப்ரசம்ஸைக்காக அன்று ; அவ்வாறு உபாஸிப்பதற்காகவே என்று உபயோகம் சொல்லுமாபோல், அங்கங்கு வித்யைகளை விதிக்குமிடங்களிலே உபாக்யானங்களுள்ளவையும் ஏதேனுமொரு கார்யத்திற்கு அங்கமாகவேண்டும். ப்ரதர்தன வித்யையை உபதேசிப்பதற்குமுன்னே ப்ரதர்தனன் என்னும் அரசன் இந்திரனுடைய லோகத்திற்குப் போன கதையைச் சொல்லுவது போன்ற பல உபாக்யானங்கள் உபநிஷத்திலுள. இவற்றிற்கு எங்கு உபயோகம் சொல்லக்கூடுமென்னில், அச்வமேத யாகத்திலே, 'பாரிப்லவம் சம்ஸதி' என்று பாரிப்லவமென்ற பெயருடையதொரு சஸ்த்ரம் விதிக்கப்பட்டது. பல உபாக்யானங்களை ஒதுவதென்றது அதிற் சேர்ந்தது. ஆகையால் இந்த உபாக்யானங்களை அதற்கு உபயோகப்படுத்தலாமென்றது பூர்வபக்ஷம். உபாக்யானங்களைச் சொல்லவேண்டுமென்று அங்கே விதித்திருப்பது வாஸ்தவம். ஆனால், 'வைவஸ்வதன் மனு' என்று தொடங்கி இன்ன இன்ன உபாக்யானங்களென்று அங்கே குறித்திருப்பதால்

வேறு உபாக்யானங்களைக் கொள்ள நியாயமில்லை. ஆகையால் ப்ரதர்தனனுக்கு இந்திரன் உபதேசித்த வித்யையை விதிக்கும்போது அதன் ஸ்தோத்ரத்திற்காகவே அந்த உபாக்யானத்தைச் சொல்வதென்பதால் உபநிஷத்திலுள்ள கதைகள் அர்த்தவாதங்களேயாம். (23)

(4) *அக்நீந்தநாத்யதிகரணம்*

**அத ஏவ ச அக்நீந்தநாத்யநபேக்ஷா. 3-4-24.**

இவ்வளவால் வித்யைக்குக் கர்மங்கள் அங்கங்களாமேயல்லது அங்கியாகா என ஏற்பட்டது. ஆகில் ஸந்நியாஸிகள் வித்யையை யனுஷ்டிக்கலாகாது. யாகாதிகளில் அவர்களுக்கு அதிகாரமில்லையே யென்றது பூர்வபக்ஷம். ப்ரம்மத்தைப் பெற வித்யானுஷ்டானத்திற்காகவே ஸன்னியாஸம் செய்துகொள்வதாக ப்ரமாணங்களில் காண்பதினாலே அவர்கள் அனுஷ்டிக்கும்போது வித்யைக்கு ஆதானம் அக்னிஹோத்ரம் முதலியன வேண்டுவனவல்ல. அக்நீந்தனமாவது ஆதானம். (அதைச் செய்துகொள்வதற்கு முன்னே கூட சன்னியாசம் செய்து கொள்ளலாம்). (24)

(5) *ஸர்வாபேக்ஷாதிகரணம்*

**ஸர்வாபேக்ஷா ச யஜ்ஞாதிச்ருதே: அச்வவத். 3-4-25.**

அப்படியாகில் இல்லறத்திலுள்ளவருக்கும் வித்யையானது யாகம் முதலியனவற்றை வேண்டாததாமென்றான் பூர்வபக்ஷி. அத்யயனம், யாகம், தானம் முதலியன செய்து பரமாத்மோபாஸனத்தைப் பெற விரும்புகிறார் அந்தணரென்று விதித்திருப்பதால் அவற்றில் அதிகாரமுள்ளவர் செய்யும் உபாஸனத்திற்கு அவை வேண்டும். கர்மங்கள் இல்லாமலே உபாஸனம் பலனை யளிக்குமென்னவேண்டா. குதிரை கடிவாளம் முதலியவற்றை வேண்டி, செல்வதற்காவதுபோல் உபாஸனமும் கர்மங்கள் சேரவே சாதனமாம். (25)

(6) *சமதமாத்யதிகரணம்*

**சமதமாத்யுபேத: ஸ்யாத் ததா அபி து தத்விதே: ததங்கதயா தேஷாம் அபி அவச்யாநுஷ்ட்டேயத்வாத். 3-4-26.**

க்ருஹஸ்தர்களுக்கு சமதமாதிகள் இல்லாமல் வித்யையனுஷ்டிப்பதாம். சமதமாதிகள் இந்திரியங்களுக்கு வியாபாரமில்லாதவரிடத்திலே கூடும். யஜ்ஞாதிகளான பல வியாபாரங்களையே செய்யுமிவர் இந்திரிய வியாபாரமின்றியிருக்கக்கூடுமோ என்றது பூர்வபக்ஷம். யாகாதிகள் வேண்டுவனவாயினும் உபாஸிப்பவன் சமதமாதிகளையுமுடையவ

றுவான். அவற்றுடனிருந்தே ஆத்மாவைக்காணவேண்டு மென்று விதியிருப்பதால். யாகாதிகர்மங்களுக்கும் சமதமாதி களுக்கும் முரண்பாடு இருப்பதாகப் பூர்வபக்ஷி நினைப்பது தவறு. யாகாதிகளையு மனுஷ்டிக்கவேண்டும்; இவற்றையும் அனுஷ்டிக்கவேண்டும். சாஸ்திரத்தில் செய்யவேண்டு மென்று விதிக்கப்பட்ட கர்மங்களை விடுவது சமதமாதி யல்ல. வேண்டாமென்று நிஷேதிக்கப்பட்டவற்றைச் செய் யாமலிருப்பதே; விதித்ததைச் செய்வதும் நிஷித்தத்தைச் செய்யாமலிருப்பதும் ஒருவருக்குக் கூடும். (26)

(7) *ஸர்வாந்நாநுமத்யதிகரணம்*

**ஸர்வாந்நாநுமதி: ச ப்ராணாத்யயே தத்தர்சநாத். 3-4-27.**

சமதமாதிகள் வேண்டுமானாலும் எங்கு வேண்டுமானா லும் புசிக்கலாம். வித்யையை யனுஷ்டிப்பவன்விஷயத்தில் ஊண்விஷயமான நிர்ப்பந்தமில்லை யென்று பூர்வபக்ஷம் செய்யப்படுகிறது.

ப்ராணவித்யையை விதிக்குமிடத்திலே, 'இவனுக்கு அன்னமாகாததொன்றில்லை' என்று சொல்லப்பட்டதால் ப்ராணவாயுவிஷயமான வித்யைக்கே இத்தனை மேன்மை யுண்டாகில் பரவித்யைக்குக் கேட்கவேண்டுமோ என்றது பூர்வபக்ஷியின் கருத்து.

எல்லா அன்னத்தையும் ஒருவனுக்கு சாஸ்திரம் இசை வதென்பது ப்ராணாபத்தில்தான். ப்ரம்மத்தை யறிந்தவன் விஷயத்திலேயே அதனைக் காண்பதால். உஷஸ்தியென்ப வர் பசியினால் வருந்தி யானைப்பாகனிடம் அவன் உண் ணும் உணவினின்று சிறிது கேட்டுப் பெற்று அவன் தண் ணீரும் கொடுக்க எழ,'வேண்டாம், ப்ராணதாரணம் இதனா லேயேயேற்படுகிறது' என்று சொல்லித் தண்ணீரைப் பெறா மல் அவ்வுணவிலும் சிறிதே உண்டு மிகுதியை மனைவியிடம் கொடுத்துவிட்டாரென்றும், அவளும் அதை வைத்திருந்து காலையில் அவர் மீண்டும் பசியினால் வருந்தினபோதே கொடுத்தாளென்றும் சொல்லப்பட்டதே. ஆக ப்ரம்ம ஞானிக்கே இந்நிலையென்றால் ப்ராணோபாஸனம் செய்பவ னுக்குக் கேட்கவேண்டுமோ? (27)

**அபாதாத் ச. 3-4-28.**

'ஆஹாரம் சுத்தமாயிருந்தால்தான் மனம் சுத்தமாகும், அப்போதே இடைவிடாது த்யானம் ஸித்திக்கும்' என்கிற விதியை பாதிக்கலாகாது. (28)

**அபி ஸ்மர்யதே. 3-4-29.**

ப்ராணஸம்சயமுள்ளவனுகி எங்கிருந்து அன்னம் புசித்தாலும் குற்றமில்லை. தாமரையிலையில் நீர்போல் தோஷம் படாதென்கிறது ஸ்ம்ருதி. (29)

**சப்த: ச அத: அகாமகாரே. 3-4-30.**

ப்ராம்மணன் (ப்ரம்ம நிஷ்டன்) பாபம் சூழ்ந்துகொள்ளு மென்றஞ்சி கள்ளைக் குடியான் என்றது கடச்ருதி, ஆகை யால் தன் இஷ்டப்படி யெல்லாம் செய்யாமலிருப்பதற்கே வேதம் ப்ரமாணமாக உளது. (30)

(8) விஹிதத்வாதிகரணம்

**விஹிதத்வாத் ச ஆச்ரமகர்ம அபி. 3-4-31.**

க்ருஹஸ்தனுடைய வித்யைக்கு யாகாதிகள் அங்கங்கள் என்ருல் வித்யையை யனுஷ்டிக்காத க்ருஹஸ்தனுக்கு யாகாதிகள் வேண்டாவென்பதாம். ஒரே கர்மாவானது ஆச்ரமத்திற்குமாம், வித்யைக்கு மாமென்னவொண்ணுது. ஆச்ரமத்திற்கென்ருல் நித்யமாகும், வித்யைக்கென்ருல் அநித்யமாகும் (வித்யைக்கென்ருல் மோக்ஷம் வேண்டுமவனே வித்யையை யனுஷ்டிப்பதால் அது அநித்யமாகும்). ஆக விதி நித்யமாக விதிக்கிறதா அநித்யமாகவா என்று சொல்லமுடி யாதபடியாம். ஆகையால் அக்னிஹோத்ராதிகர்மங்கள் க்ருஹஸ்தர் தவிர மற்றவருக்கில்லையென்கிற வண்ணமே, க்ரஹஸ்தரிலும் வித்யாநிஷ்டர் தவிர மற்றவர்க்கில்லை யென்பதே பொருந்துமென்றது பூர்வபக்ஷம். உயிருள்ளவ ரையில் அக்னிஹோத்ராதிகளைச் செய்யும்படி கர்மகாண்டத் திலே பிரம்மஞானமில்லாதவர்களுக்கும் சேர்த்து நிர்ப்பந்த மாக விதித்திருப்பதால் க்ருஹஸ்தாச்ரமத்திற்குமாம் இவை கள். நித்யாநித்யஸம்யோகம் என்கிற தோஷமில்லை. ஒரே விதி நித்யமாகவும் அநித்யமாகவும் கர்மாவை விஷயீகரித்தா லன்ருே அத் தோஷம் நேரும். ஒரு விதி எப்போதும் செய்ய வேண்டுமென்கிறது; மற்ருெரு விதி வித்யைக்கு மிவையா மென்றது. அக்னிஹோத்ரமொன்றே நித்யமாகவும் விதிக் கப்படுகிறது. ஸ்வர்க பலனுக்காகத் தனியாகவும் விதிக்கப் படுகிறது. அது போலாம். (31)

**ஸஹகாரித்வேந ச. 3-4-32.**

இல்லறத்திலுள்ளவனுக்கு இவை நித்யமாயிருக்கும் போது வித்யைக்காக விதியெதற்கென்னவேண்டா. வித் யையை யனுஷ்டிப்பவன் அதற்காகச் செய்கிறேன் என்று ஸங்கல்பித்துச் செய்யவேண்டும். அப்போது (ஒருதரம் அனுஷ்டிக்கப்பட்டே) இவை அதற்கு உதவியாய் ஆச்ரம தர்மமுமாம். (32)

ஸர்வதா அபி தே ஏவ உபயலிங்காத். 3–4–33.

ஆச்ரமதர்மமாயும் வித்யைக்காகவுமிருக்குமவை வெவ்வேறு கர்மங்களல்ல. அது வேறு அக்னிஹோத்ரம், இது வேறு அக்னிஹோத்ரம் என்பதில்லை. ஒன்றே இருவகைப் பட்டதென்றே நினைக்கப்படுவதால். (33)

அநபிபவம் ச தர்சயதி. 3–4–34.

'தர்மத்தினால் பாபத்தைப் போக்குகிறான்' என்றது முதலான வாக்யங்களால் பக்தியோகம் உண்டாவதற்குத் தடையான பாபங்களை ஆச்ரமதர்மங்களே போக்குகின்றனவென்றும், அவ்வாறு பக்தியோகத்தின் தடை விலக அது உண்டாகின்றதென்றும் ப்ரமாணம் வியத்தமாகச் சொல்லுகிறது. ஆகையால் அவையே சாதாரண க்ருஹஸ்தர், முமுக்ஷு-க்ரஹஸ்தர் எல்லோருக்குமாம். (34)

*(9) விதுராதிகரணம்*

அந்தரா ச அபி து தத்த்ருஷ்டே: 3–4–35.

விதுரன் (மனைவியை யிழந்தவன்), ஸ்னாதகன், (ப்ரம்மசர்யவ்ரதத்தை முடித்துக்கொண்டு விவாஹமாகாதவன்) இவர்கள் நான்கு ஆச்ரமத்திற் சேராதவர்களாகையால் அநாச்ரமிகள். இவர்களுக்கு ஆச்ரமதர்மங்களில்லையாகையாலே வித்யையில் அதிகாரமில்லையென்பது பூர்வபக்ஷம். அந்த்ரா அபி இடையிலும், அதாவது இந்தத் தசைகளிலும் வித்யாதிகாரம் இருப்பதேயாம். பார்யையில்லாமல் பின்னால் விவாஹம் செய்துகொண்ட ரைக்வாதிகள் முன் வித்யாநுஷ்டானம் செய்ததை ஸம்வர்க்கவித்யாதிகளில் கண்டதால். ஆச்ரம தர்மங்கள் இல்லாவிட்டாலும் அவர்களுக்குள்ள (வேத) ஜபம், உபவாஸம், தானம் முதலியனவே போதுமாம்.

அபி ஸ்மர்யதே. 3–4–36.

'ப்ராம்மணன் வேறொன்றைச் செய்யலாம், செய்யாமலுமிருக்கலாம். ஜபத்தினாலேயே பலனைப் பெறுகிறான் ஐயமில்லை' என்றது ஸ்ம்ருதி. (36)

விசேஷாநுக்ரஹ: ச. 3–4–37.

அந்தந்த ஆச்ரமத்திற்கே உரியனவான தர்மங்களல்லாத ஸாமான்ய தர்மமும் உபாஸனத்திற்கு உதவுவது காண்கிறது. 'தவத்தினால், ப்ரம்மசர்யத்தினால், ச்ரத்தையால், அறிவால் ஆத்மாவை உபாஸிக்கிறான்' என்றதே. (37)

அத: து இதரத் ஜ்யாய: லிங்காத் ச. 3–4–38.

ஆனால் ஆச்ரமமில்லாமலிருப்பதைவிட ஆச்ரமியாயி

ருத்தலே சிறந்ததாம். ஸ்ம்ருதிவசனத்தாலும், அநாச்ரமி யாக ஒரு க்ஷணமுமிருக்கவேண்டாமென்றதாலும் அதை விட ஆச்ரமம் பெற்றிருப்பதே மேலாகும். (38)

(10) தத்பூதாதிகரணம்

நைஷ்டிக ப்ரஹ்மசாரி, வைகாநஸன், ஸந்நியாஸி என்றவர்கள் தம் ஆச்ரமத்திலிருந்து ப்ரஷ்டர்களாய்விட்டால் அப்போது வித்யையில் அதிகாரம் உளதா இல்லையா என, ஜபம் உபவாஸம் முதலானவைகளைச் செய்து அவர்களும் வித்யையை அனுஷ்டிக்கலாமென்றது பூர்வபக்ஷம். ஸித்தாந்தமாவது—

**தத்பூதஸ்ய து ந அதத்பாவ: ஜைமிநே: அபி நியமாத் தத்ரூபாபாவேப்ய: 3–4–39.**

நைஷ்டிகாதிகளானவர்கள் மீண்டும் அந்தந்த ஆச்ரமத்தை விட்டிருப்பதென்பது கிடையாது; விலக்கியிருப்பதால். 'நைஷ்டிக ப்ரம்மசாரீ உயிருள்ளவரை ஆசார்ய க்ருஹத்திலே உழைத்துத் தன்னை ஒழித்துக்கொள்வான்', 'வாநப்ரஸ்தாச்ரமம் புகுந்தவன் இல்லறம் புகலாகாது' 'ஸந்நியாஸம் செய்தவன் மீண்டும் கொள்ளலாகாது' என்று அந்தந்த ஆச்ரமத்திலிராமலிருப்பதிலிருந்து விலக்கியிருப்பதால். இது ஜைமிநி முனிவருக்கும் ஸம்மதமாம். அவர்கள் ப்ரஷ்டர்களானால் ப்ராயசித்தமும் கிடையாது. (39)

**ந ச ஆதிகாரிகம் அபி பதநாநுமாநாத் தத்யோகாத். 3–4–40.**

பூர்வமீமாம்ஸையில் (6) அதிகாராத்யாயத்தில் அவகீர்ணி பசுயாகம் ஒன்று சொல்லப்பட்டிருக்கிறதும் உபகுர்வாணன் என்ற ப்ரம்மசாரிவிஷயம், நைஷ்டிகப்ரம்மசாரிக்கன்று. 'நைஷ்டிகன் ப்ரஷ்டனானால் பதிதனாவான். அவனுக்கு சுத்திகரமான ப்ராயச்சித்தம் காண்கிறதில்லை' என்கிறதே. (40)

**உபபூர்வம் அபி இதி ஏகே பாவம் அசநவத் தத் உக்தம். 3–4–41.**

சிலர், ப்ரம்மசர்ய ப்ரம்சம் ஏற்பட்டால் அது உபபாதகமே. ஆகையால் தேனையருந்தல் முதலான விஷயத்திற்போலே அவகீர்ணி பசுப்ராய்ச்சித்தம் உண்டு; உபகுர்வாண ப்ரம்மசாரிக்குச் சொன்னது இதரருக்கும் விரோதமில்லாத போது உண்டென்று சொல்லப்பட்டிருக்கிறதாலென்கிறார்கள். (41)

**பஹி: து உபயதா அபி ஸ்ம்ருதே: ஆசாராத் ச. 3–4–42.**

பாதகமானாலும் உபபாதகமானாலும், ப்ராயச்சித்தம்

இருந்தாலும் இராமற்போனாலும் நைஷ்டிகாதிகளாய் ப்ரஷ்டர்களானவர்களுக்கு ப்ராயச்சித்தம் ஒருவாறு பாபத்தை விலக்குவதானாலும் கர்மாதிகாரத்தையளிக்காது. ஸ்ம்ருதியும் ஸதாசாரமும் அவ்வாறேயாம். ப்ராயச்சித்தம் செய்து கொண்டாலும் சிஷ்டர்கள் ஸ்வீகரிக்கமாட்டார்கள். (42)

(11) ஸ்வாம்யதிகரணம்

**ஸ்வாமிந: பலச்ருதே: இதி ஆத்ரேய:** **3-4-43.**

பக்தியோகமென்கிற வித்யையையும் அதற்கு அங்கமான கர்மாக்களையும் பலன் அனுபவிக்கப்போகிறவனே செய்யவேண்டுமென்பது எல்லோரும் இசைந்ததே. உத்கீதோபாஸனத்தை யார் செய்வதென்பது விசாரிக்கப்படுகிறது. உபாஸனத்தின் பலன் யாகம் செய்கிறவனுக்கானதால் யாகத்திற்போல் இதிலும் யஜமானனுக்கே அதிகாரம் என்கிறார் ஆத்ரேயர். இது பூர்வபக்ஷம். (43)

**ஆர்த்விஜ்யம் இதி ஔடுலோமி: தஸ்மை ஹி பரிக்ரீயதே.**
**3-4-44.**

யாகத்தைச் சார்ந்தவற்றையெல்லாம் செய்வதற்கே பலருத்விக்குகளை வரித்துக்கொள்வது சாஸ்திரஸித்தம். ஆகையால் அத்வர்யு என்ற ருத்விக்கே யஜமானன் பசு என்ற பலனை அபேக்ஷிக்கிறபோது சமஸபாத்ரத்தை விட்டு கோதோஹனபாத்ரம் கொண்டு தண்ணீர் கொள்வது போல், உத்கீத கானம் செய்யும் உத்காதா என்ற ருத்விக்கே உத்கீதோபாஸனத்தைச் செய்வான். அத்தகைய கார்யத்திற்கே யன்றோ ருத்விக்கை தக்ஷிணை கொடுப்பதாகக் கூறி வரித்துக் கொண்டது என்பர் ஔடுலோமி. இது சித்தாந்தம். (44)

(12) ஸஹகார்யந்தராதிகரணம்

**ஸஹகார்யந்தரவிதி: பக்ஷேண த்ருதீயம் தத்வத:**
**வித்யாதிவத்.** **3-4-45.**

வித்யைக்குக் கர்மங்களும் சமதமாதிகளும் அங்கமாம். அந்த கர்மாநுஷ்டான காலத்திலே வீர்யவத்தரத்வம் வேண்டுமானால் உத்கீதாதிவித்யைகளும் வேண்டுமென்றதாயிற்று. இப்போது வித்யைக்கு பால்யம் பாண்டித்யம் என்ற இரண்டுடன் மூன்றாவதான மௌனமென்றதொன்றும் விதிக்கப்படுகிறதென்கிறது. "ப்ரஹ்ம நிஷ்டனாயிருப்பவன் உபாஸிக்கவேண்டிய பரமாத்மஸ்வரூப-ரூப-குண-விபூதிகளிலே விசதஜ்ஞானம் பெற்று பாலகனுடைய செயலோடிருக்க விரும்புவான். இப்படி பால்யம் பாண்டித்யம் இரண்

டையும் பெற்ற பிறகு முனியாவான்" என்ற வாக்யம் மௌன மென்பதொன்றை விதிக்கின்றதா, அல்லது ஏற்கனவே தெரிந்த விஷயமதாகையாலே விதிக்காமல் சொல்லுவதுமட்டுமா என்று விசாரிக்கப்படுகிறது. பூர்வபக்ஷமாவது—மௌனமாவது மனனம். 'ச்ரோதவ்யோ மந்தவ்ய:' என்று சொல்லப்பட்டது. அதாவது கேட்டறிந்ததை யுக்திகளைக் கொண்டு ஸ்தாபித்துத் தெளிவு பெறுவதாம். வேதத்தை ஓதி சாதாரணமாக வ்யுத்பத்தியையு முடையவன் தனக்குள்ள ஸந்தேஹத்தைப் போக்கிக் கொள்ளத் தானே ஒருவரிடம் விசாரித்தறிய முயற்சி யுடையனானதாலே ச்ரவணமும் மனனமும் விதிக்காமலே பெறக்கூடியனவே. அதே மனனம் 'முநி:' என்று சொல்லப்படுகிறதாகையால் விதிக்கப் படமாட்டாதென்றதாம்.

ஸித்தாந்தமாவது—வித்யையுள்ளவனுக்கு அதற்கு அங்கமாக விதிக்கப்பட்ட வர்ணாச்ரமதர்மங்கள் போலும், விதிக்காமலே வேண்டுமவையான ச்ரவணம், மனனம் என்றவைபோலும் மௌனமென்ற துணை வேறென்றும் விதிக்கப்படுவதாம். இது பாண்டித்யம், பால்யம் என்கிற இரண்டு வேறு துணைகள்போலே மூன்றாவதாம். மௌனம் என்பதற்கு 'மந்தவ்ய:' என்று சொல்லப் பெற்ற மனனம் பொருளன்று. 'முநி:' என்ற சொல்லானது சிறந்த மனனமுள்ளவர்விஷயத்திலேயே பரிவுடன் ப்ரயோகிக்கப்படுகிறதாம். சிறந்த மனனமாவது த்யானம் பண்ணப்படும் விஷயத்தைப் பற்றியே எப்போதும் சிந்தித்துக் கொண்டிருப்பது. ஆக முனிசப்தத்திற்கு ப்ரஸித்தமாயுள்ள பொருளைக் கொண்டு அது விதிக்கப்படாமல் ஸித்திக்கிறதன்றாகையாலே விதிக்கப் படுகிறதென்னவேண்டும். (45)

க்ருத்ஸ்நபாவாத் து க்ருஹிணா உபஸம்ஹார: 3–4–46.

'முனி:' என்று மௌனத்தை விதித்ததாலே ஸன்னியாஸிகளுக்கே வித்யையில் அதிகாரமென்று நினைக்க வேண்டா. ப்ரஹ்மசாரி, க்ருஹஸ்தன், வானப்ரஸ்த்தன், ஸன்னியாஸி என்ற எல்லோரிடத்திலும் வித்யை யிருப்பதால் தானே சாந்தோக்யத்தின்முடிவில், "ஆயுள் முடிவுவரை குடும்பத்தில் இருந்துகொண்டு தர்மானுஷ்டானத்துடன் வித்யையைச் செய்கிறவன் ப்ரம்மலோகத்தை யடைகிறான்" என்றது. (46)

மௌநவத் இதரேஷாம் அபி உபதேசாத். 3-4-47.

'முனி:' என்கிறவிடத்திலே 'பிக்ஷை யெடுத்து உண்டார்கள்' என்றதாலே ஸன்னியாஸிக்கே மௌனமும் வித்

யையும் என்னவொண்ணுது, பிக்ஷாசர்யத்தைப் போலே மற்ற ஆச்ரமதர்மங்களையும் உபதேசித்திருக்கிறதே. (47)

(13) அநாவிஷ்காராதிகரணம்

அநாவிஷ்குர்வந் அந்வயாத். 3-4-48.

கீழ்ச்சொன்ன வாக்யத்திலே பால்யத்தோடிருக்க விரும்பவேண்டுமெனவிருக்கிறது பால்யமாவது பாலப்ராயமன்று. அது வயதானவனுக்கு வரமாட்டாதே. ஆக பால்யம் பாலனது செயல். அதாவது என்ன என்று விசாரிக்கப்படுகிறது, இன்ன செயல் என்று குறிப்பிடாமையால் எல்லாச் செயலுமாகும். ஆகையால் எதை வேண்டுமாலும் செய்வதும் எங்கு வேண்டுமானாலும் திரிதலும், இஷ்டப்படி உண்பது மெல்லாமாம். வித்யையின் மஹிமையினாலே யொன்றும் வாராதென்றது பூர்வபக்ஷம்—ஸித்தாந்தமாவது—'தீய நடத்தை யினின்று விலகாமல், சமதமாதிகளைப் பெருமல் வித்யையினால் பரமாத்மாவைப் பெறமுடியாது' என்றவாறு பல வசனங்களால் வித்யையில் இழிந்தவன் விஷயத்திலேயே தடை விதிக்கப்பட்டிருப்பதால் இஷ்டப்படி யெல்லாம் செய்யலாகாது. ஆகையால் பால்யமாவது அநாவிஷ்காரம். அதாவது—தனது குல-கோத்ர-வித்யா-ஸம்பத் ப்ரபாவங்களை அவற்றை யறியாத பாலன்போல் வெளியிட்டுக்கொள்ளாமலிருப்பதாம். (48)

(14) ஐஹிகாதிகரணம்

ஐஹிகம் அப்ரஸ்துத ப்ரதிபந்தே தத்தர்சநாத் 3-4-49.

மோக்ஷத்திற்காக உபாஸனங்கள் போலே போகத்திற்கும் (ஐச்வர்யபலனுக்கும்) சில உபாஸனங்கள் விதிக்கப்பட்டுள்ளன. அதற்கும் விரகாகப் புண்யகர்மங்கள் உள. அவற்றைச் செய்தால் உடனே உபாஸனம் ஏற்பட்டுவிடுமா அல்லது தாமதமுண்டா என்பது விசாரம். காரணம் இருக்கும்போது கார்யம் பிறக்கவேண்டியதாகையால் தாமதமேன் என்கிருன் பூர்வபக்ஷி—தடையொன்றுமில்லாத புருஷனிடத்திலே ஐஹிக-உபாஸனம் உண்டாகிறது. தர்மத்தைச் செய்யும்போது உத்கீதாதி வித்யையுடன் செய்தால் தாமதமில்லையென்று வசனமிருப்பதால் அவ்வாறு செய்யாதபோது தடையுண்டாகில் தாமதப்படுமென விளங்குகிறதே. (49)

(15) முக்திபலாநியமாதிகரணம்

ஏவம் முக்திபலாநியம: தததவஸ்தாவத்ருதே:
தததவஸ்தாவத்ருதே: 3-4-50.

மோக்ஷபலங்களான உபாஸனங்களைச் செய்கின்றவர் செய்யும் புண்யகர்மங்கள் வைராக்யபூர்வங்களாய் மிகச்சிறந்தவையானதாலே அவை உடனே பலிக்கும். தடையிருக்க மாட்டாதென்றது பூர்வபக்ஷம். ப்ரம்மவித்துக்களிடத்திலே அபசாரப்படுவதென்றதே கொடிய பாபம். இது இவர் செய்யும் புண்யங்களையும் தடுக்கக்கூடியதாகையாலே இங்கும் (ப்ரதிபந்தாவஸ்த்தை அறியப்படுவதால்) தடையுண்டாகில் உபாஸனம் தாமதிக்கும்—இல்லையேல் விரைவிலாமெனத்தெளிக. (50)

3-ம் அத்யாயம் நான்காம் பாதம் முற்றிற்று.

3-ம் அத்யாயம் முற்றும்.

---

ஸ்ரீ

## நான்காம் அத்தியாயம் முதற்பாதம்

முன்சொன்ன உபாயத்திற்குப் பலனை(மோக்ஷத்தை)ச் சொல்வது இந்த அத்தியாயம். முதற்பாகத்தில் உபாஸனம் பெறச் செய்யவேண்டும் முறையைச் சொல்லி அந்த உபாஸனத்திற்கு இங்குண்டாம் பலனைச் சொல்லுகிறது.

(1) ஆவ்ருத்யதிகரணம்

ஆவ்ருத்தி: அஸக்ருத் உபதேசாத். **4–1–1.**

வித்யையினால் பலன்பெறுவது. வித்யையாவது ப்ரம்மத்தின் அறிவு. எவ்வாறு ப்ரம்மத்தை அந்தந்த வித்யைப்படி அறியவேண்டுமோ அவ்வாறு ஒருதரம் அறிவு பெற்றால் போதுமா, அல்லது மீண்டும் மீண்டும் அறிவை உண்டுபண்ணிக்கொள்ளவேண்டுமா என்பது முதல்விசாரம். பூர்வபக்ஷமாவது—'ஸக்ருத் க்ருத: சாஸ்த்ரார்த்த:' என்கிற நியாயமுண்டு. காலையில் ஸந்த்யையைச் செய்யவேண்டும், அக்னிஹோத்ரத்தைச் செய்யவேண்டும் என்ற விடங்களில் ஒவ்வொன்றையும் பலதரம் செய்வது உண்டோ? ஒருதரம் செய்தாலே சாஸ்த்ரம் விதித்தது செய்ததாகுமே. அதுபோல், ப்ரம்மத்தை இவ்வாறு அறிந்துகொண்டால் மோக்ஷமென்ற வாக்யத்திலும் ஒருதரம் அறிவே போதுமானதென்றதாம்--ஸித்தாந்தமாவது—மேன்மேலாக்கவேண்டும். வேதத்தில் வேதனத்தைச் சொல்லிவரும்போது உபாஸனச் சொல்லையும் உபாஸனத்தைச் சொல்லும்போது வேதனச் சொல்லையும் மாற்றிமாற்றிச் சொல்வதால் இரண்டுக்கும் பொருள் ஒன்றே கருதப்பட்டதெனத் தெரிகிறது. அவ்வாறே ஒரே விஷயத்தைச் சொல்லும் பல ஸந்தர்பங்களிலே

ஓரிடத்தில் பிரம்மத்தையறிந்தவன் வீடு பெறுகிறான் என்றது; வேறிடங்களில்-வீடுபெற ஆத்மாவைக்காணவேண்டும் கேட்கவேண்டும், சிந்திக்கவேண்டும், உபாஸிக்கவேண்டுமென்கிறது—இங்கு ஆத்மாவும் பிரம்மமும் ஒன்று என்றது போல் வேதனமும் உபாஸனமுமொன்றென்றதும் தேறும். அதைச் சொல்லவேண்டுமிடத்திலே இதைச்சொன்னதால். ஆகையால் மீண்டும் மீண்டும் நினைப்பதாகிற உபாஸனமாகிற வேதனமே உபாயமாகும். (1)

லிங்காத் ச. 4-1-2.

ஸ்ம்ருதிவாக்யத்தினாலு மிவ்வாறேயாம். 'என்னை த்யானம் செய்கின்றவரை விரைவில் நான் வீடு பெறச் செய்கிறேன்', 'ஜீவாத்மாவை யார் உபாஸிக்கின்றனரோ', 'த்யானமாவது வேறொரு வஸ்துவிலே நோக்கமின்றி அவனது உருவத்தைத் தொடர்ச்சியாக நினைப்பதாம்' என்றவாறு. (2)

(2) ஆத்மத்வோபாஸநாதிகரணம்

ஆத்மா இதி து உபகச்சந்தி க்ராஹயந்தி ச. 4-1-3.

ஸித்தாந்தத்தில் ஜீவாத்மா வேறு, பரமாத்மா வேறு. ஜீவாத்மாவையும் அவனை ஏவுமவனையும் வெவ்வேறாக நினைத்து மோக்ஷம் அடைகின்றானென்றும் வேதமுளது. ஆகையால் வேறென்றே உபாஸனம்,'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற உபாஸனம் ஸந்தேஹத்திற்கிடமாமென்றது பூர்வபக்ஷம். ஸித்தாந்தமாவது—வேறென்பது உண்மை. ஆகையால் ஒன்றென உபாஸித்தல் கூடாததே. ஆனாலும் சரீராத்மபாவம் முக்கியமானதாகையால் அதை விடாமல் எனக்கு அந்தராத்மா அவன் என்றே உபாஸிக்கவேண்டும். இதையே, தத் த்வம் அஸி, த்வம் வை அஹம் அஸ்மி' இத்யாதிவாக்யங்கள் சொல்லுகின்றன. நான் மனுஷ்யன் என்றவிடத்தில் மனுஷ்யன் என்பதற்கு மனிதவுடலுக்கு ஆத்மாவென்று பொருளாகின்றபடியால் எந்தச் சொல்லும் அந்தந்த வஸ்துவைச் சொல்லி அதன் ஆத்மாவையும் சொல்வதாகையால் அஹம் என்ற சொல்லும் என் அந்தர்யாமி என்ற பொருளதாம். இப்படி சரீராத்மபாவோபாஸனம் செய்வதிலிருந்தே அவன் வேறு நான் வேறென்ற உபாஸனமும் சித்தித்ததாம். உடலும் உயிருமொன்றாகாவே. ஆகவே அந்தராத்மா என்றே எல்லோரும் உபாஸிக்கின்றனர், சாஸ்த்ரங்களும் அறிவிக்கின்றன. (3)

(3) ப்ரதீகாதிகரணம்

ந ப்ரதீகே ந ஹி ஸ: 4-1-4.

ப்ரதீகமாவது உடல். ப்ரம்மத்திற்கு உடலான உலகிலுள்ள வஸ்துவை ப்ரம்மமாக ஏறிட்டு உபாஸனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன, மனத்தை ப்ரம்மமென்று உபாஸிக்க வேண்டுமென்றவாறு. அங்கே உபாஸிக்கப்படுகிறது மனது—அது உபாஸிக்கிறவனுக்கு அந்தராத்மாவன்றாகையாலே அங்கு முன் அதிகரணத்திற் சொன்னவண்ணம் உபாஸனமில்லை. ஆகையால் ப்ரதீகோபாஸனங்களிலும் ஆத்மாவாகச் சிந்தனை யுண்டென்ற பூர்வபக்ஷம் சரியன்று. (4)

ப்ரஹ்மத்ருஷ்டி: உத்கர்ஷாத். 4-1-5.

மனத்தைப் ப்ரம்மமாக நினைக்காமல் ப்ரம்மத்தை மனமாக ஏறிட்டுக்கொண்டால் அப்போது உபாஸிக்கப்படும் ப்ரம்மத்தைத் தன் அந்தர்யாமியாக நினைக்கலாமே யென்னில், தாழ்ந்த வஸ்துவை உயர்ந்தவஸ்துவாகச் சொன்னால் புகழ்ச்சியாம், உயர்ந்ததைத் தாழ்ந்த வஸ்துவாகச் சொல்வது நிந்தை. அரசனை இந்த்ரன், சந்த்ரனென்னலாம், ஆடு, மாடு என்னலாமோ. (5)

(4) ஆதித்யாதிமத்யதிகரணம்

ஆதித்யாதிமதய: ச அங்கே உபபத்தே: 4-1-6.

தாழ்ந்த வஸ்துவை உயர்ந்த வஸ்துவாகப் பார்க்க வேண்டுமென்று கீழே சொல்லிற்று. 'தவிக்கின்ற சூரியனை உத்கீதத்தை உபாஸிக்கவேண்டும்' என்ற வாக்யத்தின் பொருள் என்ன? சூரியனை உத்கீதமாகப் பார்ப்பதா, உத்கீதத்தை சூரியனாகப் பார்ப்பதா என்று ஸம்சயமுண்டாயிற்று. வாக்கியத்தின் அமைப்பைக் கொண்டு, உத்கீதமாக சூரியனைப் பார்க்கவேண்டுமென்றது பூர்வபக்ஷம். ஸித்தாந்தமாவது—உத்கீதமென்பது கர்மாங்கம், கர்மாவானது பலத்தை யளிப்பதாகையாலே சிறந்தது. ஆகையால் உத்கீதம் உயர்ந்ததாகாது. தர்மங்களெல்லாம் தேவதைகளுக்கு ஆராதனமானவை. ஆகையால் தேவதையே உத்க்ருஷ்டமானது. தர்மத்திற்கும் அங்கமான உத்கீதம் மிகத் தாழ்ந்தது. ஆகையால் கர்மங்கமான வஸ்துக்களிலே சூரியனைப் போன்றவற்றின் த்ருஷ்டியே சாஸ்திரத்தின் பொருள் என்றதாம. (6)

(5) ஆஸீநாதிகரணம்

ஆஸீந: ஸம்பவாத். 4-1-7.

உபாஸனம் உட்கார்ந்தவனாகவே யிருந்து செய்யப்பட வேண்டுமா, நடந்தும் கிடந்தும் கூடச் செய்யலாமா என்ற விசாரத்தில், எப்படி வேண்டுமானாலும் செய்யலாமென்றது

பூர்வபக்ஷம்.உபாஸனமென்பது வைத்த குறி மாருமலிருந்து செய்யப்படவேண்டும். குறிவைத்தபடி யிருப்பதென்பது உட்கார்ந்தவனுக்கேயாம். மனத்தை ஒரேயிடத்தில் நிறுத்துவதென்பது நடக்கும் போதிராது. படுத்தால் மனதுமுறங்கும். (7)

த்யாநாந் ச. 4-1-8.

உபாஸனத்தை த்யான மென்கிறது. த்யானமென்பது தாரணையிராமல் பெறக்கூடியதன்று. அந்த ஏகாக்ரத்வம்—குறிதவருமை வேண்டும். வேருென்றின் அறிவு இடையிற் புகாதபடி தைலதாரையைப்போலிடைவிடாது இஷ்டவஸ்துவின் நினைவுகளின் தொடர்ச்சியே த்யானமென்னப்படும். (8)

அசலத்வம் ச அபேக்ஷ்ய. 4-1-9.

அசையாமலிருக்கும் வஸ்துவைப் பார்த்து, 'பூமி த்யானம் செய்கிறது போலும், ஆகாயம் த்யானம் செய்கிறது போலும்' என்று ஓதப்படுகிறது. ஆகையால் த்யானிக்கும் போது அசையாமை வேண்டும். அது உட்கார்ந்தால்தான் பெறப்படும். (9)

ஸ்மரந்தி ச. 4-1-10.

'ஆத்மா பரிசுத்தனுவதற்கான யோகத்தை ஆஸனத்தில் அமர்ந்து செய்யவேண்டும்' என்றது ஸ்ம்ருதிவாக்யம்.

யத்ர ஏகாக்ரதா தத்ர அவிசேஷாத். 4-1-11.

உட்கார்ந்துதான் என்று கட்டுப்படுத்துவதாலுல் இந்த தேசத்தில்தான் இந்தக் காலத்தின்தான் என்று கூட வ்யவஸ்தையிருக்கட்டும். இதில்லையாலுல் அஃதென் என்ன வேண்டா. நமக்கு வேண்டியது ஏகாக்ரத்வம். அது உட்கார்ந்தால்தாகுகும். எந்த தேசத்திலும் எந்தக் காலத்திலும் ஏகாக்ரத்வம் கூடுமாகையால் அவற்றில் நிர்ப்பந்தமில்லை. ஆகையாலேயே, "பருக்கைக்கல், முள் முதலியன இல்லாத, கண்களை பாதிக்காத இடத்திலே" என்று பொதுவாகவே தேசம் சொல்லப்பட்டிருக்கிறது. (11)

(6) ஆப்ரயாணுதிகரணம்

ஆப்ரயாணுத் தத்ர அபி ஹி த்ருஷ்டம். 4-1-12.

இப்படிச் செய்யப்படும் மோக்ஷார்த்தமான உபாஸனம் ஒரு நாளில் செய்யப்பெற்ருல் போதுமா, உடலினின்று புறப்படும்வரையில் வேண்டுமா என்ன, 'ஒருநாள்போதும் ஆயுள் வரையில் என்ற வசனம் சிலர் ப்ரீதியினுல் ஆயுள்வரையில் ஸ்வதந்த்ரமாய்ச் செய்வதைக் கொண்டு வந்ததாகலாம்;

ஆயுள் முழுதும் க்ருஹஸ்தனுகவே யிருக்கலாமென்பதற்கு மாம்; ஆயுளுக்குப் பிறகே பலன் என்பதற்குமாம்' என்கிருன் பூர்வபக்ஷி. வசனத்திற்கு ஸ்வதந்த்ரமாகப் பொருள் கூறுவது உசிதமன்று. ஆயுள்வரையில் அங்கிக்காகவே அங்கங்களானபடியால் அங்கங்களான தர்மங்கள்போல் அங்கியான உபாஸனமும் செய்யவேண்டியதேயாகும் என்றது சித்தாந்தம். (12)

(7) ததநிகமாதிகரணம்

ததநிகமே உத்தரபூர்வாகயோ: அச்லேஷவிநாசௌ தத்வ்யபதேசாத். **4-1-13.**

உபாஸனம் செய்யவேண்டும் வகை வரையப்பெற்றது. இங்கே உபாஸனம்பெற்றவுடனே பெறப்படும்பலன் பணிக்கப்படுகிறது. 'உபாஸனத்தைப்பெற்றவனுக்கு அதற்குமுன் செய்ததீவினைகள் தொலையும், பின்தீவினைகள் படா' என்பது உண்டா இல்லையா என்று விசாரிக்கப்படுகிறது. இல்லையென்கிருன் பூர்வபக்ஷி. நூற்றுக்கணக்கான கல்பகோடிகள் சென்ருலும் அனுபவிக்கப்படாமல் கர்மம்அழியாதென்று வசனமிருப்பதால் அனுபவிக்காதபோது கர்மங்கள் கழிய வழியில்லையென்பதால். ஸித்தாந்தமாவது—கர்மங்கள் தொலையுமென்கிற வாக்யத்திற்கும் அதற்கும் முரண்பாடில்லை. கர்மங்கள் பிறக்கும்போது பலனையுண்டுபண்ணும் சக்தியோடே பிறக்கின்றனவென்பது, 'புசிக்கப்படாமல் கர்மம் கழிவதில்லை' என்கிற வாக்கியத்தினின்று ஏற்படும். கர்மங்கள் தொலையுமென்கிற வாக்கியத்திற்குப் பொருள் என்னவென்ருல், அந்தக் கர்மங்களுக்கிருக்கும் சக்தியையும் போக்கச் சில உள என்றதாம். ப்ராயச்சித்தம் செய்யாத பாபியைப் பார்த்து, உன் கர்மாவானது நீ அனுபவிக்காமல் தீராதென்கிருேம். அதற்கு ப்ராயச்சித்தம் செய்தால்கூடப் போகாதெனப் பொருளில்லையே. அதுபோலிங்கும். ஆகையால் உபாஸிப்பவனிடத்திலே பாபம் லேபிக்காதென்கிற வாக்யத்தைக் கொண்டு மேலே வரும் தீவினைக்கு அந்த சக்தியே உண்டாவதில்லையென்றும், 'உபாஸிப்பவனுடைய பாபங்கள் தீயிற்பட்ட நாணற்பூக்கள் போல் போகின்றன' என்ற வாக்கியத்தால் முன்தீவினைகளின் சக்தி அழிந்துவிடுகிறதென்றும் கொள்வதாம். (13)

(8) இதராதிகரணம்

இதரஸ்ய அபி ஏவம் அஸம்ச்லேஷ: பாதே து. **4-1-14.**

பாபத்தின் சக்தியே போவது. புண்யத்தின் சக்தி இருக்கும். ஏனெனில், அதன் பலன் ஜீவனுக்கு இஷ்டமாயிற்றே

என்றுன் பூர்வபக்ஷி. மோக்ஷம் விரும்பினவனுக்கு அதற்கு விரோதிகளெல்லாம் அநிஷ்டங்களே. ஆகையால் அதன் பலனையும் நரகம்போல் அவன் நினைப்பதால் நல்வினையின் சக்தியும் இல்லை என்னவேண்டும். ஆக முன் ஸூத்ரத்தில் பாபத்திற்குச்சொன்ன இரண்டும் புண்யத்திற்குமுள என்ற தாம். ஸூத்ரத்தில் அஸம்ச்லேஷ: என்றிருக்கும்போது விநாசத்தையும் சேர்க்கலாமோ என்னவேண்டா. ஏவம் என்கிற சொல்லாலே அச்லேஷம் விநாசம் இரண்டும் சொல்லப்பெற்றன. ஆக 'அஸம்ச்லேஷ: பாதே து' என்று மேற்சொல்லோடே அஸம்ச்லேக்ஷபதம் சேரும். அதன் பொருளாவது—உபாஸனத்திற்கு முன் செய்த நல்வினைகள் போகுக. பின்செய்யப்பட்டவை உபாஸனம் செய்கிறே மென்றறிந்தே வேண்டுமென்றே செய்யப்பட்டதால் பல னளிக்குமென்கிற கேள்விக்கு விடை யளிப்பது இது. மழை, அன்னம், ஆரோக்யம் போன்ற பலன்கள் உபாஸனம் நிறைவேறுவதற்காக வேண்டியிருப்பதால் அவற்றிற்காகச் செய்த நல்வினைகள் பலனை யளிக்கின்றனவாகுலும் அவ னுக்கு வேண்டும் அளவுக்கு மேலாகி மிகுந்த நல்வினைகள் இவையென்று, பரமாத்மா அவன் உடல் விழவேண்டும் தருணம் வந்தபோது, பார்த்து அப்போதே அவற்றிற்கு அச்லேஷம் செய்யலாமே. எப்படியும் பின்நல்வினைகளுக்கு அச்லேஷம் சொன்னது பொருந்தும். 'அஸம்ச்லேஷ:' என்றவிடத்தில் ஸம் என்ற உபஸர்க்கமானது சிறிது ச்லேஷமுண்டென்கிறதையும் குறிக்கும். இவனுக்குப் பலன் கொடுக்கப் புறப்பட்ட நல்வினையில் சிறிது பலன் பாக்கி யிருக்கும்போதே கூட அவனுக்கு ப்ராரப்தகர்மம் முடி வுறுமே. (14)

*(9) அநாரப்தகார்யாதிகரணம்*

**அநாரப்தகார்யே ஏவ து பூர்வே ததவதே: 4-1-15.**

'எல்லாப் பாபங்களும் போகின்றன' என்றே வாக்கிய முளதால் எல்லாம் போகின்றன என்றுன் பூர்வபக்ஷி. முன்செய்த வினைகளில், 'இவற்றின் பலனை இந்த ஜீவன் அனுபவிக்கவேண்டும்' என்று ஈச்வரன் ஸங்கல்ப்பம் செய்து பிரித்துவைக்கப்பட்ட வினைகள் சில; இவை ஆரப்தகார்யங் கள் என்றும், ஆரப்தங்களென்றும், ப்ராரப்தங்களென்றும் சொல்லப்படும். இவற்றின் அனுபவம் ஆனபிறகுதான் அளிக்கவேண்டுமென்று சேகரிக்கப்பட்டிருப்பவை சில; அவை அநாரப்த கார்யங்கள், ஸஞ்சிதம் எனப்படும். முன்வினைகள் என்று அந்த ஸஞ்சித புண்யபாபங்களையே

கொள்ளவேண்டும். ப்ராரப்த புண்யபாபங்களுக்கான பலன்களை அனுபவித்தாகவேண்டுமாகையால் உபாஸனம் தொடங்கின பிறகு அவற்றையும் பெற்ற பிறகுதான் மோக்ஷம். இதைத்தான், 'எவ்வளவு காலம் விடப்படாமலிருக்கிறுனே அவ்வளவுகாலம் உபாஸகனுக்கு தாமதம்' என்கிறவாக்கியம் கூறும். எல்லாம் அழியுமாகில் உபாஸனம் பிறந்தவுடனே உள்ள உடலும் அழிய உடனே மரணமாமே. அஃதில்லையே. (15)

(10) அக்நிஹோத்ராத்யதிகரணம்

**அக்நிஹோத்ராதி து தத்கார்யாய ஏவ தத்தர்சநாத். 4-1-16.**

நல்வினைகளும் கழியுமாகையால் உபாஸகன் அக்னிஹோத்ரம் முதலானவற்றைச் செய்யலாகாதென்றது பூர்வபக்ஷம். வேறு பலனில்லையாகிலும், உபாஸனம் பெறுவதென்ற கார்யத்திற்காகவே அவையென்று வேதங்களின்று தெரிவதால் செய்யவேண்டுமென்பது ஸித்தாந்தம். (16)

நல்வினைகள் இவ்வாறு வித்யையை உண்டுபண்ணுவதற்காகில் நல்வினைக்கு அச்லேஷமென்றும் இவன் மரணமடையும்போது இவனது சினேகிதர்கள் அதைப் பெறுகிறுர்களென்றும் சொன்னது சேரா என்னில்—

**அத: அந்யா அபி ஹி ஏகேஷாம் உபயோ: 4-1-17.**

வர்ணுச்ரம தர்மமாக அவனுல் செய்யப்படும் அக்னிஹோத்ராதிகளைக் காட்டிலும் வேருக மழை, அன்னம், ஆரோக்யம் என்ற பலன்களுக்காக அவன் செய்த நல்வினைகளிலும் சில மிகுந்துள்ளன, உபாஸனத்திற்கு முன்செய்த நல்வினைகளிலும் இவனுல் அனுபவிக்கப்படாமல் பெரும்பான்மையானவை உள. ஆகையால் முன்நல்வினைகளிலும் பின்நல்வினைகளிலும் மிகுந்தவை யிருப்பதைக் கொண்டு சில வேதமோதினவர்கள் 'நல்வினைகளை சினேகிதர்கள் அடைகிறுர்கள்' என்றது. (17)

**யத் ஏவ வித்யயா இதி ஹி. 4-1-18.**

உத்கீத வித்யையோடு சேர்த்துச்செய்த வினைகள்தாம் தாமதமின்றி பலனளிக்குமென்று முன்சொன்னேமே. உபாஸகன் அவ்வித்யையை விட்டுச் சில வினைகளைச் செய்திருந்தால் அவை அவனுக்குப் பலிக்காமல் காலம் பார்த்து நிற்குமே. அவையெல்லாம் சினேகிதர்களுக்காம். (18)

(11) இதரக்ஷபணுதிகரணம்

**போகேந து இதரே க்ஷபயித்வா அத ஸம்பத்யதே. 4-1-19.**

உபாஸனம் எந்த சரீரத்திலே ஏற்பட்டதோ, அந்த

சரீரத்தின் முடிவிலேயே ப்ராரப்த கர்மங்கள் முடிவுறும். 'விடுபடுகிறவரையில் தாமதம்' என்றதற்கு அவ்வளவே பொருள் என்பது பூர்வபக்ஷம். 'யாவத் ந விமோக்ஷ்யே' என்பதற்கு, 'எவ்வளவுகாலம் இந்த உடலினின்று விடுபடாமலிருக்கிறேனே அவ்வளவு காலம்' என்று பொருள் இல்லை. ப்ராரப்த கர்மாவினின்று விடுபடாமலிருக்கிறேனே என்பதே. அது ஒரே சரீரத்திலும் சிலருக்கு முடிவுறும்; பல சரீரங்களுக்குப் பிறகுமாம். (19)

நான்காம் அத்தியாயம் முதற்பாதம் முற்றிற்று.

---

## நான்காம் அத்தியாயம் 2-ஆம் பாதம்

ப்ராரப்தமெல்லாம் போனபிறகுப் புறப்படும் வகை பணிக்கப்படுகிறது. முதலிற் பொதுவிலே எல்லோருக்குமுள்ள வகையும் விளக்கப்படுகிறது.

(1) *வாகதிகரணம்*

**வாக் மநஸி தர்சநாத் சப்தாத் ச. 4–2–1.**

புருஷன் மரணமடைய அவன் வாக்கு மனத்தில் ஸம்பந்நமாகிறது என்கிறது வேதம். ஸம்பந்நமாகிறதென்றால் என்ன என்று விசாரிக்கப்படும். ஸம்பத்தி யென்பது லயமென்னலாகாது. வாக்கென்ற இந்திரியத்திற்கு மனது காரணமன்றே. குடம் மண்ணிற்போல் கார்யம் காரணத்தில் தானே லயிக்கும். ஆகையால் வாக்கின் செயல் மனத்தில் லயிக்கிறதென்று பொருள் கொள்கிறான் பூர்வபக்ஷி. ஸித்தாந்தமாவது—வாக்கின் வியாபாரத்திற்கும் மனது உபாதாநகாரணமன்றாகையாலே லயம் சொல்லவியலாது. இனி வாக்கில் வியாபாரத்தைச் செய்யும் மநோவ்யாபாரம் மனத்தில் லயிக்கின்றதென்றெல்லாம் தடுமாறவேண்டும். எதற்கிவ்வளவு? ஸம்பத்தியாவது சேர்க்கையே. வாக்கின் வியாபாரமும் மனத்தில் லயிக்கமாட்டாதென்பது காணப்படுகையாலும் வாக் என்ற சொல்லைக்கொண்டும் வாக்கு மனதுடன் சேருகின்றதென்றவளவே பொருள். (1)

**அத: ஏவ ஸர்வாணி அநு. 4–2–2.**

ஆகையாலேயே வாக்குடன் இந்திரியங்களும் மனத்தில் சேருகின்றன என்றே இந்திரியஸம்பத்தி ச்ருதிக்கும் பொருளாம். (2)

(2) *மநோதிகரணம்*

**தத் மந: ப்ராணே உத்தராத். 4–2–3.**

மனது ப்ராணனில் ஸம்பந்நமாகிறது' என்ற இடத்திலே லயம் சொல்லப்படலாம், மனம் அன்னமயமென்றும்

ப்ராணன் நீர்மயமென்றும் வேதம் சொல்லும். அன்னமாவது ப்ருதிவீ. அதற்கு உபாதாநகாரணம் நீர். ஆக நீரான ப்ராணனிலே ப்ருதிவியான மனம் லயிக்கலாமே என்கிறுன் பூர்வபக்ஷி. மனம் முதலிய எல்லா இந்திரியங்களும் அஹங்காரமென்னும் தத்துவத்தினின்று உண்டானவை; ப்ராணன் வாயுவிகாரம். அன்னமயம் நீர்மயமென்றது, உணவில் அன்னபாகத்தினுல் மனதுக்கும், நீர்ப்பாகத்தாலே் ப்ராணனுக்கும் புஷ்டியேற்படுவதால் மட்டுமாம். ஆக மனத்திற்குப் ப்ராணன் காரணமாகாதாகையால் ப்ராணனேடு மனம் சேருகிறதென்றே பொருளாம். (3)

(3) அத்யக்ஷாதிகரணம்

ஸ: அத்யக்ஷே ததுபகமாதிப்ய: 4-2-4.

'ப்ராணன் தேஜஸ்ஸில் ஸம்பன்னமாகிறது' என்றது மேல் வாக்கியம். ஆகையால் ப்ராணன் தேஜஸ் என்ற பூதத்துடனே சேரும் ஜீவனேடன்று என்றது பூர்வபக்ஷம். 'மரணகாலத்தில் எல்லா ப்ராணன்களும் ஆத்மாவுடன் சேரும்', 'ஜீவன் புறப்பட அவனைப் பின்தொடர்கிறது ப்ராணம்' என்று சேருவதும், பின் புறப்படுவதும் தெரிவதாலும், முதலில் ஜீவனேடு சேர்ந்து பிறகு தேஜஸ்ஸில் சேர்ந்தாலும் கங்கைவாயிலாகக் கடல்சேருவதைக்கொண்டு யமுனைகடல் சேருமென்பது போல் சொல்லக்கூடுமாகையாலும் ப்ராணன் தனக்கு அதிபதியான ஜீவனிடம் சேரும்.

(4) பூதாதிகரணம்

பூதேஷு தச்ச்ருதே: 4-2-5.

ப்ராணன் தேஜஸ்ஸில் சேருகிறுனென்றே முன்வசனம் இருப்பதால் ப்ராணனுடன் சேர்ந்த ஜீவன் தேஜஸ் என்ற ஒரு பூதத்துடனே சேருகிறுன் என்பது பூர்வபக்ஷம். ஸித்தாந்தமாவது—வேறிடத்தில் இவனை, ப்ருதிவீமயன் ஆபோமயன் என்றவாறு ஸர்வபூதமயனுகச் சொன்னதால் எல்லா பூதங்களோடும் சேர்வதாம். (5)

ந ஏகஸ்மிந் தர்சயத: ஹி. 4-2-6.

மேலும், வேதமும் ஸ்ம்ருதியும் ஒரு பூதத்தினுல் கார்யமாகாதென்று த்ரிவிருத்கரணம், பஞ்சீகரணம் என்பவற்றையறிவிப்பதால் ஒரு பூதத்தில் சேருகிறுனல்லன். (6)

(5) ஆஸ்ருத்யுபக்ரமாதிகரணம்

ஸமாநா ச ஆஸ்ருத்யுபக்ரமாத் அம்ருதத்வம் ச அநுபோஷ்ய. 4-2-7.

இது வரையில் உடலை விட்டுப் புறப்படும் வகை சொல்லப்பட்டதே, இது பரவித்யையை யனுஷ்டிக்காத கர்மி விஷயத்திலேயாம். 'ஹ்ருதயத்திலுள்ள காமங்களெல்லாம்

அழிந்தபோது மனிதன் அம்ருதனுகி இங்கே ப்ரம்மத்தைப் பெறுகிருன்' என்கிற வாக்யத்திலே எங்கும் செல்லாமலே ப்ரம்மத்தைப் பெறுவது சொல்லப்பட்டதால் என்பது பூர்வபக்ஷம். ஸித்தாந்தமாவது—அர்ச்சிராதிமார்க்கத்தினுல் தான் பிரம்மத்தைப் பெறவேண்டும். ஆகையால் உடலை விட்டுப் புறப்படும் வகை கீழ்ச்சொன்னது இருவருக்கும் பொது. தன் வழியிற்புகும்வரை பொது; பிறகு வேறு. முன் சொன்னவாக்யத்திலே அம்ருதனுகையாவது அநுபோஷ்ய-சரீரத்தைத் தஹிப்பதற்கு முன்வரக்கூடியதொன்று. உபாஸனம் செய்ததற்குரிய நிலை யது (பூர்வோத்தரபுண்ய பாபாச்லேஷ விநாசங்கள் பெற்றிருப்பது) 'அந்த வாக்கியத்திலே 'அத்ர ப்ரஹ்ம ஸமச்நுதே' என்கிற பாகத்திற்கு இவ்வுலகிலேயே ப்ரம்மத்தைப் பெறுகிருனென்று பொருளன்று. அத்ர என்றதற்கு இந்நிலையில் என்பது பொருள். இந்நிலையாவது மூன்று பாதங்களால் பணிக்கப்பட்ட நிலை. காமங்கள் கழிந்து உபாஸனம் செய்வதென்பது ஏற்பட்டபிறகு ஜீவன் ப்ரம்மத்தை யர்ச்சிராதி மார்க்கத்தாலே பெறுகிருனென்பதே வாக்கியத்தின் பொருளென்க. ('அத்ர ப்ரஹ்ம ஸமச்நுதே' என்பதற்கு இவ்வுலகிலும் பக்திமயமான ப்ரம்மஸாக்ஷாத்காரத்தைப் பெறுகிருன் என்று பொருள் உரைப்பதுமுண்டு. எப்படியும் மோக்ஷமென்கிற ப்ரம்மப் ப்ராப்தியானது உடலைவிட்டுச் சென்றே பெறப்படும்.) (7)

**தத் ஆபீதே: ஸம்ஸாரவ்யபதேசாத்.** **4–2–8.**

ஆபீதே:=ஆ அபீதே:. ப்ரம்ம ப்ராப்தி வரையில் இவனுக்கு ஸம்ஸார ஸம்பந்தமிருப்பதாகவே சொல்லப்பட்டிருப்பதால் இவனுக்குக் கீழ்ச்சொன்ன விதமே யாம். (8)

ஸம்ஸாரமாவது சரீர ஸம்பந்தம். அது சரீரத்தினின்று வெளிக் கிளம்பினவனுக்குண்டோ என்ன வேண்டா—

**ஸூக்ஷ்மம் ப்ரமாணத: ச ததா உபலப்தே:** **4–2–9.**

போகிருனென்றதாலும், அர்ச்சிராதி மார்க்கத்திலே போகும் போது சந்திரனேடு ஸம்பாஷணை நடக்கிறதாக ப்ரமாணம சொல்வதாலும் நாம் காணமுடியாத ஸூக்ஷ்மமான சரீரத்துடன் ஸம்பந்தப்பட்டே யிருக்கிருன். (9)

**ந உபமர்தேந அத:** **4–2–10.**

ஆகையால் இவனுக்கு இங்குச் சொன்ன அம்ருதத்வம் அடியோடு சரீரத்தையே தொலைத்தால் வருமதன்று. (10)

**அஸ்ய ஏவ ச உபபத்தே: ஊஷ்மா.** **4–2–11.**

உடலினின்று ஜீவன் புறப்படும்போது ஓரிடத்தில் உஷ்ணம் தெரிகிறது. இது ஸ்த்தூலசரீரத்தின் உஷ்ண

மானால் எங்கும் உணர்தலாம். ஓரிடத்திலேயே உணர்ச்சியுளதாகையாலே முன் சொன்ன தேஜஸ் என்ற ஸூக்ஷ்ம சரீரத்தின் உஷ்ணமேயாம் அது. (11)

**ப்ரதிஷேதாத் இதி சேத் ந சாரீராத் ஸ்பஷ்ட: ஹி ஏகேஷாம். 4-2-12.**

சரீரத்தினின்று வெளிப்படுதல், லோகாந்தரம் செல்லல், திரும்பல் என்றவற்றைச் சொல்லி இதெல்லாம் ஸகாமன்விஷயமென்று முடித்துவிட்டு, நிஷ்காமன் விஷயமாகச் சொல்லத் தொடங்கி, "அவனது ப்ராணன்கள் வெளிப்படுவனவல்ல; ப்ரம்மமேயாகி ப்ரம்மத்தினிடம் லயிக்கிறான்" என்றவாக்யத்தாலே வெளிக்கிளம்புவதை மறுத்திருப்பதால் எப்படி இருவருக்குமிது ஸமானமாகுமென்னவேண்டா. அந்த வாக்யத்திற்கு, அவனுடைய ப்ராணன்கள் உடலை விட்டுப் பிரிவதில்லையென்ற பொருளில்லை; அவனை விட்டு ப்ராணன்கள் பிரிவதில்லை யென்பதே. இதனால் அவனைத் தொடர்ந்து செல்வதே சொன்னதாம். தஸ்ய என்று ஆறும் வேற்றுமை யிருக்க தஸ்மாத் என்ற ஐந்தாம் வேற்றுமைப் பொருள் கொள்ளலாமோவென்ன வேண்டா; இங்கு காண்வசாகையில் இவ்வாறாயினும் மாத்யந்திநசாகையில் ஐந்தாம் வேற்றுமையே நன்குளதே. இங்கும் தஸ்ய என்பதற்கு அவனுடைய என்ற பொருளைவிட்டு அவனுக்கு என்ற பொருள் கூடும். ஆகையால் இப்படி ஸூக்ஷ்ம சரீரம் வரை பெற்றுப் புறப்படுவது எல்லோருக்கும் ஸமானம்.(12)

**ஸ்மர்யதே ச. 4-2-13.**

வித்வான் தலையைச் சேர்ந்த நாடியினாலே புறப்பட்டு சூரியமண்டலத்தைப் பிளந்துகொண்டு பிரமனுலகையும் கடந்து பராங்கதி பெறுகிறானென்று ஸ்ம்ருதியும் சொல்லும். (13)

(6) பரஸம்பத்யதிகரணம்

**தானி பரே ததா ஹி ஆஹ. 4-2-14.**

'தேஜ: பரஸ்யாம் தேவதாயாம்' என்ற வாக்யம் தேஜஸ் ஸென்று சொல்லப்பட்ட பூதஸூக்ஷ்மத்தை உடலாக உடைய ஜீவாத்மாவுக்கு ஸம்பத்தியைச் சொல்லுகிறது. வித்வான் அவித்வான் இருவருக்கும் பொதுவாகக் கீழ்ச் சொன்னவாறு, புறப்பட்டவன் தனது கர்மம் அல்லது வித்யைக்குத் தக்க பலனைப் பெறவேண்டுவதே பொதுவாகச் சொல்லப்படவேண்டும். இடையில் பரமாத்மாவின் ஸம்பத்தியினாலாகவேண்டுவது மொன்றுமில்லை. ஆகையால் அந்தந்த லோகப்ராப்திதான் இதற்குப் பொருள். எல்லா லோகமும், எந்த வஸ்துவும் பராமாத்மாத்மகமாயிருப்பதாலே எல்லாவற்றிற்கும் பொதுவாகக் காரணமாய் அவன்

இருப்பதாலே பரமாத்மாவைச் சொன்னது அவற்றைச் சொல்வதற்காகவே என்றது பூர்வபக்ஷம். பரதேவதை யென்று ஸ்பஷ்டமாய்ச் சொல்லியிருக்க ஸ்வரஸமான பொருளை விடலாகாது. பரமாத்மாவை யடைவதன் பலனும், உறக்கத்தில் பரமாத்மாவை யடைவதற்குப்பலன் ஆயாஸம் விலகுகையென்கிறோமே, அது போலாம். (14)

(7) அவிபாகாதிகரணம்

அவிபாக: வசநாத். 4-2-15.

ஜீவனுக்குப் பரமாத்மாவினிடத்திற் சொன்ன ஸம்பத்தியானது முன்போல் சேர்க்கைமட்டுமன்று; லயமேயாம்; அவன் காரணமாகிறமையால் காரணத்தில் லயம்கூடுமே யென்பது பூர்வபக்ஷம். இத்தனை இடங்களில், 'ஸம்பத்யதே' என்ற சொல்லுக்குச் சொன்ன பொருளை விட்டு வேறு பொருள் கூறுவது யுக்தமன்று. சேர்க்கையென்ற பொருளே இங்கும் இசையும். ஆகையால் (போகவேண்டுமிடம் போய்ச் சேரும் வரை) பிரியாமலிருப்பதே பொருளாம். (15)

(8) ததோகோதிகரணம்

ததோக: அக்ரஜ்வலநம் தத்ப்ரகாசிதத்வார: வித்யாஸாமர்த்யாத் தச்சேஷகத்யநுஸ்ம்ருதியோகாச் ச ஹார்தாநுக்ருஹீத: சதாதிகயா. 4-2-16.

நூற்றொரு நாடிகள் தேஹத்திலிருக்க அவற்றிலொன்றாய்த் தலையைச் சார்ந்ததான நாடியினாலேயே புருஷன் வெளிவருகிறானென்னவொண்ணாது. அந்த நாடியைத் தெரிந்துகொள்ள இவனுக்கு ஸாமர்த்யம் ஏது? ஆகையால் எந்த நாடி வழியாகவும் புறப்படுவானென்றது பூர்வபக்ஷம். ஸித்தாந்தம்-நாடிகள் வெகு நுண்ணியவைகளே. அறிவது அரிதே. ஆயினும் ஜீவனுடைய ஸ்தானமான ஹ்ருதயமானது (தேஜஸ்ஸை உடலாக உடைய இவன் புறப்படும் போது) எதிரில் ஒளியுள்ளதாகிறது. அதற்கும் பரமாத்மாவின் அனுக்ரஹமே காரணம். வித்யையினுடைய சக்தியினாலும், இவன் தினந்தோறும் அதற்கு அங்கமாக மார்க்க சிந்தனை செய்து வந்ததாலும் ஹார்த்தனால் இவன் அனுக்ரஹிக்கப்படுகிறான், ஹார்தனாவான் ஹ்ருதயத்தினுள்ளே எழுந்தருளி யிருக்கும் அந்தர்யாமி. அவ்வனுக்ரஹத்தினாலே முன் ஒளி வீசினதால் வழி தெரிய நூற்றொன்றாவதான ஸுஷும்நா நாடியினாலே வெளிக்கிளம்புகிறான். (16)

(9) ரச்ம்யதிகரணம்

ரச்ம்யநுஸாரீ. 4-2-17.

'உடலினின்று வெளிவந்தவன் சூரியகிரணங்கள்வாயிலாக மேலே செல்லுகிறான்' என்றது ச்ருதி. இரவில் இறந்

த்வன் 'அவைவாயில்லாகப் போகமாட்டிலனுகையால் அப்படியே செல்வதென்பதில்லையெனப் பூர்வபக்ஷமாம். 'இவற்றினுலேயே' என்றிருப்பதால் அப்படியே செல்வான். இரவிலும் சூரியகிரணமுண்டு. இல்லையாகில் இரவில் வெப்பம் வியர்வையெல்லாமெங்ஙனம் கூடும்? பனிக்காலத்துப் பகல் போலிருப்பதில்லையே எல்லா இரவுகளும் என்பது சித்தாந்தம். (17)

(10) நிசாதிகரணம்

**நிசி ந இதி சேத் ந ஸம்பந்தஸ்ய யாவத்தேஹபாவித்வாத். 4-2-18.**

இரவில் இறந்தால் வீடு பெற வியலாது. அர்ச்சிராதி மார்க்கத்திலே பகலைச் சேர்த்திருக்கிறதே. இரவில் இறப்பை இகழ்ந்தும் கூறியுளர். ஆகையால் அது கீழ்மையினிற் சேர்வதற்காம் என்று பூர்வபக்ஷமாம். முன்னே இருவினைகளும் கழிந்ததால் ப்ராரப்தமுடிவைமட்டும் எதிர்பார்க்கிறவனுக்கு அது இரவில் முடிந்தாலும் ப்ரஹ்மப்ராப்தியே. கீழ்மைக்குக் காரணமான கர்மமுமில்லை. ப்ராரப்தம் முடிந்த பிறகு ஒரு நொடி நிறுத்தவும் காரணமில்லை. 'தேஹமிருக்கும் வரையில்தான் இவனுக்குக் கர்மஸம்பந்தம். அவனுக்கு அவ்வளவே தாமதம்' என்று வேதமோதிற்றே. (18)

(11) தக்ஷிணுயனாதிகரணம்

**அத: ச அயநே அபி தக்ஷிணே. 4-2-19.**

தக்ஷிணுயனத்திலிறந்தவனுக்குச் சந்த்ரஸாயுஜ்யம் சொல்லப்பட்டதால் சந்திரனைச் சேர்ந்தவர் திரும்பியாக வேண்டுமாதலால் அதிலிறந்தவனுக்கு வீடில்லை யென்றது பூர்வபக்ஷம். ப்ராரப்தம் கழிந்ததால் அப்போதும் வீடே. சந்த்ரயோகம் சொல்வது அங்கே சிறிது போகத்திற்கே. (19)

**யோகிந: ப்ரதி ஸ்மர்யேதே ஸ்மார்த்தே ச ஏதே. 4-2-20.**

யோகிகளுக்கு தேவயாநபித்ருயாணமார்க்கங்கள் சிந்திக்கப்படுவதற்காக ஸ்மிருதியில் சொல்லப்பட்டவை ஆனதால் அங்கே இரவு பகல் என்ற பொருளை விட்டு அததற்கு அபிமானிகளான தேவதைகளென்ற பொருள் கொள்க. (20)

4-ஆம் அத்யாயம் 2-ஆம் பாதம் முற்றிற்று.

---

## 4-ஆம் அத்தியாயம் 3-ஆம் பாதம்

உடலினின்று ஸுஷும்ன நாடிவழியாக வெளிப்பட்டு ஸூர்யகிரணங்களைப்பற்றி ஏறும் முமுக்ஷுவுக்கு, மேல் அர்ச்சிராதி மார்க்கம் இப்பாதத்தில் சொல்லப்படுகிறது.

(1) அர்ச்சிராத்யதிகரணம்

**அர்ச்சிராதிநா தத்ப்ரதிதே: 4-3-1.**

வித்யையினால் மோக்ஷம் பெறப்போகின்றவனுக்கு மார்க்கம் அர்ச்சிராதியுமாம் வேறுமாம் என்னலாமா, அர்ச்சிராதியேதானு என்று விசாரிக்கப்படுகிறது. சாந்தோக்யத்திலே, அக்னி, பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம், ஸம்வத்ஸரம், சூரியன், சந்திரன், மின்னல் என்று சொல்லி அமானவன் ப்ரம்மலோகம் அடைவிக்கிருன் என்றது. ப்ருஹதாரண்யகத்தில், பஞ்சாக்னிவித்யாநிஷ்டருக்கும், பிறர்க்கும் மார்க்கம் அக்னி, பகல், சுக்லபக்ஷம், தேவலோகம், சூரியன், மின்னலென்று ஓரிடத்திலும், 'இவ்வுகைத்தினின்று வாயுலோகம் செல்லுகிருன், அவனுக்கு வாயு வண்டிச் சக்கர த்வாரமளவு வழி யளிக்கிருன். மேல் சூரியனை யடைகிருன், அவன் ஆடம்பர வாத்தியத்தின் வாயளவுவழியளிக்கிருன், மேல்சந்திரனை யடைகிருன், அவன் துந்துபி வாத்தியத்தின் வாயளவு வழி விடுகிருனென்று வேறிடத்திலும் சொல்லப்பட்டது. இவைகளைத் தனித்தனியாகச் சொன்னபடி கொள்வதே தகுமென்பது பூர்வபக்ஷம். அர்ச்சிராதி மார்க்கத்திலுள்ளவற்றிற் சில எங்குமிருப்பதால், சொன்ன அம்சத்தினின்று மற்ற அம்சத்தையும் கொண்டு ஒரே மார்க்கமென்றே விசாரித்து முடிவு செய்யப்படுமென்றது ஸித்தாந்தம். (1)

(2) வாய்வதிகரணம்

வாயும் அப்தாத் அவிசேஷவிசேஷாப்யாம் 4-3-2.

முன் எடுத்த மூன்று வாக்யங்களிலே ஒரு வாக்கியத்தில் உத்தராயணம், ஸம்வத்ஸரம், சூரியன் என்ற க்ரமம் இருக்கிறது. மற்றென்றில் உத்தராயணம், தேவலோகம், சூரியன் என்றது. இந்த ஸம்வத்ஸரம், தேவலோகம் இரண்டுக்குள்ளே ஒன்று முன் மற்றென்று பின் என்ன வேண்டும், பகல், சுக்ல பக்ஷம், உத்தராயணம் என்ற காலவளவுக்குச் சேர ஸம்வத்ஸரத்தையும் கொண்டு அதன்மேல் தேவலோகமென்று எளிதிலறியப்பெற்றது. தேவலோகத்திற்கு மேல் சூரியன் என்று இப்போதேற்பட்டது, மூன்றுவது வாக்கியம் வாயுவுக்குமேல் சூரியன் என்றது. இந்த தேவலோகம், வாயு என்றவற்றில் என்ன க்ரமமென்பது விசாரம். ஏதேனுமொன்று முன்னுகலாம் என்கிறது பூர்வபக்ஷம் 'யாதொருவன் வீசுகின்றுன் இவன் தேவதைகளுக்கு இல்லம்' என்று வேதமிருப்பதால் தேவலோகமென்பதும் வாயுவுமொன்றே யாகையால் க்ரமவிசாரத்திற்கு இடமில்லை யென்பது ஸித்தாந்தம். (2)

(3) தடிததிகரணம்

தடித: அதி வருண: ஸம்பந்தாத். 4-3-3.

முன் சொன்ன வாக்யத்தில் வாயு, சூரியன், சந்திரன்,

மின்னல் என்ற அடைவிருக்கிறது. கௌஷீதகிப்ராம்மணத்தில், வாயுலோகம், வருணலோகம், இந்திரலோகம், ப்ரஜாபதிலோகம் என்ற க்ரமம் இருக்கின்றது. மின்னலினின்று அமானவ புருஷன் அழைத்துப்போகிறபடியாலே மின்னலுக்கு மேல் வருணாதிகளைச் சேர்க்கவியலவில்லையாகையால் கௌஷிதகிப்படி வாயுவுக்குமேல் வருணன் இந்திரன்,ப்ரஜாபதி என்றவர் வரிசையாக, பிறகு சூரியன் என்று கொள்ள வேண்டுமென்றது பூர்வபக்ஷம். வருணன் ஜலதேவதையானதால் மின்னலுக்கு மேலே வருணனாவான். அதன் மேலுள்ள வரிசைப்படியே இந்திராதிகளும். ஆக வாயு, சூரியன், சந்திரன், மின்னல், வருணன், இந்திரன், ப்ரஜாபதி என்ற அடைவாம். மின்னற் புருஷனுன அமானவனே இருக்க வருணாதிகள் எதற்கென்னவேண்டா. அவர்களும் தம்தம் எல்லை உள்ளவரையில் உடனிருந்து கௌரவித்து வழி நடத்துகின்றார்களென்க என்றது ஸித்தாந்தம். (3)

(4) ஆதிவாஹிகாதிகரணம்

ஆதிவாஹிகா: தல்லிங்காத். 4-3-4.

அக்னி, பகல், சுக்லபக்ஷம் எனப்பட்ட வஸ்துக்கள் வழிதெரிவதற்குள்ள அடையாளங்களா, வழி நடத்துகிற மஹான்களா என்றது விசாரம். ஓர் ஊருக்குப் போகின்றவனுக்கு, 'இந்த மரம், இந்த ஆறு, இந்த மலை கடந்து ஊருக்குப் போவதாம்' என்றால் அவையெல்லாம் வழிகாட்டியாவதுபோல் இவையுமென்றது பூர்வபக்ஷம். மின்னற் புருஷன் அமானவன் அழைத்துப் போகிறானென்று வழி நடத்துகிறவனாக அவனைச் சொன்னதால் வருணேந்த்ர ப்ரஜாபதிகளும் அத்தகையவராவதால் அக்னி முதல் எல்லோரும் வழி நடத்தும் தேவதைகளே. அக்னி பகல் முதலான வஸ்துக்களுக்கு அபிமானிகளான தேவதைகள் பரம புருஷனாலேஆதிவாஹிகர்களாக (கடந்துசெல்லவைக்கின்றவர்களாக) நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது சித்தாந்தம்.

வைத்யுதேந ஏவ தத: தத்-ச்ருதே: 4-3-5.

மின்னலுக்குமேல் முழுக்க வழிநடத்துவது மின்னற் புருஷனாலேயாம். அதனால் வருண-இந்திர-ப்ரஜாபதிகள் தம்தம் எல்லைவரையில் சிறிது தூரம் கூட நடத்துவதில் குற்றமொன்றுமில்லை. (5)

(5) கார்யாதிகரணம்

கார்யம் பாதரி: அஸ்ய கத்யுபபத்தே: 4-3-6.

இந்த ஆதிவாஹிகர்கள் கார்யப்ரம்மமான நான்முகனையடைவிக்கின்றார்களா, பரப்ரம்மத்தையா என்பது விசாரம். பரப்ரம்மத்தை இவர்கள் உபாஸனம் செய்திருந்தால்

நான்முகனை யடைவிப்பது தகாது; ந்யாயத்திற்கு விருத்த மாகும். அதனால் நான்முகனை யுபாஸிப்பவர்களை நான்மு கலோகத்தை யிவர்கள் அடைவிக்கின்றார்களா என்றே விசாரிக்கப்படுகிறது. அதனால் மற்றொரு பக்ஷம் ப்ரம்மத்தை உபாஸிக்கின்றவர்களை ப்ரம்மத்தை அடைய வழி நடத்துகி றார்களா என்பதாம். இத்துடன் பஞ்சாக்னி வித்யை யனுஷ் டித்தவனை இவர்கள் அர்ச்சிராதி மார்க்கத்தால் அழைத்துச் செல்வதும் சொல்லப்பட்டிருப்பதால் அதையும் விசாரிக்க வேண்டும். நான்முகனையுபாஸிப்பவரை நான்முகனை யடை விக்கின்றார்களா, பரப்ரம்மத்தை யுபாஸிப்பவரை பரப்ரம் மத்தை யடைவிக்கின்றார்களா, பரப்ரம்மோபாஸகர், பஞ் சாக்னி வித்யாநிஷ்டர் எல்லோரையும் பரப்ம்மத்தையடை விக்கின்றார்களா என்று மூன்று பக்ஷங்களாம், முதற்பக்ஷம் பாதரியினுடையது. இரண்டாவது ஜைமிநியினுடையது, மூன்றாவது ஸித்தாந்தியான பாதராயணருடையது. முதற் பக்ஷத்திற்கு 5 ஸூத்ரங்கள்; இரண்டாம் பக்ஷத்திற்கு 3 ஸூத்திரங்கள்; மூன்றாம் பக்ஷத்திற்கு 2 ஸூத்திரங்கள்.

பாதரி சொல்வதாவது. பரப்ரம்மம் எங்குமிருப்பதால் அதை யடைவதற்காக ஓரிடம் புகவேண்டியதில்லையாகை யால் அர்ச்சிராதிகதி கூடுவதற்காக கார்யப்ரம்மமான நான்முகனை யுபாஸிப்பாரை அவனிடம் அடைவிக்கின்றன ரென்றே கொள்ளவேண்டும். (6)

மேலும்—**விசேஷிதத்வாத் ச.** 4-3-7.

'ப்ரம்மலோகங்களையடைவிக்கின்றான்', 'ப்ரஜாபதியின் ஸபையை அரண்மனையைப் புகுகிறேன்' என்ற வாக்யங்கள் நான்முகனை யுபாஸிப்பவனை யடைவிப்பதை யறிவிக்கிறது. பரப்ரம்மத்திற்கு வெகு லோகங்கள் ஏது? (7)

**ஸாமீப்யாத் து தத்வ்யபதேச:** 4-3-8.

ப்ரம்மாவை ப்ரம்மமென்று சொல்லக்கூடுமோ என் னில், ப்ரம்மம் ப்ரம்மாவை முதன் முதல் ஸ்ருஷ்டித்ததால் நெருங்கியிருப்பது பற்றி அச் சொல்லைச் சொன்னதாம். (8)

**கார்யாத்யயே ததத்யக்ஷேண ஸஹ அத: பரம் அபிதாநாத்.** 4-3-9.

நான்முகனை யடைந்தவரை, மீண்டும் திரும்பமாட்டா ரென்னலாமோ வென்னில்—பிரமனின் லோகம் கார்யமான தாலே அழிவுறுவதே. அதன் அழிவின்போது அதற்கு அதி காரியான பிரமனோடுகூட அவனுக்கு மேலான பரப்ரம் மத்தை யுபாஸித்துப் பெறுவர். அவருடைய ஆயுள் முடிவில் மோக்ஷம் பெறுவது வேதத்திலே ஓதப்பட்டதே. (9)

**ஸ்ம்ருதே: ச.** 4–3–10.

மஹாப்ரளயம் வந்தபோது. பிரமனோடு அவனது ஆயுள் முடிவில் பரமபதம் பெறுகின்றனர் என்றது ஸ்ம்ருதி.

ஜைமிநிபக்ஷம். பரம் ஜைமிநி: முக்யத்வாத். 4-3-11.

'ப்ரஹ்ம' என்கிற சொல்லுக்கு பரப்ரம்மமே நேர்ப் பொருளானதால் அதனை யுபாஸிப்பவரையே இவர்கள் அடைவிக்கின்றனர். (ப்ரம்மம் எங்கும் இருந்தாலும் இவன் மோக்ஷம் பெறுவது அவ்வழியால் அங்குப் போனல்தா னென்று சாஸ்திரம் சொல்லுகிறபடி கொள்ளவேண்டும்). பரப்ரம்மத்திற்குப் பல வுலகங்கள் உள்ளனவோ என்ன வேண்டா. இருக்கலாம்; ஒரு லோகத்தையே ப்ரசம்ஸையாக அவ்வாறு கூறலாம்; ப்ரம்மமே அனுபவிக்கப்படுகின்றபடி யால் லோகமெனப்படலாமென்க. (11)

தர்சநாத் ச. 4-3-12.

இவ்வுடலினின்று வெளிப்பட்டு பரஞ்சோதியைப் பெற்றுத் தன் இயற்கை யுருவைப்பெறுகிருனென்றங்கு சென்றவனுக்கே ப்ரம்மப்ராப்தியைச் சொல்லுகிறதே. (12)

ந ச கார்யே ப்ரத்யபிஸந்தி: 4-3-13.

ப்ரஜாபதியின் ஸபை யரண்மனையை யடைகிறேனென் றவை நான்முகனிடத்தைப் பற்றியல்ல, 'உடலை யுதறி விட்டு ஸ்ருஷ்டிக்கப்படாத ப்ரம்மலோகம் போகிறேனென்று அகார்யலோகத்தையே ஓதியிருக்கின்றதே, ப்ராம்மண க்ஷத் ரியவைச்யரான வேதமோதுகின்றவரெல்லோருக்கும் புக ழான பரமாத்மாவாகத் தான்' ஆகிறதாகவும் மேலே மொழி கிறது. கார்யாத்ய ஸூத்ரத்திலெடுத்த வேதவாக்கியத்தி லும் ப்ரம்மலோகபதம் நான்முகலோகத்தைச் சொல்வ தன்று தன்னுடைய சரமசரீரத்தின் முடிவிலே பரப்ரம்ம லோகத்திலே போய் முக்தி பெறுகிருனென்றதே அதன் பொருளாம். (13)

ஸித்தாந்தம்—அப்ரதீகாலம்பநாந் நயதி இதி

பாதராயண: உபயதா ச தோஷாத் தத்க்ரது: ச. 4-3-14.

பாதராயண பக்ஷமென்னவென்னில், நேராக ப்ரம்மத் தையே யுபாஸிக்கின்றவர்களையும் பஞ்சாக்னிவித்யாநிஷ் டனையும் ஆதிவாஹிகத்திரள் அடைவிக்கின்றதென்பதாம். இருவரும் அப்ரதீகாலம்பனர். ப்ரதீகாலம்பனராவர் ப்ரதீ கத்தை உபாஸிப்பவர். ப்ரதீகமாவது சேதநாசேதந ப்ரபஞ் சம் மட்டும். சேதனத்தையும் அசேதனத்தையும் மட்டும் உபாஸித்தாலும், அவற்றை பிரம்மமாக ஏறிட்டுப் பொய் யுபாஸனம் செய்தாலும் ப்ரதீகோபாஸனமாம். பரப்ரம்மோ பாஸகர் அத்தகையரல்லரென்பது ஸ்பஷ்டம். பஞ்சாக்னி வித்யாநிஷ்டர் சித்தை யுபாஸிப்பவராலுைம் ப்ரம்மத்தை ஆத்மாகவுடையது அது என்று அதன் உண்மையை யறிந்து உபாஸிப்பவரானபடியால் அவர் செய்யுமுபாஸ

னத்தில் ப்ரம்மம் செவ்வனே புகுந்திருப்பதாம். இவ்வாறு கொள்ளாத பாதரி ஜைமினி இருவர்பக்ஷத்திலும் தோஷமுண்டு. பஞ்சாக்னி வித்யாநிஷ்டருக்கு அர்ச்சிராதியைச் சொல்வதை விடலாகாது. பிரம்மத்தையும் சேர்த்து உபாஸிப்பதால் தத்க்ரது நியாயமும் இணைந்தது. (14)

**விசேஷம் ச தர்சயதி. 4-3-15.**

பூமவித்யிலே, ப்ரம்மமாக ஏறிட்டு அசேதனங்களை யுபாஸிப்பதும் ஜீவனை யுபாஸிப்பதும் அற்ப பலனையே தருமென்று விரித்து முரைத்துளது. (15)

4-ம் அத்தியாயம் 3-ம் பாதம் முற்றிற்று.

---

## நான்காம் அத்தியாம் நான்காம் பாதம்

அர்ச்சிராதிமார்க்கத்தினுல் பரப்ரம்மத்தை யடைந்தவன் பெறும் பேற்றைப் பணிப்பது இப்பாதம்.

*(1) ஸம்பத்யாவிர்பாவாதிகரணம்*

**ஸம்பத்ய ஆவிர்ப்பாவ; ஸ்வேநசப்தாத். 4-4-1.**

இவ்வுடலினின்று வெளிக்கிளம்பி பரஞ்சோதியை யணுகித் தனரூபத்தைப்பெறுகிருன் ஜீவனென்றது. அந்தரூபம் புதியதாக உண்டாகின்றதா, முன் இருப்பதேயா என்று ஸந்தேஹம் ஏற்படப் பூர்வபக்ஷி புதிய ரூபமேயென்கிருன். முன் இருக்கும் ஸ்வரூபமேயாகில் அது உறங்கும்போதுமிருப்பதொன்ருகையால் ஆனந்தானுபவமில்லாத நிலை மோக்ஷமென்றதாம். எப்போதுமுள்ள ஸ்வரூபம் பெறப்படாததொன்றன்ருகையாலே முயற்சியே வீணும். வேதமும் அபிநிஷ்பத்யதே என்கிறது. உண்டாகிறதென்று அதற்குப் பொருள். புதிய ரூபமென்னவெனில், தேவதேஹத்திற்கு மேம்பட்ட தேஹமும் அதன் மூலமான ஆனந்தானுபவமுமென்றவாறு. ஸித்தாந்தமாவது, வேதத்தில் 'ஸ்வேநரூபேண' என்று 'தனதான' என்கிற சொல் புதிய ரூபம் தனக்குண்டானது தனதேயாகையாலே வீணுமாகையாலே முன் இருந்த இயற்கை யுருவேயது. அது முன்னமே யிருந்தாலும் அப்ரகாசமாயிருந்தது—இப்போது ப்ராகாசிக்கின்றது. அத்தோற்றமே அபிநிஷ்பத்யதே என்னப்படுகிறது. மணியின் ஒளி அழுக்கினுல் மறைக்கப்பட்டதுபோல் பரமாத்ம ஸங்கல்பத்தால் அந்த ரூபம் மறைக்கப்பட்டிருப்பது ஸம்ஸார தசையில். (1)

ஸம்ஸார தசையில்கூட, 'நான்' என்று ஸ்வரூபத்திற்குத் தோற்றமிருப்பதாலே அவ்வளவேயாகில் இவன் பத்தனேயாவான் என்ன வேண்டா—

**முக்த: ப்ரதிஜ்ஞாநாத்.** **4-4-2.**

ஸம்ஸாரதசையிலுள்ளபடி ஆத்மாவைச் சொன்னதாக நினைத்து த்ருப்திபெறவாத இந்திரனைப் பார்த்து, மீண்டும் விவரிக்கிறேன் என்று ப்ரதிஜ்ஞை செய்து ப்ரஜாபதியானவர் விழிப்பு, சொப்பனம், உறக்கமென்ற நிலைகளைக் கடந்த நிலையை யுபதேசிப்பதால் முக்தனேயாவான் இவன். நானென்கிற ஸ்வரூபத்திற்கு ஆவிர்ப்பாவமன்று இங்குச் சொல்லப்படுகிறது. பின் எதென்னில், அபஹதபாப்மத்வம் முதலான தர்மங்களுக்கு. இந்த தர்மங்கள் அநாதியாயுள்ளனவே. இவற்றையே ஸ்வேநரூபேண என்றது. இவற்றின் ஆவிர்ப்பாவமே ஸ்வரூபாவிர்ப்பாவம். (2)

பாபமில்லை, மூப்பில்லை யென்றவாறான குணங்களின் தோற்றத்தினால் என்ன புருஷார்த்தம் பெற்றதாகிறது? ஆகையால் ஆனந்தானுபவம் செய்யக்கூடுமாறு அழகிய தேஹாதிகளைப் பெறவேண்டும். ஆக அவற்றின் உற்பத்தியே ஆவிர்ப்பாவம் என்னவேண்டா—

**ஆத்மா ப்ரகரணாத்.** **4-4-3.**

மோக்ஷத்தில் தேஹமிருக்கவேண்டுமென்று நிபந்தனை செய்யாமல் ஆத்ம ஸ்வரூபத்தை மட்டும் வர்ணிப்பதாலே சுத்த ஆத்ம ஸ்வரூபமே பெறப்படும். அதுவே ஜ்ஞாநாந்த ஸ்வரூபமானதாலே அதுவே புருஷார்த்தமாகுமே. அபஹதபாப்மத்வாதிகளும் புருஷார்த்தமாகும். அவற்றினால் பல பலன்களை யங்கு இவன் பெறுவதாலும்,அவையே அனுகூலமாகவே தோற்றுவதாலும். ஆக ஆத்மா சாஸ்திரங்களில் எவ்வெவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறானோ அவ்வவ்வாறு அவனே புருஷார்த்தமாகிறான். (3)

(2) அவிபாகாதிகரணம்

**அவிபாகேந த்ருஷ்டத்வாத்.** **4-4-4.**

தன்னை யனுபவிக்கும் முக்தன் தன்னைப் பரமாத்மாவிற்கு விசேஷணமா யொன்றியிருப்பதாக அனுபவிக்கிறானா, இல்லையா என்பது விசாரம். பரமாத்மாவுடன் பரமஸாம்யத்தை யடைந்தவன் இவன் அவனோடுகூட அவனது குணங்களையும் ஸமனாயிருந்து அனுபவிக்கின்றவன் அவனுக்கு விசேஷணமாயிருக்க மாட்டிலன் என்பது பூர்வபக்ஷம். பரமாத்மா எப்போதும் அந்தர்யாமியானபடியாவர் அவனுக்கு இவன் விசேஷணமாகவே யிருப்பதாகவே சாஸ்திரம் சொல்லுவதாலும் இவனும் அவ்வாறே உபாஸனம் செய்ததாலும் அவனைவிட்டுப் பிரியாதபடியே தன்னையனுபவிப்பான். விசேஷ்ய விசேஷணங்களாயிருப்பினும் ஸாம்யமும் இருக்கலாம்; சூரியனும் அவனொளியும் தேஜஸ்ஸாயி

னும் ஒன்றில் மற்றொன்று ஒன்றியேயிருப்பது. (4)

(3) ப்ராஹ்மாதிகரணம்

ப்ராஹ்மேண ஜைமிநி: உபந்யாஸாதிப்ய: 4–4–5.

அபஹதபாப்மத்வாதிதர்மங்களை ஸ்தாபிக்க இவ்வதிகரணம். ஆவிர்பவிக்கும் ரூபமாவதென்னவென்று விசாரிக்க வேண்டும். அபஹதபாப்மத்வாதிகுணங்களை நேராகவே ஓதியிருப்பதாலும் அவற்றின் கார்யங்களான ஸர்வலோக ஸஞ்சாராதிகளைச் சொல்வதாலும் பரப்ரஹ்மத்தின் குணங்களாகிற அபஹதபாப்மத்வம் முதலான எட்டுக் குணங்களாம் ப்ராஹ்மரூபமே அது. அதனுடன் ஆவிர்ப்பவிக்கிறனென்றது ஜைமினியின் பக்ஷம். (5)

சிதிதந்மாத்ரேண ததாத்மகத்வாத் இதி ஔடுலோமி: 4-4-6.

ஜ்ஞானமாத்ர ஸ்வரூபனாகவே ஆவிர்ப்பவிக்கிறன், உப்புக்கட்டி உள்ளும் புறமுமெல்லாம் ரஸமயமாயிருக்குமா போலே ஜீவனும் ஜ்ஞானமயமென்றே ஓதுவதாலென்பது ஔடுலோமியின் பக்ஷம். (6)

ஏவம் அபி உபந்யாஸாத் பூர்வபாவாத்அவிரோதம் பாதராயண: 4-4-7.

ஜ்ஞானமயனானாலும் கீழ்ச்சொன்ன காரணத்தினால் ப்ராஹ்மரூபமுமுண்டு, விரோதமில்லையே யென்றார் பாதராயணர். ஜ்ஞானமயனே என்றதாலே ஆத்மாவில் அஜ்ஞானமான அம்சமில்லையென்பதுமட்டும் தோற்றுமேயல்லது வேறு குணங்களில்லை யென்பது கிடைக்காதென்றபடி (7)

(4) ஸங்கல்ப்பாதிகரணம்

ஸங்கல்ப்பாத் ஏவ தச்ச்ருதே: 4-4-8.

முக்தன் வேண்டும்போது ஸங்கல்ப்பமாத்ரத்தினாலே, தாய், தந்தை, உடன்பிறந்தார் எல்லாம் பெறுகிறனென்றவிடத்தில் விசாரம். விஜ்ஞானமயனே என்று சொன்னாலும் ப்ராஹ்மரூபங்களான அபஹதபாப்மத்வாதிகளுக்கு விலக்கில்லை என்று முன் சொன்னதுபோல், 'ஸங்கல்பத்தினாலேயே' எனவிருந்தாலும் தாய் முதலானாரை ஸ்ருஷ்டிக்க வேறு துணைகளுக்கு விலக்கில்லை என்றது பூர்வபக்ஷம். ஸித்தாந்தம் ஸர்வேச்வரனைப்போலே மேன்மைபெற்றவனுக்கு வேறொன்றின் வேண்டுகையில்லை. (8)

அத ஏவ ச அநந்யாதிபதி: 4-4-9.

இப்படித் தன் ஸங்கல்ப்பம் தவிர புண்யம் பாபமென்கிற வினையைத் தனக்கு ஸஹாயமாக வேண்டுகிறவனல்லனாகையாலே இவனை ஸ்வராட் என்பதாக, வேறு அதிபதியில்லாதவனாகச் சொல்லுகிறது. (9)

(5) அபாவாதிகரணம்

அபாவம் பாதரி: ஆஹ ஹி ஏவம். 4-4-10.

முக்தனுக்கு சரீரேந்திரியங்கள் எப்போதுமில்லையா, இருந்தே தீருமா. அவன் ஸங்கல்ப்பப்படி எப்படி வேண்டு மானாலுமா என்பது விசாரம். 'சரீரத்துடனிருப்பவனுக்கு ஸுகதுக்கங்களைவிட்டிருத்தல் இல்லை சரீரமில்லாதவனுக்கு அவையில்லை' என்கிற ப்ரமாணத்தைக் கொண்டு எப்பொழுதுமில்லையென்கிறார் பாதரியென்பவர். (10)

**பாவம் ஜைமிநி: விகல்ப்பாமநநாத். 4-4-11.**

முக்தன் ஒன்றாய் இரண்டாய்ப் பலவாயிருக்கிறானென் கிறது வேதம். அவயவமற்ற அணுவான ஜீவனைப் பல துண்டுகளாக்க முடியாதாகையாலே எப்போது மொருவனாகவேயுள்ள ஒவ்வொரு முக்தனும் பலவாகை பல உடல்களைக் கொள்வதாலென்றே சொல்லவேண்டும். இப்படிப் பலவாரு யிருப்பதாக ஓதுவதால் முக்தனுக்கு சரீரமுண்டெப்பொழுது மென்கிறார் ஜைமினியென்பவர். (11)

**த்வாதசாஹவத் உபயவிதம் பாதராயண: அத: 4-4-12.**

தர்ம்பூதஜ்ஞானத்தினாலேயே பரப்ரம்மலோகத்தில் எல்லா வற்றையும் கண்டுகளிக்கிறானென்றும், முன்சொன்னவாறும் இருவிதமான ப்ரமாணங்களிருப்பதாலே முக்தன் சரீர மில்லாதவனுமாவான், வேண்டும்போது வேண்டினபடி சரீரமுடையவனுமாவான். த்வாதசாஹம்போல். த்வாதசாஹம்என்றது 12 நாள் செய்யப்படும் ஸோமயாக விசேஷம். அது அஹீநமாயும் ஸத்ரமாயுமிருவிதமாயிருக்கும். பல பேர் யஜமானராகிறபோது ஸத்ரம். அப்படியும் ஸம்ருத்தி என் கிற பலனுக்காக விதிக்கப்பட்டது. ஒரு யஜமானன் செய்யும் போது அஹீனம். அதுவும் ப்ரஜையென்கிற பலனுக்காக ஓதப்பெற்றது என்கிறது ஸித்தாந்தம். (12)

**தந்வபாவே ஸந்த்யவத் உபபத்தே: 4-4-13**

சரீரம் முதலான போக்யபோகோபகரணங்களைத் தனக்குத் தானே ஸ்ருஷ்டிக்காமலும் சொப்பனத்திற்போலே ஈச்வரனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட வஸ்துக்களாலே போகமனு பவிப்பான்; அதுவும் கூடுமாகையால். (13)

**பாவே ஜாக்ரத்வத். 4-4-14.**

தன்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட வஸ்துக்கள் இருக்கும் போது விழித்துக்கொண்டிருக்கும்போதுபோல் போகங்களை யனுபவிப்பதாம். ஈச்வரன் தசரதன் வஸுதேவன் முதலானார்க்குக் குமாரனாக அவதரித்து பந்துக்களை ஏற்படுத்திக் கொள்வதுபோல் இவனும் ஸத்யஸங்கல்ப்பனானபடியாலே பரமபுருஷனுடைய லீலைக்குட்பட்ட பந்துக்களைத் தானே தோன்றி ஏற்படுத்திக்கொள்வான். (14)

ஆத்மா அணுவென்று முன்னமே (3. 3.) ஸ்தாபிக்கப் பட்டதாகையாலே ஒரே காலத்தில் பல சரீரங்களில் இருக்க மாட்டிலனுகையால் பல சரீரங்களெங்ஙனமெனில்—

**ப்ரதீபவத் ஆவேச: ததா ஹி தர்சயதி. 4-4-15.**

தீபமென்பது ஓரிடத்திலிருந்தாலும் தனது ஒளியினுல் எங்கும் பரவியிருப்பதுபோல், அணுவான ஆத்மா ஒரு சரீரத்திலிருந்துகொண்டே பல சரீரங்களில் தனது தர்மபூத ஞானத்தாலே தனதாக அத்தை அபிமானிக்கும்படி பரவும். ஒரே சரீரத்திலும் ஹ்ருதயத்தினுள்மட்டுமிருந்தாலும் முழு சரீரத்திலும் அவ்வாறுதானே பரவி தனதென்ற அபிமானம் ஆத்மா பெற்றிருப்பது. 'அணுவானவன் இவ்வாறே பரந் திருக்கவல்லன்' என்றும் வேதம் ஓதுகிறது. (15)

'ப்ராஜ்ஞ(ஸர்வஜ்ஞ)னை பரத்மாவினுல் தழுவப்பட்டு உள் வெளி வஸ்துவொன்று மறிகிறனல்லன்' என்று ப்ரம்ம ப்ராப்தியுள்ளவனுக்கு அறிவேயில்லையென்பது சொல்லப் பட்டிருக்க ஜ்ஞானவிகாஸம் கூடுமோ என்னவேண்டா—

**ஸ்வாப்யய ஸம்பத்யோ: அந்யதராபேக்ஷம் ஆவிஷ்க்ருதம் ஹி. 4-4-16.**

உறக்கம் இறப்பு இந்த இரண்டிலொரு நிலையைப் பற்றி யவ்வாறு சொன்னதாம். வேதத்திலே நன்கு விளக்கப் பட்டதே இது. 'நான் இன்னுனென்று அறிந்தானல்லன், வெளிப்ராணிகளையும்அறிந்தானல்லன்,அறிவின்மையையே யடைகிருன்' என்று உறக்கத்திலும், இந்த பஞ்சபூதங்க ளின்று பிறந்து அவை யழிவதைப் பின்பற்றி அழிகிரு னென்று மரணத்திலும், 'இந்த ஆத்மா ஞானக்கண்ணுலே ப்ரம்மத்தைச் சார்ந்த எல்லாவற்றையும் கண்டு களிக்கிருன்', 'எல்லாம்கண்டு எல்லாம்அனுபவிக்கிருன்' என்று மோக்ஷத் திலும் ஆத்மாவின் நிலை வகுத்துறைக்கப்பட்டதே. (16)

(6) ஜகத்வ்யாபாரவர்ஜாதிகரணம்

**ஜகத்வ்யாபாரவர்ஜம் ப்ரகரணத் அஸந்நிஹிதத்வாத் ச. 4-4-17.**

'ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப்ப:' என்றும், 'பரமம் ஸாம் யம் உபைதி' என்றும் சொல்லப்பட்டதால் உலகின் ஆக்கல், அளித்தல் என்ற வியாபாரங்களிலும் பரமாத்மா வுடன் ஸாம்யமென்றது பூர்வபக்ஷம்—ஸித்தாந்தமாவது— ஸ்ருஷ்டிப்ரகரணமெல்லாம் ப்ரம்மத்தைப் பற்றியிருப்பதா லும் அந்த இடங்களுக்கருகில்கூட முக்தன் கூறப்படாததா லும் பரமஸாம்யமென்றது ஜகத்வியாபாரம் நீங்கலாகவே.(17)

**ப்ரத்யக்ஷோபதேசாத் இதி சேத் ந ஆதிகாரிகமண்டல ஸ்த்தோக்தே: 4-4-18.**

ப்ரயக்ஷமான வேதத்தில் எங்கும் காமசாரம் (காமரூபி யாக ஸஞ்சாரம்) கூறப்பட்டிருப்பதால் ஜகத்வியாபார முண்டே என்ன வேண்டா. பரமாத்மாவினுலதிகாரமளிக் கப்பெற்ற ப்ரம்மாதிகளுக்காக ஏற்கனவேயுள்ள உலகங் களில் முக்தனுக்கு போகங்களைச் சொன்னதேயன்றி இவன் ஸ்ருஷ்டிப்பதோ நியமிப்பதோ சொல்லப்படவில்லையே. (18)

ஈனமான லோகங்களிலே முக்தனுக்கு போகமென் என்னவேண்டா.

**விகாராவர்த்தி ச ததா ஹி ஸ்த்திதிம் ஆஹ. 4-4-19.**

பிறப்பு இறப்பு முதலான விகாரங்களுக்குட்படாத ப்ரம்மமும் அதற்குள்ளாக குணங்களும் விபூதிகளும் அனுப விக்கப்படுகின்றன. பரப்ரம்மத்தின் அனுபவத்திலே நிலைத் திருப்பதை வேதம் சொல்லுகிறதே. ஆகையால் விபூதியு டன் அந்த ஆனந்தமய ப்ரம்மத்தை யனுபவிக்கவே காம ஸஞ்சாரம்; ஸ்வதந்த்ரமாய் ஒன்றின் அனுபவமுமில்லை. (19)

**தர்சயத: ச ஏவம் ப்ரத்யக்ஷாநுமாநே. 4-4-20.**

ஸ்ருஷ்டி முதலான வியாபாரங்கள் பரப்ரம்மத்திற்கே; ப்ரக்ருதி முதலான வஸ்துக்களெல்லாம் ப்ரமத்திற்கே உட லாம், இத்தகைய ஆத்மாவும் ப்ரம்மமும் பரஸ்பரம் மிக ப்ரிய மானவர்கள். 'வாஸுதேவனே நமக்கு வேண்டுவனவெல் லாம் என்ற உறுதியுடையவன் கிடைப்பதரிது'. 'அவனையே பக்திபண்ணிதான் ஆத்மஞானம், கைவல்யம், ஐச்வரியம், மோக்ஷமெல்லாம் பெறப்படும்' என்றவாறு ப்ரம்மம் ஜீவன் இவர்களின் வேறுபாடும் ப்ரம்மானுபவமே எப்போதும் ப்ர தானமென்பதும் வேதத்திலும் ஸ்ம்ருதியிலும் ஸ்பஷ்டமாம்.

**போகமாத்ரஸாம்யலிங்காத் ச. 4-4-21.**

'ப்ரம்மத்துடன் ஸர்வகல்யாணகுணங்களையுமனுபவிக் கிறான்' என்று ஆனந்தானுபவம் மட்டிலே ஸாம்யமென்ப தற்கு ஸாதகமு மிருக்குமே. (21)

இப்படி பரமாத்மாவுக்கிவன் பரதந்த்ரனுனுல், ஒருக்கால் அவன் இவனை இவ்வுலகிலும் வீழ்த்தலாமென்ன வேண்டா.

**அநாவ்ர்த்தி: சப்தாத் அநாவ்ர்த்தி: சப்தாத். 4-4-22.**

ப்ரம்மம், அது காரணமாதல், ஸர்வத்தையும் நியமித்தல் போன்ற மற்ற விஷயங்கள் போலே முக்தன் மீண்டும் திரும்புவதில்லையென்றதும் வேதம் ஓதினதே. அவனும் அவ்வாறே கீதையிலும் சொன்னன். அவனை விடாமலி ருக்க இவன் விரும்பியதுபோல் அவனும் விரும்பியிருப்ப வன். ஆகையால் சாச்வதமான பூர்ணனந்தமே. (22)

ப்ரம்மஸூத்திர வேதாந்ததீப மொழிபெயர்ப்பு முற்றிற்று.

சுபமஸ்து.

# VĒDĀNTA DEEPA

## SECOND CHAPTER; PĀDA I

In the previous Adhyaaya (chapter), it was demonstrated that V*e*daanta declares Brahman to be the cosmic cause of the cosmos. Now is taken up for consideration the topic whether there is any thing in other (Sm*r*tis) philosophies or any other argument against it.

This Paada refutes the theory that Moolaprak*r*ti is the world-Cause which theory is sought to be supported by references to some Sm*r*tis and by means of logic or inference.

### (1) Sm*r*tyadhikara*n*a

2-1-1 स्मृत्यनवकाशदोषप्रसङ्ग इति चेन्नान्यस्मृत्यनवकाशदोषप्रसङ्गात्।

*Smrtyanavakaasa-Dosha-Prasanga Iti chet Na, Anyasmrti-Anavakaasa-Dosha-Prasangaat.*

If it is argued that this will result in the charge of ignoring the Sm*r*ti (of Kapila), No! (If his is accepted), it will result in the charge of discarding other Sm*r*ties.

The question is whether the proposition that V*e*daantas speak of the World-Cause as Brahman, a Being, different and distinct from all sentient and non-sentient Beings, and not affected by any imperfections, and possessed of numberless auspicious qualities can be shaken (or disproved) because of its conflict with the Kapila-Sm*r*ti.

The opponent says, 'Yes. True, when there is a conflict between a Sm*r*ti and Sruti, the sm*r*ti is to be ignored and Sruti is to be accepted as authoritative; and this is the accepted doctrine as laid down in Poorva Meem*aa*ms*aa*. But says he, "V*e*daanta cannot easily be understood by persons without wide study and acute intellect and without the help of Sm*r*tis,

(We have studied but little and are of dull intelligence.) Of the Smrtis, Kapila Smrti is specially intended to expound the Tatva or Truth while the other Smrtis are intended only to treat of Dharma (daily conduct, etc.). Therefore, "the Vedaanta which seeks to expound the Truth, must be understood only in the light of the Kapila Smrti which says that only Moolaprakrti is the Cause of the World."

Reply:- True, Upabrmhanas or Smrtis are useful to understand the meaning of the Vedaanta. Other Smrtis, such as, those of Manu, Praasara, Yaagnavalkya, expound the same Truth in the way explained in the first or previous Adhyaaya and these are opposed to the Kapila Smrti. Hence, to accept the Kapila Smrti, will result in setting aside or ignoring so many other Smrtis.

As for the argument that Kapila Smrti expounds the Truth while the others treat of Dharmas only, the reply is that the ultimate object of treatment of Dharmas in these Smrtis is to enjoin Dharma as a means of the worship of the Highest Brahman, and therefore the said Braman is also the subject of the exposition. This point is specifically referred to in the srutis and Smrtis also.

For example (1) "Sacrifices, and charitable deeds, like building temples, etc., of the past, present, etc., He (the Bhagavan) accepts as being a worship to Him. He alone is the Fire (Agni), the Wind (Vaayu), the Sun (Soorya) and the Moon (Chandramaa)" Any worship to any of them is worship to Him. (Tattireeya). Again (2) From Vishnu Puraana: "Oh Achyuta! the pervader of all gods! you are worshipped by sacrifices". Thus, it is to be concluded that all Dharmas constitute but forms of worship of Paramaatman. [1]

But the opponent goes on to argue, Kapila is (an exalted) person endowed with powers to see things beyond the senses, yet he did not perceive Vedaanta as

